# காந்தீயப் பெருந்தலைவர்
# காமராசர்

டாக்டர் ஜாண் ஆசீர்வாதம்





உலகத் தமிழாராய்ச்சி நிறுவன

# காந்தீயப் பெருந்தலைவர்
## காமராசர்

டாக்டர் இ. ஜாண் ஆசீர்வாதம்
முதுநிலை விரிவுரையாளர், தமிழ்த்துறை
சென்னைக் கிறித்தவக் கல்லூரி
தாம்பரம், சென்னை.



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
டி.டி.டி.ஐ. (அஞ்சல்), தரமணி, சென்னை-600 113.

பெருந்தலைவர் காமராசர்
அறக்கட்டளைச் சொற்பொழிவு—1
(11, 12-7-1990)

Perunthalaivar Kamarajar Endowment Lecture No. 1
Endowment Lectures—Publication No. 24

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title | : | Kāntīyap Peruntalaivar Kāmarācar. |
| Author | : | Dr. John Asirvatham<br>Senior Lecturer,<br>Dept. of Tamil,<br>Madras Christian College<br>Tambaram, Madras-600 059 |
| Publishers & Copy right | : | International Institute of Tamil Studies,<br>T.T.T.I (Post), Taramani<br>Madras-600 113 |
| Publication No. | : | 154 |
| Language | : | Tamil |
| Date of Publication | : | March 1991 |
| Edition | : | First |
| Paper used | : | 15.2kg. Ballarpur |
| Size | : | 21×14 cms. |
| Printing types | : | 10 pt. |
| Number of Copies | : | 1200 |
| Number of Pages | : | viii+133 |
| Price | : | Rs. 20 |
| Printers | : | Kavinkalai Achagam<br>Kandhasami Nagar<br>Palavakkam, Madras-600 041<br>Phone : 417141 |
| Binding | : | Board Binding |
| Artist | : | SATHYA |
| Subject | : | A Biography of Kamarajar |


* அறக்கட்டளைச் சொற்பொழிவாளர் கருத்துகளுக்கு நிறுவனம் பொறுப்பல்ல.

# பதிப்புரை

ஒல்லும் வகையெல்லாம் தமிழ்ப்பணியில் தலைநிற்கும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், நிறுவனத்திற்கு வெளியே தமிழாய்வில் ஈடுபட்டுள்ள நல்லறிஞரின் தமிழறிவையும் பயன்கொள விழைந்தது. அவ்வெண்ணத்தின் செயற் பாடாக 1983-1984இல், அன்றைய இயக்குநர் டாக்டர் ச. வே. சுப்பிரமணியன் அவர்கள் அரிதின் முயன்று 13 அறக் கட்டளைகளை நிறுவினார். அவை இன்று 15 ஆகப் பெருகி யுள்ளன. அறக்கட்டளைச் சொற்பொழிவன்றே அச்சொற் பொழிவு நூலாகவும் வெளிவர வேண்டும் என்ற வேணவா காரணமாகக் குறுகிய காலத்துள் (1986 ஆகஸ்ட் வரை) 15 அறக்கட்டளைச் சொற்பொழிவுகளை நூலாக்கத்துடன் நிறைவேற்றினார். இலக்கியம், மொழியியல், மானுடவியல், சமயம் எனப் பல்துறை சார்ந்த சிறந்த ஆய்வு நூல்களைத் தமிழுலகம் இதனால் பெற்றது.

தொடர்ந்த காலத்தில் 2 அறக்கட்டளைச் சொற்பொழிவு களுடன் இப்பணி முடக்கப்பட்டது.

அறக்கட்டளைகள் நிறுவப்பட்டதன் நோக்கம் தடையின்றி நிறைவேறவும், எதிர் நோக்கிய பயனைத் தமிழுலகு அடையவும் 1989 ஆகஸ்டில் இயக்குநர் பொறுப்பேற்ற டாக்டர் சிலம்பொலி சு. செல்லப்பன் அவர்கள் முயன்றார். தொடர்ந்து அறக் கட்டளைச் சொற்பொழிவுகள் நிகழ்த்தப்படுகின்றன. நூலாக் கமும் பெறுகின்றன.

1984இல் நிறுவப்பட்ட 'பெருந்தலைவர் காமராசர் அறக் கட்டளை'யின் சார்பில் சொற்பொழிவாற்றப் பலரையும் பன்முறை அணுகிய போதும் 1990 சூலையில் தான் முதற் சொற் பொழிவு நிகழ்த்த முடிந்தது. மிகக் குறுகிய காலத்தில், நிறுவனத்தின் அழைப்பினை ஏற்றுக்கொண்டு குறித்த காலத்தில் சிறப்புடன் சொற்பொழிவாற்றிய, சென்னைக் கிறித்தவக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் டாக்டர் ஜான் ஆசீர்வாதம் பாராட்டிற்குரியவர். தம் நாட்டுப்பற்றால், தொண்டால் 'பாரத ரத்னா'வாக உயர்ந்த, இந்திய விடுதலைக்குத் தமிழகம் வழங்கிய

வீரமறவர், கர்மவீரர் காமராசரின் வாழ்க்கை வரலாறாக இந் நூல் அமைகிறது. சங்க காலப் புரவலரின் பெருமையாகச் சங்கப் புலவர் தரும் பாராட்டுரைகளை ஏழைப்பங்காளர் காமராசரின் வாழ்வோடு பொருத்திக் காட்டிப் புதுநோக்கில் வரலாறு படைத்துள்ளார். இந்தியாவின் மிகச் சிறந்த அரசியல் வாதியாக, மனித நேய மாண்புடையவராக வாழ்ந்த திறம் விரித்துரைக்கப் பட்டுள்ளது. ஆய்வு நோக்கில் வரலாற்று நூல் படைத்துள்ள ஆசிரியருக்கு நிறுவனம் பாராட்டுதலுடன் நன்றியையும் தெரிவிக்கிறது.

நிறுவனத்தில் இவ்வறக்கட்டளை நிறுவிய மதுரை, நாடார் மகாஜன சங்கத்தாருக்கும், துணை நின்ற பிறருக்கும் நிறுவனம் நன்றி செலுத்துகிறது. இவ்வறக்கட்டளைச் சொற்பொழிவிற்கும், நூலாக்கத்திற்கும் துணைநின்ற, நிறுவன முன்னாள் இயக்குநர் டாக்டர் சிலம்பொலி சு. செல்லப்பன் அவர்கட்கும், இன்றைய இயக்குநர் (பொறுப்பு) டாக்டர் அன்னி தாமசு அவர்கட்கும் நன்றி. மெய்ப்பு திருத்திய நிறுவன ஆய்வாளர் செல்வி கோ. விருத சாரணிக்கும், அழகுற அச்சிட்டுத் தந்துள்ள கவின்கலை அச்சகத்தாருக்கும் நிறுவனத்தின் சார்பில் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

சென்னை,
12-3-91.

அன்புடன்,

ச. சிவகாமி

முதுநிலை ஆய்வாளர் &

அறக்கட்டளைச் சொற்பொழிவுப் பொறுப்பாளர்

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்.



## ஆசிரியர் அறிமுகம்

**பெயர் :** ஜாண் ஆசீர்வாதம், இ.

**பிறப்பு :** 40-4-1934

**ஊர் :** சிதம்பரனார் மாவட்டம்; நாசரேத்.

**பணி :** முதுநிலை விரிவுரையாளர்; தமிழ்த்துறை; சென்னைக் கிறித்துவக் கல்லூரி, தாம்பரம்.

**கல்வித் தகுதிகள் :** சென்னைப் பல்கலைக் கழகத்திலிருந்து 'சிலப்பதிகாரத்தில் கூத்துகள்' என்ற பொருளில் ஆய்விற்காக முனைவர் பட்டம்.

இந்தி மொழியில் விஷாரத், ப்ரவீண் ஆகிய பட்டங்கள்.

**சிறப்புப் பட்டங்கள் :** இந்தி-தமிழ் பாண்டித்யத்திற்காக அலகாபாத் சாகித்ய சம்மேளனம் வழங்கியுள்ள 'சாகித்யரத்ன' பட்டம்.

உலகக் கிறித்துத் தமிழ்ப் பேரவை வழங்கிய 'தமிழ்மாமணி' பட்டம்.

**இலக்கியப்பணி :**

1. ஆராய்ச்சி நூல்கள்

''தமிழிலக்கியத்தில் அறிவியல்''
கிறித்துவ இலக்கியச் சங்கம், சென்னை-3

''தமிழர் கூத்துகள்'
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-113

**2. மொழி பெயர்ப்பு நூல்கள்**

மத்தவிலாசம்
பகவதஜ்ஜுகம்
விவிலியத்தின் ஊடாக ஒரு பாதை

**3. கட்டுரைகள்**

இதுவரையில் பிரசுரமாகியுள்ள கட்டுரைகள் 150க்கும் மேல்.
கட்டுரைகளைப் பிரசுரித்துள்ள இதழ்கள் :
விஞ்ஞானச் சுடர் (கோவை) கலைக்கதிர் (கோவை)
கலைமகள் (சென்னை) மஞ்சரி (சென்னை)
குண்டூசி (சென்னை) யுவாபாரதி (சென்னை)
தக்ஷிண் (சென்னை) பூக்கூடை (சென்னை)
நண்பர் வட்டம் (சென்னை) தரு (மதுரை)

**4. கவிதைகள்**

கிறித்துவக் கல்லூரி நூற்றைம்பதந்தாதி (நூல்)
மங்களம் (வார ஏடு) நண்பர் வட்டம் (திங்கள் ஏடு) ஆகியவற்றில் புதுக்கவிதைகள்.

இதுவரையில் 15க்கும்மேல் மெல்லிசைப் பாடல்கள் சென்னை வானொலியில் ஒலிபரப்பப்பட்டுள்ளன.

**5. சிறுகதைகள்**

பிரசுரிக்கப்பட்டவை 5.
இதழ்கள் ; தினமலர் (வாரமலர்)மங்களம் (வார ஏடு)

**பிற பொறுப்புகள் :**

சென்னைக் கிறித்துவக் கல்லூரியின் தொடர் கல்வித் துறை நடத்திவரும் திரைப்பட நடிப்பு டிப்ளமோ பயிற்சி வகுப்புகளின் பொறுப்பாசிரியர்.

'அமுது' காலாண்டுக் கவிதை இதழின் ஆசிரியர் குழு உறுப்பினர்.

# முன்னுரை

தமிழிலக்கிய அறிஞர்கள் மீது மட்டுமல்லாமல் தமிழுக்கும் தமிழ் நாட்டிற்கும் தொண்டாற்றிய தேசத் தலைவர்கள் மீதும் அறக்கட்டளைகளை நிறுவி மிகச் சிறந்த இலக்கியத் தொண்டை இடையறாது புரிந்து வருகிறது உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம். அவ்வரிசையில் பெருந்தலைவர் காமராசர் குறித்த பொழிவை நிகழ்த்தவும்; அதனை நூல் வடிவில் வழங்கவுமான அரியதோர் வாய்ப்பு எனக்குக் கிட்டியமை நான்பெற்ற பேறு என்றே கருது கிறேன்.

இந்தியத் துணை கண்டத்தைப் பொறுத்த மட்டில் சென்ற அரை நூற்றாண்டுக் காலத்தைக் 'காமராசர் யுகம்' என்றே குறிப் பிடலாம். காமராசரின் வரலாறு தேசிய வரலாறாகும்.

பெருந்தலைவர் அவர்களைப்பற்றி இதற்குமுன் பல்வேறு நூல்கள் படைக்கப்பட்டு அவை மக்களிடையே உலவிவரும் நிலையில் இதனை முற்றிலும் புதியதோர் கோணத்தில் அமைத்திட வேண்டும் என்று உறுதிகொண்டு உருவாக்க நான் முயன்றுள்ளேன். அறக்கட்டளையின் கீழ் இரண்டு நாள்கள் நிகழ்த்திய சொற்பொழிவுகளின் சாரமாக இந்நூல் இரண்டு பெரும் பகுதிகளாக அமைகின்றது. முதற்பகுதி காமராசரின் அரசியல் வாழ்வைக் குறித்தது; மறுபகுதி அன்னாரின் மனித நேயம் பற்றியது.

இலட்சிய வாழ்க்கை என்பது என்ன என்பதை வாழ்ந்து காட்டியவர் காமராசர். அவர்தம் வரலாற்றுச் சுருக்கம் இது. வன்முறைகளும் வகுப்பு வாதங்களும் மிகுந்துவிட்ட இக்காலத்தில் இதுபோன்ற தன்னலமற்ற வாழ்வு வாழ்ந்த தலைவர்களின் வரலாறுகள் பல வெளிவரவேண்டியது தேவையுமாகிறது. ஆரோக்கியமான ஒரு தாக்கத்தை அவை சமுதாயத்தின்மீது ஏற்படுத்தும் என்று உறுதியாக நம்பலாம்.

இத்தகையதோர் சிறத்த பணிக்கு எனக்கு ஊக்கம் நல்கிய நிறுவனத்தின் அப்போதைய இயக்குநர் டாக்டர் சு. செல்லப்பன் அவர்களுக்கு எனது மனமார்ந்த நன்றியினைக் காணிக்கை யாக்குகிறேன். சொற்பொழிவு வழங்குங்காலத்திலும், நூல் வடிவம் தரும் வேளையும், சீரிய ஆலோசனைகளை எனக்கு வழங்கி உதவிய நிறுவனத்தின் முதுநிலை ஆய்வாளர் டாக்டர் ச. சிவகாமி அவர்களுக்கும் நன்றி. நிறுவனத்தின் பணியாளர்கள் ஒவ்வொருவருக்கும் என் நன்றி.

எல்லாவற்றிற்கும் மேலாக இவ்வறக்கட்டளை நிறுவனத்தில் நிறுவப்பட்டுச் செயல்பட முழு நிலையில் உறுதுணையாக இருந்து வருகிற நாடார் மகாஜன சங்கத்திற்கும் என் மனமார்ந்த நன்றி.

ஜான் ஆசீர்வாதம்

# உள்ளுறை

# காமராசர் வாழ்க்கை வரலாறு

கு. காமராஜ் என்ற குமாரசாமி நாடார் அவர்களின் புதல்வர் பெருந்தலைவர் அவர்களின் வரலாற்றில் இடம் பெற்ற சிற்றூர் விருதுநகர். பெருந்தலைவரின் பிறப்பிடம் என்ற பேற்றினைப் பெற்ற இவ்வூர் மிக முன்னர் நெல்லை மாவட்டத்தோடு இணைந் திருந்தது. பிறகு இராமநாதபுரம் மாவட்டத்தோடு இணைந் திருந்தது. தற்போது காமராசர் மாவட்டத்திலுள்ளது. விருது நகருக்கு முற்காலப் பெயர் 'விருதுப்பட்டி' என்பதாகும். அதன் அருகிலேயே சிலகல்கள் தொலைவிலுள்ள 'கோவில்பட்டி' என்ற ஊர் இன்னும் 'பட்டி' என்ற பெயரைத் தக்கவைத்துக் கொண் டிருக்கிறது. மிகச் சிறிய ஊரைப் 'பட்டி' என்று அழைப்பதே அக்கால மரபாகத்திகழ்ந்தது. விருதுப்பட்டியோ, நாளடைவில் வர்த்தகப் பெருக்கத்தால் ஒரு பட்டணம் போல் மாறவும் விருதுப் பட்டி என்ற பெயரை மாற்றிக் கொண்டு விருதுநகர் என்று வழங்க லாயிற்று. தென்பாண்டி நாட்டில் சிறந்த ஒரு வர்த்தக மையமாக விளங்குவது விருதுநகர். பெரிய வர்த்தகக் குழுவினைச் 'சாத்து' என்று அழைப்பது சங்ககால மரபு. விருதுநகரை அடுத்த ஒரு ஊர் 'சாத்தூர்' என்ற பெயர் கொண்டு இன்றும் விளங்குகிறது. விருதுப்பட்டி வர்த்தகப் பரம்பரையில் பேர்போன சுலோச்சனா நாடார் மரபில் வந்தவரே நமது பெருந்தலைவர். காமராசரின் தாய்மாமன்மார் இருவர். அவர்கள் கைதேர்ந்த வர்த்தகர்கள். அவர்களுள் கருப்பையா நாடார் என்பவர் விருதுநகரிலேயே ஜவுளி வியாபாரம் நடத்தி வந்தார். காசிநாராயண நாடார் மற்றொருவர். திருவனந்தபுரத்தில் மரவியாபாரம் நடத்தி வந்தார் அவர்.

இவர்களின் சகோதரி சிவகாமி அம்மையார்தான் காமராச ரைப் பெற்றெடுத்த பெருமாட்டி. தந்தை குமாரசாமி நாடார். அவர் தேங்காய் வியாபாரம் நடத்தி வந்தார். காமராசருக்கு உடன் பிறந்தவர் என்று ஒரே ஒரு தங்கை மட்டும் உண்டு. நாகம்மாள் என்பது அவர் பெயர். இத்தகையதோர் சீரும் சிறப்புமான குடும்பத்தில்தான் 1903ஆம் ஆண்டு சூலைத் திங்கள் 15ஆம் நாள் பெருந்தலைவர் அவதரித்தார்.

## பெருந்தலைவரின் இளமைப் பருவம்

விளையும் பயிர் முளையிலேயே தெரியும் என்பர். காமராசர் ஒருபெரிய அரசியல் தலைவராக விளங்கப் போவதின் அடையாளம் அவரது இளமைப் பருவத்திலேயே தெரிந்தது. காமராசரின் இளம் பருவ நிகழ்ச்சிகள் பலவும் அவரின் மிகப் பெரிய வருங்கால அரசியல் வாழ்வின் முன்னறிவுப்புகளாகவே விளங்கின. இளமைக் காலத்தில் தோழர்கள் பலர் நடுவேயும் பிறர் கவனத்தை ஈர்க்கும் தனித்தன்மை கொண்டு விளங்கியுள்ளார். என்றாலும் நாட்டுப் புறத்துச் சிறுவன் என்ற முறையில் அவரது தோற்றம் முற்றிலும் நமது கற்பனைக்கு மாறுபட்டுத்தான் இருந்தது. கழுத்தில் கௌவுரு போட்டிருப்பார். கைகளில் காப்பு அணிந்திருப்பார். சடை, குடுமி இப்படியாக அவர் தோற்றமளித்தார்.[1] காமாட்சி ராஜா என்பது தான் அவரின் இயற்பெயராக இருந்துள்ளது. அதுவே 'காமராஜா' என்று மருவி வழங்கிற்று. காமாட்சி என்பது ஒரு பெண்ணுக்குப் பெயரானால் 'காமு' என்று செல்லமாக அழைப்பது இன்றும் தென்பாண்டி நாட்டில் வழக்கமாயுள்ளது. காமராசரும் குடும்பத்தின் செல்லப்பிள்ளையாக வளர்ந்தார் என்பது இதனால் புலனாகிறது.

பிற்காலத்தில் பெரிய அரசியல் தலைவர் ஆன பிறகும் காமராசரின் பரம்பரைச் சாயல் அவரில் இழையோடாமலில்லை. முன்னர் குறித்தது போல் வணிகர் பரம்பரை எனும்போது சிறப் பித்துக் கூறக்கூடிய சில செய்திகள் உண்டு. முதலாவது அவர்கள் தங்கள் வாரிசுகளையும் தொடக்கம் முதலே வாணிபத்தில் ஈடுபடுத்தி வணிக நுட்பங்களை அவர்க்கும் கற்றுத் தந்து கை தேர்ந்த வணிகராக்கிவிட்டுச் செல்வர் என்பது ஒன்று. தங்கள் துறைக்கென்றே அமைந்த சில மரபு நுட்பங்களை விடாமல் பற்றிச் செல்வர் என்பது அடுத்தது. காட்டாக:- வியாபாரத்தின்

1. நாகஷண்முகம்; 'காமராஜ்'; பக். 6-10

போது யாரும் வாடிக்கையாளர் வந்து ஏதேனும் ஒரு பொருளை இருக்கிறதா என்று வினவினால், அப்பொருள் தம்மிடம் இல்லாத நிலையிலும், 'இல்லை' என்று சொல்லமாட்டார்கள். வெற்றிலை உண்டா என்று கேட்டால், பாக்குதான் உள்ளது என்பர். அவ்வாறே யாராவது வந்து எதனையாவது வேண்டுமா? என்று கேட்டால் 'வேண்டாம்' என்றும் பதில் வராது. வேண்டாம் என்றிருந்தால்—பார்க்கலாம்—என்பார்கள். இந்தப் பரம்பரைச் சாயல்தான் பெருந்தலைவர் பெரிய அரசியல் தலைவர் ஆன பின்னரும் அவரில் படிந்திருந்தது. எதனையும் முடியாது என மாட்டார் அவர். 'ஆகட்டும் பார்க்கலாம்' என்பார். இலக்குமி அருள் தங்கும் இடத்தில் இல்லை, வேண்டாம், முடியாது என்ற மறுதலைச் சொற்கள் அமங்கலமானவை என்பது அவ்வர்த்தகர் பரம்பரையின் கருதுகோள். இன்னும் இம்மரபினரை விருதுநகர், சாத்தூர், சிவகாசி ஆகிய இடங்களில் வியாபித்திருக்கக் காண லாம். வாழ்வும் வளமும் பொங்க விளங்கி வருகிறது இப்பரம்பரை.

## பள்ளிப்படிப்பு

பிடியரிசிப்பள்ளி என்றும், தொண்டி வாத்தியார் பள்ளி என்றும் அழைக்கப்பட்ட கிராமத்துப் பள்ளியில்தான் காமராசர் படித்தார். படிப்புக்காக ஆசிரியருக்கு அரிசியும் நொய்யும் தான் வழங்கப்படுமாம். இக்காலத்து வணிகப்பெருமக்களின் குழந்தை களுக்குக் கிடைக்கின்ற கான்வெண்ட் பள்ளிப்படிப்புக் காமராசருக் குக் கிடைக்கவில்லை. மரபிற்கேற்ப பெற்றோரும் சிறுவன் காமராசை வாணிபத்தில் ஈடுபடுத்தவே விரும்பினார். ஆறு வயதி லேயே தந்தையை இழந்த நிலையில் காமராசர் ஆறாவது வகுப்பிற்கு மேல் பள்ளிப்படிப்பைத் தொடர முடியாதவரா னார். தாய்மாமனின் ஜவுளிக்கடையில் பணியாளராக அமர்த்தப் பட்டுவிட்டார் அவர்.

அந்தக் குறுகியகாலப் பள்ளி வாழ்க்கையிலேயே காமராசர் தம்மை உத்தமமான மாணவன் என்று நிருபித்துக் காட்டியிருந் தார். ஆசிரியருக்கு அவர் காட்டி வந்த மரியாதை குறிப்பிடத் தக்கதாய் விளங்கிற்று. பிள்ளைப் பருவத்திலேயே காமராசருக் கிருந்த பெரியோரை மதிக்கும் இப் பண்பே பிற்காலத்தில் காந்தியடிகள், சத்தியமூர்த்தி போன்ற தேசத்தலைவர்களிடம் மரியாதை காட்ட ஏற்றதோர் பயிற்சியாகத் திகழ்ந்திருந்தது. ஒரு தடவை மனக்கணக்குப் போட்டார் ஆசிரியர். அருகிலுள்ள மாணவனைப் பார்த்து எழுதினார் என்று வீண்பழி சுமத்தி,

காமராசரை அடித்து விட்டார் ஆசிரியர். காமராசர் பொறுமை யோடு தண்டனையை ஏற்றார். சிறிது நேரத்தில் உண்மை புலப் பட ஆசிரியர் தமது தவற்றிற்காக வருந்தினார்.

இளமையிலேயே செயல் துடிப்புள்ள ஒருவராக விளங்கினார் காமராசர். தமது சாதனைச் செயல்களால் பெரியவர்களின் கவனத்தை ஈர்த்தார். காமராசரின் இளமைக்கால நிகழ்ச்சிகளாக இவ்வகையில் பல நிகழ்ச்சிகள் கூறப்படுகின்றன. அவற்றுள் முக்கியமானது வில்சன் ஷோ நிகழ்ச்சியாகும். காமராசரின் வாழ்க்கை வரலாற்றை எழுதுகிற அனைவருமே மறவாமல் குறிப்பிடும் நிகழ்ச்சி இது.

வில்சன் என்பவர் ஒருதடவை விருதுப்பட்டியில் வந்து வித்தை நிகழ்ச்சிகளைக் காட்டினார். மக்களெல்லாரும் மிகுந்த ஆர்வத் தோடு கூடியிருந்து நிகழ்ச்சியைக் கண்டனர். வில்சன் 144 அடி உயரங்கொண்ட கம்பம் ஒன்றிலிருந்து கீழேயுள்ள தண்ணீர்க் கிடங்கில் குதித்து விபத்தேதுமில்லாமல் வெளியே வந்தார். அவர் காட்டிய பல நிகழ்ச்சிகளில் இதுவே சிறந்ததாகத் திகழ்ந்தது. காட்சியைக் கருத்தோடு கண்டிருந்த சிறுவன் காமராசர் காட்சி முடிந்ததும் தைரியமாக முன்னே வந்து முறுக்குமாலை ஒன்றை வில்சனுக்கு அணிவித்தார். வித்தைக்காரர் வில்சனுக்குச் சிறுவன் தம்மை அவமதிக்கிறான் என்று பட்டது. கோபத்தில் முகத்தைக் கடுகடுவென வைத்துக் கொண்டு காமராசரைப் பார்த்தார் வில்சன். காமராசர் சற்றும் அஞ்சவில்லை. மாலை முறுக்குகளில் ஒன்றை ஒடித்து வில்சனுக்கு உண்ணக் கொடுத்தார். சிறுவனின் துணிச்சலைக் கண்ட வில்சன் வியந்தே போனார். அவரது கோபம் மாறிப்போயிற்று. காமராசரின் முதுகில் தட்டிக் கொடுத்துப் பாராட்டினார் வில்சன். மனிதன் என்பவன் வாழ்க்கையில் ஏதேனும் ஒரு சாதனையை நிகழ்த்துதல் வேண்டும் என்ற செயலாண்மை நாட்டம் சிறுவயதிலேயே காமராசரில் கருக் கொண்டிருந்தது என்பதற்கு இதுபோன்ற நிகழ்ச்சிகள் அடையாள மாகத் திகழ்ந்தன.

தமது சமயோசித புத்தியாலும், செயல் திறத்தாலும் ஒரு முட்டையைக் கூட நடனமாட வைத்து நண்பர்களின் வியப் பிற்கும் பாராட்டிற்கும் ஆளானவர் அவர். முட்டையில் துளை உண்டு பண்ணி உள்ளே உள்ளவற்றை அப்புறப்படுத்திவிட்டுப் பாதரசத்தை ஊற்றி வெயிலில் வைத்தால், சூடு ஏற ஏற முட்டை மெல்ல அசையத்தொடங்கும். இதை வித்தை என்று

காட்டி இறுதிவரையில் தமது தோழர்களை ''அது காமராசன் மந்திரம்'' என்று நம்பவைத்துள்ளார்.

வீரச்செயல்கள் புரிவதில் சிறுவயதிலேயே தீரராக விளங்கி வருங்காலத்தில் ஒரு பெரும் விடுதலைப் போர் வீரராகத் தாம் திகழப்போவதை முன்பே தீர்க்க தரிசனமாகக் காட்டியவர் காமராசர். ஒரு தடவை விருதுப்பட்டியில் திருடன் என்ற பேச்சு அடிபட்டது. பெரியவர்கள் கூடத் திருடனுக்குப் பயந்து ஆறு மணிக்கெல்லாம் கதவடைத்து இருந்தனர். காமராசரோ நண்பர் களுடன் சேர்ந்து திருடனைப்பிடிக்கத் திட்டமிட்டார். சாலையின் குறுக்கே கயிற்றைப் போட்டு இரண்டு பக்கமும் ஒளிந்திருந்து திருடன் வரும் நேரம் பார்த்து அக்கயிற்றை இழுத்து அவனைத் தடுமாறி விழ வைத்துப் பிடித்துப் போட்டார்.

ஜார்ஜ் ஜோசப் என்ற சுதந்திரப் போராட்ட வீரர் அடிக்கடி விருதுப்பட்டிக்கு வந்து கூட்டம் போட்டுப் பேசுவதுண்டு. ஒரு தடவை அவரது இரவு நேர நிகழ்ச்சியின் போது வெளிச்சத்திற் காக வைக்கப்பட்டிருந்த வாயுவிளக்கு மங்கி எரியத் தொடங் கியது. அங்கிருந்த காமராசர் கூட்டம் இதனால் தடைப்பட்டு விடக் கூடாதே என்று அஞ்சினார். பதைபதைத்தார். தாமே முன் வந்து விளக்கைச் சீர்ப்படுத்த முயன்றார், ஏதோ ஒரு உலோகக் கூர் கொண்டு விளக்கில் பட்ட அடைப்பைத் திறந்து விட்டார். விளக்கு சுடர் விட்டு எரியத் தொடங்கியது. காமராசரின் ஆரம்பக் காலத் தொண்டு இவ்வாறு சுடர் தந்த சீலமாகவே விளங்கிற்று. இதே பெருந்தலைவர் தாம் இந்த மண்ணுலகை நீத்த நாளில் இறுதியாகப் பேசிய வார்த்தைகள் — விளக்கை அணைத்து விட்டுப்போ—என்பதே. இவ்வாறு சுடர் தீட்டியதில் தொடங்கி, சுடர் அவித்ததில் முடிந்தது அவரது வாழ்க்கை. மிகவும் பொருத்த மானதோர் முழுவாழ்க்கை நமது பெருந்தலைவரின் வாழ்க்கை!

சிறுவனாக இருக்கும் போது காமராசர் நாடகங்களில் நடிப்பதும் உண்டாம். மாறுவேட நடிப்பிலும் சிறந்தவராகத் திகழ்ந்துள்ளார் அவர். ஒரு தடவை பக்த மார்க்கண்டேயன் நாடகத்தில் சிவபெருமான் வேடம் தாங்கி நடித்தாராம் அவர், மார்க்கண்டேயன் உயிரை வாங்கியே தீருவேன் என்று முனைப் பாகப்பேசி நடித்து எமனாகப் பாத்திரம் ஏற்று நடித்த சிறுவனைக் காமராசர் உண்மையாகவே நையப் புடைத்து விட்டாராம். இதுபோன்ற மாறுவேடப் பயிற்சிகளெல்லாம் பிற் காலத்தில் சுதந்திரப் போராட்டத்தின் காலத்தில் மிகுதியும்

உதவியுள்ளன. வெள்ளைக்காரக் காவல்காரர்களை மாறு வேடத்தில் ஏமாற்றி எத்தனையோ தடவைகள் தப்பிச் சென்றுள்ளாராம்.

**அரசியலில் தீவிரம்**

துணிக்கடையில் பணியாளராகத் திகழ்ந்த காமராசர் ஓய்வு கிடைக்கும் வேளைகளில் நாளிதழ்களை ஊன்றிப் படிக்கும் வழக்கத்தை மேற்கொண்டிருந்தார். திரு. சத்திய மூர்த்தி அவர்களின் விடுதலை உணர்ச்சி உரை, திரு.வி.க. அவர்களின் தெள்ளு தமிழ் நடை; வ.உ சி போன்றவர்களின் போராட்ட நடவடிக்கைகள் குறித்த செய்திகள், ஆகியனவே காமராசரை வெகுவாகக் கவர்ந்த எழுத்துரைகளாகும். பத்திரிகை படித்தல் என்பது பிற்காலத்திலும் காமராசரின் அன்றாடப் பணிகளுள் நன்றாக நிலைத்துவிட்டதற்கு இதுபோன்ற முற்காலப் பயிற்சிகளே காரணமாயின.

ஞானப்பிள்ளை என்பவர் விருதுப்பட்டியில் பொடிக்கடை வைத்திருந்தார். காங்கிரஸ் அபிமானிகள் கூடியிருந்து அரசியல் பேசும் இடமாகவும் திகழ்ந்தது அப்பொடிக்கடை. ஏதேனும் மறை பொருளை உள்வைத்துப் பேசும் பேச்சைப் ‘பொடிவைத்துப் பேசுதல்’ என்பது தமிழரின் பேச்சு வழக்கில் இன்றும் உள்ளது. அன்று பொடிக்கடையே உரையாடல் களமானது, சிந்தித்து மகிழத்தக்கதுதான். விடுதலைப் போராட்ட நிலைகள் பற்றிய விமர்சனங்களை நடத்திவந்த இக்குழுவினர் ‘ஞானப்பிள்ளைக் கூட்டம்’ என்று விருதுப்பட்டியில் பிரபலமாகியிருந்தனர். காமராசர் இக்குழுவில் ஒருவரானார். அக்காலத்தில் காங்கிரஸ் காரர்களோடு தொடர்பு கொண்டாலே போதும், அத்தகையோர் மீது போலீஸ் கண்காணிப்பு மிகுதியாக இருந்தது. காமராசரின் கட்சிப்பற்றோ தீவிரமாகிக் கொண்டிருந்தது. தாம் பணி செய்து வந்த துணிக்கடையையும் கூட அவ்வப்போது மூடிவிட்டு அரசியல் பேசப்புறப்பட்டு விடுவாராம் அவர். இதைக்கண்ட காமராசரின் இல்லத்தார் அஞ்சினர். விருதுப்பட்டியிலிருந்து அவரை வெளியேற்ற வகை தேடினர். திருவனந்தபுரத்திலிருந்த தாய்மாமனின் மரக்கடைக்கு அனுப்பி வைத்தனர் அவரை.

மரக்கடைக்குப் போனாலும் மறக்க முடியவில்லை அவரால் அரசியலையும் அரசியல் தோழர்களையும் அங்கிருந்தே விருதுப் பட்டித் தோழர்களோடு கடிதத்தொடர்பு கொள்ளலானார்,

காமராசர். மாமனின் கண்காணிப்போ மிகுதியாக இருந்தது. இதனால் தமக்குவரும் கடிதங்களை அவர் மாமனுக்குத் தெரியாமல் மறைத்து வைத்தே படிக்க வேண்டியிருந்தது. கடைக்கு வரும் அஞ்சல்களை வாங்கி வர அஞ்சல் அலுவலகத்துக்குச் செல்லுபோது தமக்கு வரும் அஞ்சலை மறைத்து வைத்து எடுத்து வந்து படிப்பார். ஒருதடவை இவருடைய தந்திரத்திற்கும் தப்பித் தோழர்களிடம் இருந்து போராட்டத்திட்டம் குறித்து வந்த அஞ்சலொன்று தாய்மாமனின் கையில் சிக்கியது. அவ்வளவுதான் மறுவண்டியிலேயே விருதுப்பட்டிக்கு அவரை அனுப்பி வைத்து விட்டார் தாய்மாமன்.

விருதுப்பட்டி வந்ததும் காமராசரின் அரசியல் ஈடுபாடு மேலும் அதிகரித்தது. குடும்பத்தினர் வெகுண்டனர். குறிப்பாகக் காமராசரின் பாட்டியார் பதைபதைத்தார். தமது செல்லப் பேரனுக்கு வெள்ளையர் அரசாங்கத்தால் ஏதேனும் இடர்கள் நேருமோ என்று அங்கலாய்த்தார்.

இந்த வேளையில் தான் குடும்பத்தினர் பெருந்தலைவர்க்குக் கால் கட்டுப் போடலாம் என்று தீர்மானித்தார்கள். திருமணப் பேச்சை எடுக்கும் போதெல்லாம் காமராசர் மறுப்புத் தெரிவித்து வந்தார். ஒருநாள், திருமணப்பேச்சை எடுத்தால் வீட்டைவிட்டே ஓடிவிடுவேன் என்று தீர்மானமாகக் கூறிவிட்டார். குடும்பத்தினர் அஞ்சிப்போய் அதற்குப்பிறகு திருமணப் பேச்சை எடுக்கவே இல்லை. காமராசர் கடைசிவரையில் பிரம்மச்சாரியாகவே வாழ்ந்தார். காமராசரின் அரசியல் ஈடுபாடு அது முதற்கொண்டு வெளிப்படையாயிற்று. நாட்டுப்பணிக்குத் தம்மை முற்றிலுமாக அர்ப்பணித்துக் கொள்ளும் தீர்க்கமான முடிவுடன் காமராசர் 1920 ஆம் ஆண்டு, அவரது 16ஆவது வயதில் காங்கிரஸ் கட்சியின் உறுப்பினர் ஆனார்.

ஆரம்ப காலத்தில் கட்சியில் முழுநேர அடித்தொண்டன் என்ற நிலையிலேயே ஆர்வங்காட்டிப் பணி புரிந்தார் அவர். அவரது பணி முறைகளில் ஆர்வம் தெரிந்தது. ஊக்கம் மிகுந்திருந்தது; உத்வேகம் நிறைந்திருந்தது, அரசியல் கூட்டங்களுக்கு ஏற்பாடு செய்வது; தலைவர்களை வரவேற்பது, பணவசூல் செய்வது. இந்த அளவிலேயே அவரது தொண்டு சிறந்தது. கட்சிக்குப் பணம் திரட்டுவதென்றால் காமராசர் முன்னணியில் நின்றார். 'காந்தி உண்டியல்' என்று பெயர் கொண்ட ஒரு உண்டியல் கலசத்தை ஏந்திக்கொண்டு, ' காந்தி உண்டியல், காசு

போடுங்கள்' என்று கூறி ஒவ்வொரு கடையாக ஏறி இறங்கு வாராம். சில வேளைகளில் தண்டோராவைக்கட்டிக்கொண்டு 'வந்தேமாதரம்' சொல்லி அடித்து முழக்கவும் செய்வாராம். நாட்டு நலனுக்காகச் செய்யும் எந்த ஒரு பணியையும் பெருமை யாகவே கருதினார். கட்சிக்குப் பணம் திரட்டும் பய னுள்ள பணி காமராசரால் செவ்வனே நடத்தப்பட்டது. பிற்காலத்திலும் இன்று தேனாம்பேட்டை காங்கிரஸ்மைதானம் என்று விளங்கும் விலைமதிப்புள்ள நிலச்சொத்தைக் காங்கிரஸ் கட்சிக் கென்று சேர்த்துக் கொடுத்த பெருமை அவருக்கே உரியது.

**போராட்டங்கள்**

காமராசரின் கட்சிப்பணி கட்சிவளர்த்தல் என்ற நிலையி லிருந்து போராட்டங்கள் என்ற நிலைக்கு விரிவடைந்தபோதே மிகத் தீவிரமானது. எண்ணற்ற போராட்டங்களை முன் நின்று நடத்தினார். தண்டனைகளையும் உறுதியோடு ஏற்றார். 1920இல் ஒத்துழையாமை இயக்கத்தில் கலந்து கொண்டார். 1923இல் மதுரை நகரில் கள்ளுக்கடை மறியலை வெற்றிகரமாக நடத்தி னார். வெள்ளையர் அரசு, நாட்டுக் கொடியைக் காங்கிரஸ்காரர் கள் எடுத்துச் செல்லக் கூடாதென்று தடைவிதித்தபோது, 1925இல் நாகபுரியில் எதிர்ப்பு மாநாடு ஒன்று ஏற்பாடு செய்யப் பட்டது. அதில் போய்க் கலந்து கொள்ள ஆயத்தமானார் அவர். ஆனால் அதற்குள் காந்தி—இர்வின் உடன்பாடு ஏற்பட்டு அப் போராட்டத்திற்குத் தேவை இல்லாமல் போயிற்று. 1927இல் இது போல வாள் ஏந்தும் போராட்டம் வெடித்தது. காமராசர் ஐந்து வாட்களைச் செய்து வழங்கினார். 1928இல் சைமன் கமிஷன் குழுவை எதிர்த்துப் போராடினார். 1925இல் காமராசர் தாமாக ஒரு தொண்டர் படையைத் திரட்டிக் கொண்டு போய், சென்னை வந்திருந்த காந்தியடிகளைச் சந்தித்தது குறிப்பிடத்தக்கது. வெள்ளைக்காரத்தலைவன் நீல் என்பவனின் சிலையை மவுண்ட் ரோட்டிலிருந்து அகற்றும் போராட்டத்தின் தொடர்பாக அச் சந்திப்பு நிகழ்ந்தது. காங்கிரஸ் மாநாட்டிலேயே அதற்கான தீர்மானம் நிறைவேற்றப்படும் அளவிற்குக் காமராசரின் அப் போராட்டம், நாடுதழுவிய அளவில் பெயர் பெற்றிருந்தது. நீல் சிலை நீக்கப்பட்ட பின்னரே ஓய்ந்தார் காமராசர். 1930இல் உப்பு சத்தியாகிரகம் தமிழ் நாட்டைப் பொறுத்தமட்டில் வேதாரண் யத்தில் நடந்தது. அதிலும் தீவிரம் காட்டினார் காமராசர். இரண்டு ஆண்டுகள் சிறைத் தண்டனை கிடைத்தது பெருந்

தலைவர்க்கு 1932இல் சட்ட மறுப்பு இயக்கம். ஓராண்டு சிறை. அரிசனங்கள் உரிமைக் கென்று எழுந்த போராட்டங்கள் வேறு. அவற்றிலெல்லாம் தம்மை முழுவதும் ஈடுபடுத்தி முழுமூச்சோடு போராடியவர் காமராசர். அவற்றுள் 1925இல் அரிசனங்களுக்கு வழிபாட்டுரிமை கேட்டு வைக்கம் போராட்டத்திலும் சுசீந்திரம் போராட்டத்திலும் கலந்து கொண்டது குறிப்பிடத்தக்கது.[1] 1934இல் விருதுநகர் அஞ்சல் நிலையத்தின் மீதும் ஸ்ரீவில்லிபுத்தூர் காவல் நிலையத்தின் மீதும் வெடிகுண்டு வீசியதாகப் பொய்க் குற்றம் சுமத்தப்பட்டார். 1939இல் 2ஆம் உலக மகாயுத்தத்திற்கு ஆர்தர் ஹாஃப் என்ற வெள்ளையர் அரசு அதிகாரி இந்திய மக்களிடமிருந்து பணம் திரட்ட முயன்றார். அதைத்தடுத்துப் போட்டார் காமராசர். 1941இல் தனியார் சத்தியாகிரகம் ஒன்றில் பங்கு பெறுவோரின் பெயர்கள் அடங்கியபட்டியல் ஒன்றைக் காந்தியடிகளிடம் ஒப்படைக்கப் போகும் வழியிலேயே கைது செய்யப்பட்டு வேலூர் சிறையில் அடைக்கப்பட்டார். 1942இல் 'வெள்ளையனே வெளியேறு' என்ற போராட்டத்தில் கைதாகி ஒரு வருடக் கடுங்காவலை அனுபவித்தார். பாரதியார் 'பாட்டு நம் தொழில்' என்றது போல் 'சிறை செல்வதே எம் தொழில்' என்று போராடித் தண்டனைகளை அனுபவித்து வந்தார் காமராசர்.

சிலவேளைகளில் தாம் சிறை புகுந்துவிட்டால் வெளியில் பிரச்சார காரியம் தடைப்படும் என்று அவர் உணர்ந்தால், சிறை செல்லாமலிருக்கப் போலீசார் கண்களைக் கட்டிவிட்டு எளிதில் கைதாகாமல் சமாளிக்கவும் செய்தார். இதனால் காமராசரைக் கைது செய்வது வெள்ளையர் அரசின் காவல்துறைக்குப் பெரும்பாடாக இருந்தது. சிலவேளைகளில் அவரே தம்மை ஒப்புவிப்பதும் உண்டு. சிலவேளைகளில் பரோலில் வெளியில் விடுவர். சில வேளைகளில் பரோல் மறுக்கவும் படும். இவ்வாறெல்லாம் விருது நகர் பெற்றெடுத்த இத்தவப்புதல்வன் இந்நாட்டுச் சுதந்திர உரிமைக்காகப்பட்ட இன்னல்கள் கொஞ்சமல்ல. அம்ரோட்டி சிறைக் கொடுமையைப் பற்றி அவரே குறித்துள்ளார். வெப்பம் தாங்காமல் இரவு முழுவதும் தண்ணீர்த்தொட்டியில் இருந்தே கழித்திருக்கிறார்.

அவரது கனவும் நனவுமே நாட்டு விடுதலைத் திட்டங்களும் போராடும் முறைகளாகவே இருந்துள்ளன. பணம் பதவி என்பன

1. சுவாமிநாதன். எ, தென்னிந்திய வரலாறு, ப. 47

பற்றிய உணர்வே அவருக்கு மரத்துப்போயிருந்துள்ளது. நல்ல வருமானம் ஈட்டுகின்ற ஆயுட்காப்பீட்டு ஏஜெண்டாக அக்காலத்தில் அலுவல் புரிந்து வந்தவர், சிலகாலமே அத்தொழிலையும் செய்தார். நாட்டுப்பணிக்காகத் தம்மை அர்ப்பணித்தபின் அந்த அலுவலையெல்லாம் விட்டொழித்தார்.

அக்காலத்தில் போராடுவதென்பதும் சாதாரணமானதல்ல. 'கரணம் தப்பினால் மரணம்' என்ற போராட்டங்களே இந்த விடுதலைப் போராளிகளின் போராட்டங்களெல்லாம். ஜனநாயகத் தகுதியை நாடு பெற்ற பின்னர் இக்காலத்தில் அரசுகளுக்கெதிராகப் போராடப்படும் போராட்டங்களோடு அவற்றை ஒப்பிடுவது முற்றிலும் தவறாகும். சுதந்திரப் போராட்டக்காரர்கள் போராடிய போராட்டங்களும், செய்த மறியல்களும், இருந்த உண்ணா விரதங்களும் ஜனநாயகத்தகுதி நாட்டு மக்களுக்கு மறுக்கப்பட்டிருந்த காலத்தில் நிகழ்ந்தவை. கைது செய்யப்பட்டவர்கள் பரோலில் விடப்படுவதும் எளிதில் நடக்கவில்லை. விசாரணை நடந்தாலும் தீர்ப்புகள் குறித்து நிச்சயமாகச் சொல்ல முடியாத ஒரு நிலையே இருந்திருக்கிறது. தூக்குத் தண்டனைகள் மிகச் சாதாரணமாக நிறைவேற்றப்பட்டன. கட்டபொம்மன் ஊமத்துரை ஆகியோர் பெற்ற தூக்குத்தண்டனைகள் மிகமுந்தியவை. 1900க்குப்பிறகும் தூக்கிலிடப்பட்டவர்கள் எண்ணிக்கை மிகுதி. தூக்குத் தண்டனை குறித்த செய்திகள் வந்த வண்ணமே இருந்தன.

1908 ஆகஸ்ட் 11இல் குதிராம் என்ற விடுதலைப் போராளி தூக்கிலிடப் பட்டார். 1909இல் திஸ்ரா, மதன்லால் என்ற இரண்டு பேர் தூக்கிலிடப்பட்டனர். 1915 மே 11இல் அமீர்சந்த், பாலமுந்த், அவேத்பெஹாரி, வசந்த் விச்வான் கூட்டாகத் தூக்கிலிடப்பட்டனர். 1915 செப்டம்பர் 15இல் புரட்சிக்குட்பட்ட 23 ஆவது குதிரைப் படையில் 12 சிப்பாய்கள் ஒட்டு மொத்தமாகத் தூக்கிலிடப்பட்டனர்.[1] விடுதலை இயக்கத் தளபதிகளின் இரகசிய குறிப்புகள் சி. ஐ. டி. அதிகாரிகளால் சேகரிக்கப்பட்டன. பாரதியார் காலத்தில் அவரைப் பற்றி எழுதப்பட்ட சி.ஐ.டி. குறிப்பொன்று இன்றும் பாதுகாக்கப்படுகிறது. அது பின் வருமாறு அமைகிறது :

---

1. சோமயாஜுலு. ந., நெல்லைமாவட்ட சுதந்திரப் போராட்ட வரலாறு; ப. 18

சி. சுப்ரமணிய பாரதி—தர்மராஜ ஈஸ்வரன் கோயில் தெரு 47 ஆம் நம்பர் வீடு. சம்சாரம் செல்லம்மாள். பெண் குழந்தை சகுந்தலா. பாட்டனார் குருசாமி அய்யர். ஷியார் ரெட்டியார் புரம் ஸ்கூலில் ஜெம்னாசியம் வாத்தியார். சினேகிதர் (1) தங்க வேலுப்பிள்ளை சஸ்பெக்ட். (2) முத்துக் குமாரசாமி பிள்ளை, 82 நம்பர் ரூடிபுனிசா வீதி புதுவை. (3) சுல்தான் பேட் சுலேமான் சாயபு வில்லியனூர்.[1]

இவ்வாறு தொடர்ந்து வந்த பதட்டமானதோர் காலகட்டத்தில்தான் காமராசர் நாட்டுக்காகத் தம்மை அர்ப்பணித்து அரசியலில் இறங்கினார். அது சாதாரண துணிச்சல் அல்ல; வாழ்வில் மொத்தம் 3000 நாட்கள் காமராசர் சிறைக்காற்றைச் சுவாசித்தார் என்ற புள்ளிவிவரம் கிடைக்கிறது.[2]

**பொறுப்புகள்**

வெள்ளைக்காரன் காலத்திலேயே தேர்தலையும் சந்தித்தவர் தலைவர். விருதுநகர் நகரசபைத் தேர்தலில் சிறைக்குள் இருந்தவாறே வெற்றிவாகை சூடினார். ஆயினும் வெள்ளைக்காரன் காலத்துப்பதவி அவருக்குப் பிடிக்கவில்லை. நகரசபைத் தலைவர் பதவி அவருக்கு வழங்கப்பட்ட போது அதை ஏற்க அவர் மறுத்தார். நண்பர்களோ விடாப்பிடியாக வற்புறுத்தினார்கள். அவர்களுக்காக ஆறு நிமிடங்கள் மட்டும் அந்த இருக்கையில் இருந்துவிட்டு அவர் எழுந்துவிட்டார். காமராசரின் அரசியல் வாழ்வில் நிகழ்ந்த இது போன்ற அற்புத நிகழ்ச்சிகள் பல. இதைப் பற்றிச் சிந்திக்கும் போது பிரபல எழுத்தாளர் கே. ஏ. அப்பாஸ் கூறுகிறார்—

> ''திரு காமராஜ் அவர்களின் வாழ்வில் கற்பனைக் கதைகளில் வருவது போன்று திடுக்கிடும் நிகழ்ச்சிகள் நிகழ்ந்தன. அது ஒரு அசாதரண வெற்றிக் கதையே யாகும்''[3]

1936இல் தமிழ்நாடு காங்கிரஸ் கட்சியின் செயலர் ஆனார். 1937இல் விருதுநகர் சட்டமன்றத் தொகுதியில் இருந்து சட்ட சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1940 முதல் 1952 வரை மொத்தம் 12 ஆண்டுகள் தமிழ்நாடு காங்கிரஸ் கட்சியின்

---

1. மேற்படி ப .143
2. முருகு தனுஷ்கோடி; 'பத்திரிகையாளர் நெஞ்சில் காமராஜ்' ப. 208
3. மேற்படி

தலைவராக இருந்து கட்சி வளர்ச்சிக்காகப் பாடுபட்டார். இவ்வளவு நீண்ட காலம் இப்பதவியை வகித்தவர்கள் வேறுயாரும் இல்லை எனலாம். 1952இல் பொதுத் தேர்தலில் காங்கிரஸ் கட்சிக்குப் பெருமளவு வெற்றி கிடைக்காததற்குத் தாமே தார் மீகப் பொறுப்பேற்று தலைவர் பதவியை அவர் இராஜிநாமா செய்தார். திரு. சத்திய மூர்த்தி காமராசருக்கு ஒரு நல்ல குருவாகத் திகழ்ந்துவந்தார். தனுஷ்கோடி நாடார் என்பார் உற்ற நண்பராகத் திகழ்ந்தார். மூதறிஞர் இராஜாஜியோ அவருடன் கருத்து வேறுபாடு கொண்டு ஒரு அரசியல் எதிரியாகவே விளங்கினார்.

## விடுதலைக்குப்பின்

போராடிய ஒருவன் வெற்றி பெற்றபின், அவ்வெற்றிக் கனியைப் புசித்து மகிழ்வதிலேயே நாட்டம் செலுத்துவான். பெருந்தலைவரோ இதிலும் மாறுபட்டே விளங்கினார். விடுதலைக்குப்பின் நாட்டில் எழுந்த பெரிய சிக்கல்களைப் பற்றிச் சிந்திப்பதிலும், அடிமைத்தனத்தால் சீர்கெட்டுக் கிடந்த நாட்டை வளப்படுத்துவதிலுமே நாட்டம் கொண்டவராய்த் திகழ்ந்தார். பாகிஸ்தான் பிரிவினை, காந்தியடிகளின் மரணம்; ஆகிய நிகழ்ச்சிகளால் உருவான பெரும் விளைவுகளைக் குறித்து நேருஜி போன்றவர்கள் கவலை மிகக் கொண்டிருக்க, காமராசர் அவர்களோடு வேண்டிய அளவு ஒத்துழைத்து உதவினார். அகில இந்திய நிலையில் வேண்டப்பட்ட ஒருவராக அவர் அப்பொழுதே திகழ்ந்தாலும், தமிழகத்தின் மீது அவர்க்கிருந்த பற்றும் பேரன்பும் முழுவதுமாக அவரை அங்கே செல்ல விட்டுவிட வில்லை. மூதறிஞர் இராஜாஜி போன்றவர்கள் தொடர்ந்த அரசியல் எதிரிகளாகத் திகழ்ந்த நிலையில், தமிழக அளவில் கட்சி நிலையில் தமது இடத்தை உறுதி செய்து கொள்ளவேண்டிய நிர்பந்தமும் காமராசருக்கு உண்டாயிற்று. அதனால் 1954இல் மூதறிஞர் இராஜாஜி முதல்வர் பதவியை இராஜிநாமா செய்ததும்; காமராசர் முதல்வர் பொறுப்பை ஏற்றுக் கொண்டார். அவர் பதவி ஏற்ற நாள் 13-4-1954 ஆகும். தமிழ் வருடப்பிறப்பன்று அவர் பதவி ஏற்றது நல்ல தமிழ்யுகம் ஒன்று தொடங்கினமைக்கு அடையாளம் போல் இருந்தது.

கட்சி சார்பைப் பொறுத்த மட்டில், 1955இல் ஆவடியில் நடந்த காங்கிரசின் 58 ஆவது மாநாட்டை அவர் ஏற்பாடுகள் செய்து நடத்தித்தந்தது வரலாற்றில் இடம் பெறுகிறது. இக்

காங்கிரசில்தான் சோஷலிச பாணியில் அரசு நடை பெறும் என்ற தீர்மானத்தைக் காமராசர் கொண்டுவந்தார்.[1]

பெற்ற சுதந்திரத்தைப் பேணிக்காப்பதற்கு அடிப்படையாக, மக்களிடம் உள்ள அறியாமையைப் போக்குவது முதற்கடமை எனக் கொண்டார் காமராசர். அனைவர்க்கும் கல்வி வழங்கல், என்பதை ஒரு சபதம் போலவே ஏற்றார் அவர். கல்விக்கண் காமராசர், கல்வி வள்ளல் காமராசர் என்று நாடே பாராட்டும் வண்ணம் கல்விக்கு விவரிக்க இயலாத மிகச் சிறந்த தொண்டாற்றினார் அவர். கல்விக்கண் கொடுத்த வள்ளல் என்று அவரைப் பாராட்டினார் தந்தை பெரியார். "இருநூறு ஆண்டு காலத்தில் பெற்ற கல்வி வளர்ச்சிக்கு மேலான வளர்ச்சியை எட்டாண்டு காலத்தில் கொடுத்தார் காமராசர்" என்று மதிப்பிட்டுள்ளார் அக்காலத்துக் கல்வி நெறியாளர்.[2] அவர் காலத்தில் மட்டும் தமிழகத்தில் தோன்றிய பள்ளிகளின் எண்ணிக்கை 6000. முந்நூறு ஜனத்தொகை உள்ள ஒரு ஊருக்கு ஒரு பள்ளி என்று அமைத்துக் கல்வியறிவு பரவலாக்கவும் பட்டது. இலவசக் கல்வித்திட்டமும், மதிய உணவுத் திட்டமும் செயல்படுத்தப்பட்டன. 3·86 இலட்சம என்றிருந்த கற்றோர் எண்ணிக்கை 13 இலட்சம் என்ற இலக்கை எட்டியது. இதனைவியந்து அக்கல்வி நெறியாளரே கூறுகிறார்:

"தடுக்கி விழுந்தால் தொடக்கப்பள்ளி, ஓடிவிழுந்தால் உயர் நிலைப்பள்ளி என்கிற நல்லநிலை காமராசர் காலத்தில் உருவானது."[3]

பாமர மக்களின் நல்வாழ்விற்காக அரும்பாடுபட்டார் காமராசர். அவர்களுக்குச் சாதகமாகப் பல சட்டங்களை இயற்றினார். எடுத்துக் காட்டாக 1955இல் கொண்டுவரப்பட்ட பண்ணையாள் சட்டத்தைக் குறிப்பிடலாம். அது பண்ணைக்கூலிகட்கு நல்லதோர் பாதுகாப்புச் சட்டமாக அமைந்தது. காமராசர் காலத்தில்தான் காங்கிரஸ் கட்சி பாமரமக்களோடு அதிகம் தொடர்பு கொண்டிருந்ததென்று எழுதி வைத்துள்ளனர் வரலாற்றாசிரியர்.[4] கிராமங்களுக்கெல்லாம் மின்வசதி ஏற்படுத்தினார்.

---

1. சோமயாஜுலு. ந. நெல்லை மாவட்ட சுதந்திரப் போராட்ட வரலாறு, ப. 63
2. சுந்தரவடிவேலு. நெ.து., கல்வி வள்ளல் காமராசர் முன்னுரை
3. சுந்தரவடிவேலு. நெ.து. 'நினைவில் நிற்பவர்கள்' ப. 182
4. மேற்படி. ப. 82

நல்ல சாலைகளை அமைத்துக் கொடுத்தார். இப்படி அவர் மக்களுக்குச் செய்த நன்மைகளையெல்லாம் கூறிக் கொண்டே போனால், அது நெடும்பட்டியலாகவே அமையும். திராவிட முன்னேற்ற சமுகம் பலத்த எதிர்க்கட்சியாக வளர்ந்து காங்கிரசுக்கு ஒரு சவாலாக நின்றபோதும் அதனால் எழுந்த சிக்கல்கள் பல வற்றையும் திறம்பட சமாளித்தவர் அவர். எடுத்துக்காட்டாக மொழிச்சிக்கலைக் குறிப்பிடலாம். அகில இந்திய நிலையில் ஒருமைப்பாடு பாதிக்கப்படாமலும், அதே வேளை மாநில மக்களின் மனம் புண்படாமலும் சிக்கலை அவர் அணுகினார். மொழிச்சிக்கலைப் பெரிதுபடுத்தவில்லை அவர். அந்த ஒரு நிலையிலேயே பிரச்சினை அடிவாங்கி விட்டது எனலாம். இது தொடர்பாக 'மிரர்' இதழின் நிருபர் அர்ஜுன் தேவ்க்கு அவர் அளித்த பேட்டி அதனைத் தெளிவு படுத்தும் :

நிருபர் : மொழிப்பிரச்சினை பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

தலைவர் : அது ஒன்றும் பெரிய பிரச்சினை அல்ல. காத்திருக்க முடியும்.

நிருபர் : எப்படி?

தலைவர் : நீங்கள் கவலைப்படவேண்டாம். இந்த நிலைமையை நான் சரி செய்து விடுவேன்.[1]

பச்சைத் தமிழர் என்று பெரியார் அவர்களால் பாராட்டப் பட்டவர் காமராசர். மொழிவழி மாநில அமைப்பில் எல்லா மாநிலங்களும் தங்கள் தங்கள் மாநில எல்லைகளையும் உரிமை களையும் காத்துக் கொள்ளுவதில் கண்ணும்கருத்துமாக இருந்த காலக் கட்டத்தில், தமிழ்நாடு தனி மாநிலமாக அமைவதைக் காமராசர் ஆதரித்தார். 1956ஆம் ஆண்டு நவம்பர் திங்கள் 9ஆம் நாள் சென்னை மாநிலச் சட்ட மன்றத்திலிருந்து பிரிந்து சென்ற கருநாடக, கேரள உறுப்பினருக்கு 23-10-1956இல் வழியனுப்பு விழா சென்னை மாநிலச் சட்டமன்றத்தில் நடந்தது. மகமது உஸ்மான் பேசும்போது 'திரு. காமராஜ் அவர்களின் நெஞ்சுரத் தாலும் விடா முயற்சியாலும் தமிழ்நாடு தனிமாநிலம் ஆக்கப் பட்டது' என்றார்.[2] தமிழ் மொழி முதல் முதலில் கல்லூரிகளில் பாடமாக்கப்பட்டது பெருந்தலைவர் காலத்தில்தான்.

---

1. இராகவேந்திரகாவலே. ஆனந்தவிகடன், பத்திரிகை யாளர் நெஞ்சில் காமராஜ், ப. 303.
2. சுந்தரராசன். த. 'தமிழ்நாடு பெயர்மாற்ற வரலாறு'; பக். 64-65.

வேடிக்கையான சிக்கல்களை யெல்லாம் கொண்டு மக்கள் அவரை அணுகினர். பொறுமையுடன் அவற்றிற்குத் தீர்வு கண்டார் காமராசர். ஒரு தடவை ஒரு ஊருக்குத் தலைவர் வருகை செய்திருந்தார். அங்குள்ளோர் சிலர் அவரை அணுகித் தங்கள் ஊர் சுடுகாட்டிற்கு நல்ல வழிவேண்டும் என்று கேட்டனர். "நான் இருக்கிறவர்களுக்கு வாழ நல்ல வழி தேடிட்டிருக்கேன்; நீங்கள் சுடுகாட்டிற்கு வழிகேக்றீங்களே" என்று நகைச்சுவையாகப் பதில் சொன்னார் தலைவர்.[1]

அவரது காலத்தில் சென்னை நகராட்சி புதுவேகத்துடன் செயல்பட்டது. குறிப்பாக, சென்னைக்குக் குடிநீர் வழங்கும் திட்டம் பற்றி மிகுந்த கருத்து கொள்ளப்பட்டது. எடுத்துக் காட்டாக, 11-11-57 அன்று ராபின்சன் பூங்காவில் வட சென்னைக்குத் தண்ணீர் வசதியை அதிகரிக்கும் திட்டம் ஒன்றிற்கு முதலமைச்சர் காமராசர் அடிக்கல் நாட்டுகிறார். மறுநாளே 12-11-1957 இல் டாக்டர் எஸ். இராதாகிருஷ்ணன் கீழ்ப்பாக்கம் தண்ணீர் நிலையத்தில் அதிக வேகமாகத் தண்ணீர் வழங்கும் இயந்திரம் ஒன்றை இயக்கி வைத்துள்ளார். அன்றைய மேயர் திரு. சீனிவாசன் காமராசரைப் பாராட்டும் வகையில் அவரது மார்பளவு சிலை ஒன்றினை 19-9-57இல் மேயர் அறையிலேயே நிறுவினார். 9-10-1961இல் பிரதமர் பண்டிதநேரு மவுண்ட் ரோட்டில் காமராசரின் முழு உருவச் சிலையினைத் திறந்து வைத்தார். அத்தகையப் பாராட்டுகளுக்கெல்லாம் முற்றிலும் ஏற்றவராக விளங்கினார் பெருந்தலைவர்.

1954, 1957, 1962 என்று மூன்று தடவைகள் மீண்டும் மீண்டும் முதல்வராகி மக்களின் நம்பிக்கைக்கு உரியவராயிருந்தவர் அவர். மிகத் திறம்பட நிர்வாகம் புரிந்தார். அகில இந்திய நிலையிலும் தமது பார்வையைக் கூர்மையாக்கி வைத்திருந்தவர் அவர். மாநில அரசிற்கும் மைய அரசிற்கும் நடுவே ஒரு பாலம் போல் அமைந்து ஒருமைப்பாட்டைப் பேணி வந்தார். இதனைக் குறித்துப் பத்திரிகையாளர்கள் அவரை வெகுவாகப் பாராட்டியுள்ளனர். ஒருவர் மிக அழகாகக் கூறினார்.:

"முதல் மந்திரி என்ற முறையில் காமராஜர் இருமுகம் படைத்த இத்தாலியக் கடவுள் போல, ஒரு முகத்தை டெல்லிக்கும்

---

1. இராகவேந்திர காவளே—ஆனந்தவிகடன், பத்திரிகையாளர் நெஞ்சில் காமராஜ், ப.303.

மற்றொரு முகத்தைத் தமிழகத்திற்கும் சாமார்த்தியமாகக் காண்பித்து வந்தார்''.[1]

**காமராசர் திட்டம்**

காங்கிரஸ் கட்சியின் சீர்திருத்தம் கருதி மூத்த தலைவர்கள் பதவி துறக்கவேண்டும் என்ற ஆலோசனை ஒன்றை எடுத்துரைத்தார் காமராசர். பண்டித நேருவிற்கு மிகவும் பிடித்திருந்தது இது. முதல் முதலாகப் பெருந்தலைவர் காமராசரே முன்வந்து முதலமைச்சர் பதவியை இராஜிநாமா செய்தார். 'காமராஜ் திட்டம்' என்ற பெயரில், இது விளங்கிப் பெருந்தலைவர்க்குப் புகழ் தேடித் தந்தது. இத்திட்டத்தின் உட்பொருள் அநேகருக்குப் புரியாமலிருந்தது. அதனையும் மிக எளிதாக விளங்க வைத்தார்.

''கோபுரத்தின் உள்ளே இருந்து அதைப் பார்பதைவிட வெளியே போய் தூர இருந்து பார்த்தால், அது நன்றாகத் தெரியுமல்லவா''?—என்றார் அவர்.[2] பத்திரிகையாளர் ஒருவர் இத்திட்டத்தின் சிறப்பினைப் பற்றி எடுத்துச் சொல்லும்போது பின்வருமாறு கூறினார்-

''காமராசர் வாழ்க்கையில் மிகவும் உன்னதமான கட்டம் அவர் கட்சிப் பணிக்காகத் தம்மை அர்ப்பணித்துக் கொண்டு, தமிழ் நாட்டின் முதலமைச்சர் பதவியைத் துறந்ததுதான். பதவியையும் அந்தஸ்தையும் காமராஜ் போல உதறித் தள்ளிய வேறொரு தலைவரை இந்த நாடு எங்கே காணப்போகிறது?''[3]

பதவியைத் துறந்த அவருக்கு, மிக விரைவிலேயே பெரும்பதவி ஒன்று காத்திருந்தது. 1963இல் அகில இந்திய காங்கிரஸ் கட்சியின் தலைவராக நியமனம் பெற்றார். அப்பெருமையோடு புவனேசுவர் காங்கிரஸ் மாநாட்டிற்குத் தலைமை ஏற்றுச் சென்றதுதான் அவரது அரசியல் வாழ்வின் உயர்நிலை எனலாம். தனியொரு புகைவண்டி அந்த வரலாற்றுச் சிறப்பு மிகுந்த பயணத்திற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ஒவ்வொரு மாநிலத் தலைநகரிலும் அது நிறுத்தப்பட்டு அந்தந்த மாநில முதல்வர்கள் பெருந்தலைவரை வரவேற்றது எந்த ஒரு காங்கிரஸ் தலைவ

---

1. அந்தோணி லூகாஸ் ஜே., 'நியூயார்க் டைம்ஸ்' பத்திரிகையாளர் நெஞ்சில் காமராசர்.
2. சாவி; சிவகாமியின் செல்வன்: ப. 65.
3. நாராயணன் பெ.வி., 'சமாச்சார்' (இதழ்) பத்திகையாளர் நெஞ்சில் காமராசர்; ப. 236.

ருக்கும், காந்தியடிகளுக்குப் பிறகு கிடைக்காத ஒரு பேறு எனலாம். ஒவ்வொரு மாநில முதல்வரின் வரவேற்புக்கும் பெருந் தலைவர் பதிலளிக்கையில் தமிழிலேயே பேச அது அந்தந்த மாநில மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டது குறிப்பிடத் தக்கது.

அரசியல் வாழ்வில் காமராசரின் இவ்வாறான படிப்படியான முன்னேற்றம் எல்லோரையும் கவர்ந்தது. 'உழைப்பால் உயர்ந்த உத்தமர்' என்றே பாராட்டினர். ஒரு பத்திரிகையின் பாராட்டு பின்வருமாறு :

"இந்தியாவின் தென்கிழக்கு முனையிலுள்ள விருதுப்பட்டிக்கும் இந்தியாவின் தலைநகரான புதுடெல்லியிலுள்ள ஜந்தர் மந்தர் சாலைக்கும் மிக நீண்ட தூரம். மிகக் குறைவான கல்வியறிவு பெற்றவரும் ஒரு துணிக்கடையில் விற்பனையாளராகத் தமது வாழ்க்கையைத் தொடங்கியவருமான ஒருவருக்கு இத்தனை தூரம் மேலும் அதிகமாகும். இந்தத் தூரத்தைக் கடந்து ஜந்தர் மந்தரையடைவதற்கு அவருக்கு ஏறத்தாழ நாற்பது ஆண்டு காலம் ஆயிற்று"[1]

### சிக்கல் தீர்த்த செம்மல்

1964 மே 27இல் நேரு இயற்கை எய்தினார். அதன் பிறகு அகில இந்திய அளவில் காமராசரின் பொறுப்புகள் அதிகமாயின. நேருவுக்குப் பிறகு யார்? என்ற கேள்வி ஒரு சிக்கலையே உருவாக்கியது. இச்சிக்கலைத் தீர்த்து வைத்த பெருமை, காமராச ரையே சேரும். முதலில் தனித்தனியாக ஒவ்வொரு தலைவரை யும் சந்தித்து இது குறித்து ஆலோசனை நடத்தினார். பின்னர் அனைத்துத் தலைவர்களையும் கூட்டாகச் சந்தித்து உரையாடி னார். எவ்வித சிக்கலுமின்றி லால்பகதூர் சாஸ்திரியை நேரு விற்குப் பின்னர் பிரதமராகக் கொண்டு வந்தார். சிறிது காலத்தி லேயே சாஸ்திரி உருசியநாடு சென்றிருந்தபோது தாஷ்கண்ட் என்ற நகரில் இவ்வுலகை நீத்தார். மீண்டும் சிக்கல் உண்டானது. இவ்வேளை நேரு நாட்டுக்குச் செய்திருந்த சேவைக்கு அகில இந்திய காங்கிரஸ் எத்துணை அளவிற்குக் கடன்பட்டிருக்கிறது என்பதை எண்ணிப் பார்த்தார் காமராசர். பிற தலைவர்களிடம்

1. நரசிம்மன் வி. கே. நிருபர், இந்தியன் எக்ஸ்பிரஸ், பத்திரிகையாளர் நெஞ்சில் காமராஜ்; ப. 221

இது குறித்துப் பேசினார். நேருவின் புதல்வி திருமதி இந்திரா பிரியதர்சினியை அடுத்த பிரதமராய் எல்லோரும் ஏற்றனர். இவ்வாறு சிக்கலின்றி அடுத்தடுத்துப் பிரதமர்களைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பைத் திறமையோடு செய்து காமராசர் 'அரசர்களை உருவாக்குபவர்' என்ற பெருமையினையும் சேர்த்துக் கொண்டார்.

1969ஆம் ஆண்டு தேசிய காங்கிரஸ் பேரவைக்கு ஒரு சோதனையான ஆண்டாக அமைந்தது. கட்சியில் பெரிய விரிசல் ஏற்பட்டது. அப்பழுக்கற்ற தியாகத்தாலும் மனோபாவத்தாலும் எத்தனையோ சிக்கல்களைத் திறம்பட சந்தித்த பெருந்தலைவர் காமராசராலும் கூட, சரிப்படுத்த முடியாத விரிசலாக அது அமைந்தது. கட்சி பிளவு பட்டது. அந்நிலையிலும் தம் நிலை மாறாதவராக நின்றார்; பதவியையும் அந்தஸ்தையும் விரும்பாத பெருந்தலைவர். இறுதிவரையிலும் தமது கொள்கையைக் காத்தவராய் இரண்டாகப் பிரிந்த பின்னர் பதவி ஏற்ற காங்கிரஸ் கட்சியை வேண்டாம் என்று ஒதுக்கிவிட்டு எதிரணியிலேயே நின்றுவிட்டார். பதவியில் இல்லாத நிலையிலும் பாமர மக்களை நினைப்பதிலும் அவர்க்குத் தம்மால் இயன்றவற்றைச் செய்வதிலும் காலம் கழித்தார் காமராசர். 1975ஆம் ஆண்டு அக்டோபர் 2ஆம் நாள் காந்தியடிகள் உலகில் தோன்றிய அதே புண்ணிய நாளிலே காந்திதாசனாக விளங்கிய காமராசர் காந்தியடிகளின் மெய்யான ஒரே சீடன் நான் என்று காட்டுவதுபோல் தமது வாழ்வை முடித்துக் கொண்டார். வானம் அழுது கொண்டிருக்க அந்த மழை நாளிலே அவர் இந்த உலக வாழ்வை நீத்தது அவருடைய இழப்பிற்காக வானமே அழுவது போலிருந்தது.

காமராசர் இறந்தார். காங்கிரசும் பிளவுபட்டுப் பழைய நிலையை இழந்து இறந்தது போலவே ஆயிற்று. காங்கிரஸ் துண்டுபட்டபின் அதிலிருந்து பிரிந்து சென்றவர்கள் பல்வேறு பெயர்களில் பல்வேறு கட்சிகளை அமைத்துக் கொண்டு செயல்படத் தொடங்கினர். ஆனாலும் இந்தத் தனித்தனிக் கட்சிகள் ஒவ்வொன்றும் பெருந்தலைவரைத் தமது மானசீகத் தலைவராக ஏற்றுக் கொண்டே செயல்படுகின்றன.

ஒரு காலத்தில் சேர சோழ பாண்டியர்கள் தனித்தனி எல்லைகளை வகுத்துக் கொண்டு, தனித்தனி அரசர்களாக இயங்கினாலும் 'தமிழ்' அனைவருக்கும் பொதுவானதாகவே விளங்கிற்று.

அது போலவே காங்கிரஸ் மகா சபை இன்று பிரிந்து தனித்தனியே இயங்கினாலும் காமராசர் மட்டும் அனைவருக்கும் பொதுவான வராகவே விளங்குகிறார்.

இதனால் காமராசர் இறந்தும் வாழ்கிறார். இன்றும் அவர் செயல்படுகிறார் என்பதில் ஐயமே இல்லை. இன்று ஆட்சிப் பொறுப்பேற்றுள்ள லோக்தள் கட்சியின் மூத்த தலைவர் குருபாத சாமி அவர்கள் காமராசர் திட்டத்தின் இன்றைய அவசியம் குறித்துப் பேசியுள்ளார். அவர் கூறுகிறார்-

''அறுபதுகளில் காமராஜ் திட்டம் பிரதமர் நேரு அவர் களுக்கு அவர் தமது அமைச்சரவையிலிருந்து சிலரைக் கழித்துக் கட்ட வாய்ப்பளித்தது; அது போல் புதுக் காமராஜ் திட்டம் ஒன்று கட்சியின் முன்னேற்றத்திற்குக் குந்தகம் விளைவிக்கும் தீய சக்தி களை ஒழித்துக்கட்ட வரவேண்டும்''.[1]

காமராசர் வாழுகிறார் என்பதற்கு இதனினும் மேலான சான்று வேண்டுமோ?

## காமராசர் வாழ்க்கையின் முக்கிய நிகழ்ச்சிகள்

| ஆண்டு | நிகழ்ச்சி |
|---|---|
| 1903 | சூலை 15 பிறப்பு |
| 1919 | காங்கிரசில் சேர்ந்தார் |
| 1920 | ஒத்துழையாமை இயக்கம்—பங்கேற்றது |
| 1922 | சாத்தூர் மாநாடு—பங்கேற்றது |
| 1923 | கொடிக்கிளர்ச்சி |
| 1923 | கள்ளுக்கடை மறியல்—பங்கேற்பு |
| 1925 | நீல்சிலை அகற்றல் |
| 1926 | வைக்கம் போராட்டம் |
| 1928 | சைமன் கமிஷன் எதிர்ப்பு |
| 1930 | உப்பு சத்தியாகிரகம் |
| 1932 | சட்டமறுப்பு இயக்கம் |
| 1934 | வெடிகுண்டு வீசியதாக வழக்கு |
| 1937 | விருதுநகர் தொகுதியிலிருந்து தேர்வு—தமிழ்நாடு காங்கிரஸ் செயலர் யுத்த நிதித்தடுப்பு |
| 1941 | தனியார் சத்தியாகிரகப் பெயர்ப்பட்டியலை காந்தியடி களிடம் வழங்கச் சென்றபோது இரயிலில் கைதானது. |

1. இந்தியன் எக்ஸ்பிரஸ்—செய்தி 27-5-90.

1942 வெள்ளையனே வெளியேறு போராட்டம்
1946 தமிழ்நாடு காங்கிரஸ் தலைவரானது
1948 ,, ,,
1952 ,, ,,
1954 முதல்முறை முதலமைச்சரானது
1954 குடியாத்தம் தொகுதியிலிருந்து சட்டசபைக்குத் தேர்வு
1956 மதிய உணவுத் திட்டம்
1957 2ஆம் முறையாக முதலமைச்சர்
1962 3ஆம் முறையாக முதலமைச்சர்
1963 காமராசர் திட்டம் பதவி விலகல்
1966 வெளிநாடு பயணம்
1969 நாகர்கோவில் தொகுதியிலிருந்து நாடாளுமன்றத் திற்குத் தேர்வு
1969 கட்சியில் பிளவு—எதிரணியில் நின்றது
1971 நாகர் கோவில் தேர்தல் வெற்றி
1975 அக்டோபர் 2 மறைவு

# காமராசர் நல்லாட்சி

உலகில் மனிதர் தினம் தினம் பிறக்கிறார்கள். தினம் தினம் இறக்கவும் செய்கிறார்கள். இவர்களுள் வாழ்ந்ததற்கான அடையாளச் சுவடின்றி மறைந்து போய் விடுகிறவர்கள் பலர். சிலரோ இறந்தும் வாழ்கிறார்கள். வெற்று வாழ்க்கை வாழ்ந்து மறைந்து போய்விடுகிற மனிதர்களைப் பிணங்கள் என்றே குறிப்பிடுகிறார் பேராசிரியர் சுந்தரம்பிள்ளை,

"தினம் தினம் பிறந்து
தினம் தினம் இறக்கும் பிணம்பல
இவரெலாம் பிறந்தவர் என்பவோ?
உதும்பர தருவின் ஒருகனி அதனுள்
இருந்திடும் மசகம்
இவரினும் கோடி"

அவ்வாறன்றி மண்ணில் பிறந்து பிறருக்குப் பயன்பட வாழ்ந்து மறைந்தவர்கள்; மறைந்தாலும் மக்களின் மனக் கண்களில் பீடும் பேரும் எழுதிய நடுகற்களாய் நீங்காது நிற்கிறார்கள். இவர்களோ:

"பயன் உறுப்பப் பிறர்க்காற்றி
ஏமம் ஆக இந்நிலம் ஆண்டோர் சிலரே"[1]

என்பது போல் மிகச் சிலரே. கர்மவீரர் என்றும் பெருந்தலைவர் என்றும் பலராலும் பாராட்டப் பட்ட காமராசர் அத்தகைய அரிய பெருமக்களுள் ஒருவர். உலகம் அழியாமல் நிலை பெற்று நிற்கிறதென்றால் இவர்களைப் போன்றவர்களால்தான் என்கிறது புறநானூறு. இவ்வுலகை நீத்து 13 ஆண்டுகள் ஆனபிறகும் (1988)

---

1. புறநானூறு 360: 7-8

'இதோ இருக்கிறார் காமராசர்' என்று ஒரு நூல் அவர் மீது எழுகிறதென்றால் இறந்தும் வாழ்கிறார் இத்தலைவர் என்பது உண்மையாகி விட்டதல்லவா?[1]

சேரன் கோக்கோதைமார்பன் என்ற சங்க காலத்து அரசனைப் பொய்கையார் என்ற புலவர் பாராட்டிப் பாடும் போது,

"தினைப்புலக் காவலர்கள் பறவைகளைத் துரத்த தட்டை என்ற கருவியை ஒலிக்கும்போது அருகாமையிலுள்ள நீர் நிலைகளிலிருந்தும் பறவைகள் எழுந்து ஒடுவது போல உன் புகழ் ஒன்றைக் கூறத் தொடங்கினால் உனது எத்தனையோ பிற சாதனைகள் நினைவிற்கு வந்து எதைச் சொல்லி உன்னைப் புகழுவதென்றே தெரியாமல் போகிறதே,—

"புனவர் தட்டைப் புடைப்பின் அயலது
இறங்கு கதிர் அலமரு கழனியும்
பிறங்கு நீர்ச்சேர்ப்பினும் புள் ஒருங்கு எழுமே"[2]

காமராசரைப் பற்றிச் சொல்லக் கருதுகிறவர்கள் நிலையும் இதுவே ஆகிறது. ஆட்சி நடத்துகையில் அத்துணை அளவிற்குச் சாதனைகளைப் புரிந்தவர் அவர்.

அமெரிக்க நாட்டின் முன்னாள் குடியரசுத்தலைவர் ஒருவர்— "காமராஜ் ஒருவர்தான் பாரத நாட்டில் என்னைக் கவர்ந்த தலைவர்", என்றார்.[3] நமது நாட்டின் குடியரசுத் தலைவர் மேதகு வெங்கட்ராமன் அவர்கள் "அரசியல்வாதி என்று அவரைக் கூறுவதைக் காட்டிலும் அரசியலைக் காக்க வந்த ரட்சகர் என்று கூறலாம்" என்பதாகப் பாராட்டியுள்ளார்.[4]

வள்ளல் ஆயைப் புகழ்ந்து பாடிய ஏணிச்சேரி முடமோசியார் வட திசையில் பளுவான இமயத்தின் பாரத்தால் நாடு வடபக்கம் குடை சாய்ந்து விழாமலிருப்பதற்குக் காரணம், தென் கோடித் தமிழ்நாட்டின் ஆய்வள்ளலின் பலம் வாய்ந்த குடி திகழ்வதால் தான் என்றார்—

---

1. நாராயணசாமி. டி.ஆர்; 'இதோ இருக்கிறார் காமராஜ்'; கங்கை புத்தக நிலையம்; சென்னை; மு.ப. 1988
2. புறநானூறு: 49
3. நாராயணசாமி. டி.ஆர்; 'இதோ இருக்கிறார் காமராஜ்' ப. 143
4. நமசிவாயம், கு: காமராசர் வரலாறு, முன்னுரை

"வடதிசையதுவே வான் தோய் இமயம்
தென்திசை ஆஅய்குடி இன்றாயின்
பிறழ்வது மன்னோ"[1]

இதைப் போலவே இந்த நூற்றாண்டிலும் பிற்காலப் பாரத அரசியலில் தென்னகத்தின் தனிப் பெருந்தலைவராகக் காமராசர் தலை தூக்காமலிருந்திருந்தால் வடபாரத மட்டத்தில் நேருஜி மோரார்ஜி என்று பெருந்தலைவர்கள் தோன்றி வளர்ந்து நின்ற நிலையில் பாரத அரசியல் சமநிலை கொண்டு விளங்கியிருக்காது. காமராசர் சகாப்தம் பாரத நாட்டின் வரலாற்றிலேயே தனிச் சிறப்புடையதாகும். ஒரு உபகண்டத்தின் வரலாற்றினையே மாற்றியமைத்த மாமனிதர் காமராசர். பெருந்தலைவர் என்றனர் அவரை, கர்மவீரர் என்றனர், ஏழை பங்காளன் என்றனர், கறுப்புக்காந்தி என்றனர். பெற்ற பட்டங்களும் கொண்ட விருதுகளும்தான் கொஞ்சமா? இவர் பிறந்த ஊரும் விருதுநகர் என்றல்லவா பெயர்கொண்டது!

### பொற்காலம் கண்ட காமராசர்

அகில இந்திய காங்கிரஸ் கட்சியின் தலைவராகப் பெருந் தலைவர் நியமனம் செய்யப்பட்டபோது, அதற்கென்றமைந்த பாராட்டுக் கூட்டத்தில், சுப்பிரமணிய அய்யர் உழைப்பால் உயர்ந்த உத்தமர் காமராசர் அரசியல் வாழ்வில் கண்ட வளர்ச்சியை மிக அழகாக வருணித்தார். அவர் கூறினார்:

"திரு சத்தியமூர்த்தியின் பின்னர் காமராஜை நான் பிள்ளை யாகப் பார்த்திருக்கிறேன். நான் இன்னும் அப்படியே இருக்கிறேன். அவர் உயர்ந்திருக்கிறார். அன்று அவரை நான் குனிந்து பார்த்தேன். இன்று அண்ணாந்து பார்க்கிறேன்"[2]

தம்மை வளர்த்துக் கொண்டவர் மட்டுமல்ல, பிறந்த பொன்னாட்டையும் நல்ல நிலைக்குக் கொண்டு வந்தவர் பெருந் தலைவர். 'அரசு' என்று எடுத்துக் கொண்டால் தமிழர் போற்றும் தகைமை வாய்ந்த அரசு சங்க கால அரசே. அக்கால அரசுகளின் நிகழ்ச்சிகளை வரலாற்றுப்பதிவு போல் தன்னுள் செய்யுள் வடிவில் கொண்ட நூல் புறநானூறு ஆகும். அன்றைய அரசியல் தலைவர்களின் அரசு முறை, நீதி, மக்களைப் பாதுகாத்தல் ஆகிய அனைத்துக் கூறுகளையும் அதிலிருந்து இன்றும் நாம் படித்து

---

1. புறநானூறு 132 : 7-9
2. அருண் : புவனேசுவர் காங்கிரஸ் ப. 3

மகிழ முடிகிறது. முடியுடை அரசன் ஒருவனைக் கொண்டதே சங்க காலத்தின் ஒரு அரசு என்றாலும், மிக நல்ல மக்களாட்சியே அன்று நிலவியதென்பதை அறிகிறோம்.

> "கண் பொர விளங்குநின் விண் பெருவியன் குடை
> வெயில் மறைக் கொண்டன்றோ? அன்றே வருந்திய
> குடிமறைப்பதுவே; கூர்வேல் வளவ"[1]

என்ற வெள்ளைக்குடி நாகநாரின் அறைகூவல் முடியாட்சி என்பது குடியாட்சி முறைக்கு மடை திருப்பி விடப்பட்டதையே காட்டு கிறது. இத்தகைய புறநானூற்றுக்கால அரசைத்தான் 'பொற் கால அரசு' என்று முன்னர் புகழ்ந்தனர். இலக்கியவாதிகளும், வரலாற்றாளர்களும், காமராசரின் ஆட்சிக் காலமும் இந்த 20ஆம் நூற்றாண்டின் 'பொற்கால அரசு' என்று அரசியல் ஞானிகளால் குறிக்கப்படுகிறது. பட்டிகள்தோறும் பள்ளிகள், கிராமங்களெல் லாம் மின்சாரம், சாலைகள் சீரமைப்பு என்று காமராசர் முதலமைச்சராய் இருந்த காலத்தில் அவரது அரசு முழுச்சாதனை அரசாகவே விளங்கிற்று. 9 ஆண்டுக் காலங்கள் தமிழகம் தனிப் பெரும் வளர்ச்சியைக் கண்டது. இப்போது காணும் முன்னேற்றங் கள் பலவும் கூட அந்தக் குறிப்பிட்ட கால வளர்ச்சியின் தொடர்ச் சியே என்பது அரசியல் அறிஞர்தம் கருத்தாகும்.

> "காமராசர் இருந்த காலம் தமிழகத்தின் பொற்காலம்; அதன் பலனை அதன் தொடர்ச்சியைத்தான் இன்றும் நாம் அனுப வித்துக் கொண்டிருக்கிறோம்" என்றார் ஒரு அரசியல் அறிஞர்.[2]

இவ்வாறு 2 ஆம் நூற்றாண்டின் மற்றும் 20 ஆம் நூற்றாண்டின் தமிழக அரசியல் நிலையில் பொதுவாகக் காணும் உண்மை—மக்களாட்சி—என்பதைத் தவிர்த்துவேறில்லை; இரண்டு கால கட்டத்தின் அரசுகளும் பொற்காலம் கண்டுள்ளன. இப்பொது உண்மையின் அடிப்படையில், இவ்விரண்டுயுக அரசுகளும் ஒப்பாய் விற்குரியன. அவ்வாறான ஓர் ஆய்வு தனக்கென்று எதையும் பேணாது தூக்கத்தையும் மறந்து நாட்டிற்குழைத்த காமராச ரைப் பாராட்டுதற்கமைந்த ஒரு புது முறையாகலாம். அவ்வா றன்றி அன்னாரின் அரசியல் வாழ்வு பற்றிய நூல்கள் இந்நாள் வரையிலும் ஏராளம் எழுந்துள்ள நிலையில், அவரது

1. புறநானூறு : 35; 19-21;
2. சம்மந்தம் என். எஸ். கல்வி வள்ளல் காமராசர்—12 ஆம் ஆண்டு நினைவு மலர்,

வாழ்க்கையை அது அமைந்தவாறே இப்போதும் பேசுவது கூறியது கூறலாகவே அமையும். புறநானூற்றுத் தலைவர்கள் போற்றப்பட்டது போலவே 20 ஆம் நூற்றாண்டின் அறிஞரும் பிறரும் காமராசரை அவரது ஆட்சி ஆற்றலுக்காய்ப் புகழ்ந் துள்ளனர். அதனால் இவர் பெற்ற பாராட்டுக்குரிய தகுதிக ளெல்லாம் புறநானூற்றுத் தலைவர்களின் சீர்மைகளோடு ஒப்பிட்டு ஆயும் வகைக்கு இடமளித்துள்ளன. காமராசர் பற்றிய பாராட்டுரையொன்றில் தற்காலத்தின் பிரபல தமிழறிஞர் ஒருவரும் இவ்வாறான ஒப்பீட்டு விளக்கமொன்றினையே தந்துள்ளார். அது பின்வருமாறு அமைகிறது—

''உண்டாலம்ம இவ்வுலகம்
தமக்கென முயலாநோன்றாள்
பிறர்க்கென முயலுநர் உண்மையானே''

என்று இளம்பெருவழுதி என்ற அரசபுலவன் புறநானூறு எனும் சங்க இலக்கியத்தில் பாடியிருக்கிறான். காமராசரின் தன்னலமற்ற வாழ்க்கை இளம்பெருவழுதியின் இப்பாட்டிற்கு ஒரு சீரிய சான்றாகத் திகழ்கிறது.[1] 'சங்க காலம்-காமராசர் காலம்' என்ற ஒப்பீட்டாய்விற்கு மேற்சொன்ன உரை ஒரு சிறந்த முன்னுரை யாகலாம்.

### காமராசர் பெருந்தலைவர்

பாரத நாட்டில் எத்தனையோ தலைவர்கள் தோன்றிப் புகழுடன் நிலைத்திருந்தாலும் பெருந்தலைவர் என்ற சிறப்பு காமராசருக்கென்றே அமைந்து விட்ட ஒன்றாகத் திகழுகிறது. பெருந்தலைவர் யார்என்று ஒருவினாடி வினாவைக் கேட்டால் ஒரு பள்ளிச்சிறுவன் கூட, அவர் காமராசர் என்பான். புறநானூற்றுத் தலைவர்களையும் அக்காலத்துப் புலவர்கள் 'பெரும்' என்றே மிகுதியும் விளித்துப் பேசினர். பெரும என்பது 'பெருந்தலைவர்' என்ற சொல்லுக்கு ஒப்ப விளங்கும் சொல்லே ஆகிறது. ''மன்னுக பெரும''[2] ''இனியை பெரும''[3] ''அஃது என்னே பெரும''[4] ''யானோ தஞ்சம் பெரும''[5]

---

1. நாரண துரைக்கண்ணன்;
2. புறநானூறு 91 : 7
3. ஷை 94 : 3
4. ஷை 167 : 11-12
5. ஷை 34 : 18

பெரும, பெருமகன் என்ற தகுதிகள் பொருந்த காலத்திற் கேற்றபடி, சங்க காலத் தலைவர்களே புரிந்திருந்த தனித் தனிச் சிறப்புகளுக்காகச் சிறப்படைகள் தந்து அவர்கள் பெயர்கள் புறநானூற்றில் குறிக்கப்பட்டுள்ளதை அறிவோம். தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன், கடல் பிறக் கோட்டிய செங்குட்டுவன், கானப் பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி, தகடூர் எறிந்த பெருஞ் சேரல், இராசசூயம் வெட்ட பெருநற்கிள்ளி - அந்தந்தச்சாதனை களால் அவர்தம் பெயர்கள் சிறப்பிக்கப்பட்டதை அறிகிறோம். பிற்காலத்தில் விடுதலை வேள்வியில் குதித்த வீரர்களும், கொடி காத்த குமரன் என்றும், செக்கிழுத்த சிதம்பரனார் என்றும் சிறப்படைகளுடன் அறியப்படுவது ஒப்பிட்டு மகிழத்தக்கது' காமராசர் இவ்வகையில் 'கல்வி வள்ளல்' ஆகிறார். மேற் சொன்ன புறநானூற்றுக் காலத்தின் தலைவர்கள் வீரமரணம் அடைந்த இடங்கள் அவர்கள்தம் பெயர்களோடு வைத்து, காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி, சோழன் இலவந்திகைப்பள்ளி துஞ்சிய நலங்கிள்ளி, குராப்பள்ளி துஞ்சிய கிள்ளி வளவன், பாண்டியன் சித்திர மாடத்துத் துஞ்சிய நன்மாறன் என்று இணைக்கப்பட்டுச் சிறப்பிக்கப்பட்ட வகையைப் புறநானூற்றின் வழி அறிகிறோம். பிற்கால நிலையில் நேர் மாறுபட்டவகையாகப் பிறந்த இடங்கள் இவ்வாறு சிறப்பிக்கப்படுவதை அறிகிறோம்; தந்தை பெரியாரால் ஈரோடும், அறிஞர் அண்ணாவால் காஞ்சி யும், காமராசரால் விருதுநகரும் பெயர் மணக்க நின்றன.

### காமராசர் ஏழைபங்காளன்

அரசியல் தலைவர்களுள் காமராசருக்கென்றே அமைந்து விட்ட மற்றொரு சிறப்புப் பெயர்—ஏழைபங்காளன்—என்பது. அதியமான் நெடுமானஞ்சியை ஔவையார் பாடும்போது —

> "உண்டாயின் பதம் கொடுத்து
> இல்லாயின் உடன் உண்ணும்
> இல்லோர் ஒக்கல் தலைவன்
> அண்ணல் எம் கோமான்"[1] என்கிறார்.

இப்புகழ்ச்சியுரையில் வரும் 'இல்லோர் ஒக்கல் தலைவன்" என்பது ஏழைபங்காளன் என்ற காமராசருக்கமைந்த பாராட் டுரைக்கு நேருக்கு நேர் ஒத்து நிற்பதாகும். 20 ஆம் நூற்றாண்டுத்

1. புறநானூறு 92 : 6-9

தமிழகத்தின் 'இல்லோர் ஒக்கற்றலைவர்' காமராசரே. ஆராய்ச்சி மணி கட்டி ஆண்ட முற்காலத் தலைவர்களைப் போலவே ஏழைகளின் குறைகளைக் கேட்டறிய எப்போதும் வாசல் திறந்து வைத்திருந்தார் காமராசர். அடையா நெடுங் கதவும் அஞ்சல் என்ற சொல்லும் என்பது போல் பாமர மக்களுக் குத் திறந்த வாயிலாக அவரது இல்லமும் பரந்த உள்ளமும் விளங்கின. யாரேனும் காண வருவோரை உடன் இருப்பவர் தடுத்தால், அவர்களைக் கண்டித்து 'ந்தா அவரை வர விடுன்னே, அவர் வரட்டுன்னே' என்று குறைகேட்க முந்தும் கருணைத் தலைவராகவே அவர் விளங்கினார். இதுபற்றி முதுபெரும் காங்கிரஸ்காரர் ஒருவர் கூறுகிறார்—

> "இவர்களின் இல்லமே ஒரு தேசிய இல்லம்தான். முன்புறக் கதவுகள் சாத்தப்படுவதே இல்லை."[1]

ஒரு தலைவர் இறந்த பிறகே அவரது இல்லத்தை நினைவாலய மாக மாற்றி நாட்டுக்கர்ப்பணிப்பதென்றுள்ளது. ஆனால் காமராசரைப் பொறுத்த மட்டில் அவரது உள்ளமும் இல்லமும் அவர் வாழ்ந்த காலத்திலேயே நாட்டுடைமை ஆகியிருந்தன. முரசுக் கட்டிலிலே களைப்பு மீதுற உறங்கிவிட்ட புலவரை வாளால் துணிக் காதது மட்டுமன்றி அவருக்குச் சாமரம் வீசின புறநானூற்றுக் கால மன்னன் ஒருவனின் தொண்டுள்ளத்தை இரண்டாம் நூற்றாண்டிலேயே விளங்கித் தோன்றக் காணுகிறோம். சில மணித்துளிகள் புலவர் உறங்கி எழும் அளவையும், தனக்குரிமையா யிருந்த முரசுக் கட்டிலைத் தமிழுக்குடைமையாக்கியிருந்தான் அம்மன்னன் என்பது தானே அதன் பொருள்—

> "நுரை முகந்த மென் பூச்சேக்கை
> அறியாது ஏறிய என்னைத் தெறுவர
> இருபாற்படுக்கும் நின்வாள் வாய் ஒழிந்ததை
> அதூஉம் சாலும் நல்தமிழ் முழுது அறிதல்"[2]

இரும்பொறை என்ற அந்த அரசனின் பெயருக்கேற்ப மிகுந்த பொறுமையும் அவன் பால் மிகுந்திருந்தது. இவ்வாறே பொறுமை யுடன் முறை கேட்டவர் பெருந்தலைவர் காமராசர். இதனாலேயே ஏழைபங்காளன் என்ற இல்லோர் ஒக்கல் தலைவராகப் பாராட்டப்பட்டார். ஏழைகளுக்காகவே வாதாடிய வர் அவர். அவர் கூறிகிறார்—

---

1. சோமயாஜுலு (ப. ஆ) நெல்லை மாவட்ட சுதந்திரப் போராட்ட வீரர் வரலாறு; ப. 202
2. புறநானூறு 50

"கோடி வைத்திருப்பவனைக் கோடீஈசுவரன் என்கிறோம் பணம் படைத்தவன் என்பதற்காக ஒருவனை ஈசுவரனாக்கிக் கடவுளாக்கிவிடும் இந்தப் புத்தி சமுதாயத்திற்கு எப்படி நன்மை தரும்?"[1]

தாழ்த்தப்பட்டோருக்காகக் குரல் கொடுத்த காமராசர், மற்றொரு சூழலில் கூறுகிறார்—

"பாரதத்தில் வரும் தருமன் ஆட்சியை, தன் உடன் பிறப்பை, தன் மனைவியை ஏன் தன்னையே அடகு வைத்துப் பகடையாடினான். அவனை நாடு தருமவான் என்கிறது. உயர் குலத்தில் பிறந்தவன் என்பதற்காகச் சமுதாயக் குற்றச் சாட்டிலிருந்து தப்பித்துக் கொள்ளுகிறான்."[2]

இதையொத்த மற்றொரு சூழ்நிலையும் புராணங்களில் உண்டு. அனுமன் இலக்குவனின் உயிர் காக்க, சஞ்சீவி மலையைத் தூக்கினார். ஸ்ரீகிருஷ்ணரும் பசுக்களைக் காக்க கோவர்த்தன கிரியைத் தூக்கினார். என்றாலும் மலை எடுத்தவர் என்ற பொருளுடைய 'கிரிதாரி' என்கிற பட்டம் ஸ்ரீ கிருஷ்ணருக்கே நிலைத்து விட்டது. பகிர்ந்தளிப்பு மேலோன் கீழோன் என்ற பாகுபாடின்றி அமையவேண்டும் என்றே காமாரசர் விரும்பினார்.

தமது கருணை உள்ளத்தைப் பேச்சளவில் வைத்துக் கொண்டவர் அல்லர் காமராசர். செயல்படுத்திக் காட்டியவர். முதலமைச்சர் என்ற நிலையிலும் மக்களில் ஒருவராகவே அவர் வாழ்ந்தார். இவர் தாம் அமைச்சர் என்பதை மறந்து சாதாரண மனிதர் போல் நடந்து கொள்கிறார் என்ற குற்றச்சாட்டே கூட இவரைக் குறித்து அதிகாரிகள் நிலையில் நிலவியது.

தமிழ் நாட்டை வெள்ளம் பாதித்த ஒரு சமயம், அதிகாரிகளுடன் அவ்விடத்திற்குப் பயணம் மேற்கொண்டார் பெருந்தலைவர். உடனிருந்த அதிகாரிகள் தடுத்தும் கூட, தண்ணீரில் இறங்கி வெகுதூரம் வரையில் பாதிப்பைக் கண்காணிக்கும் பொருட்டுச் சென்று விட்டார். "ஒரு முதல்வரா இப்படிச் செய்வது? மரியாதை என்ன ஆவது? சம்பிரதாயம் என்னாவது"?— இவ்வாறு அதிகாரிகள் தங்களுக்குள் புழுங்கத் தொடங்கினர். இந்நிகழ்ச்சியை நேரில் கண்டவர் வியந்து கூறுகிறார்:

---

1. கல்வி வள்ளல் காமராசர் 12 ஆம் ஆண்டு நினைவு நாள் மலர்.
2. நமசிவாயம். மு., மக்களாட்சி காமராஜ் ப. 90

"இப்படிச் சொல்லிக் கொண்டே பெருந்தலைவர் வேட்டியை மடித்துக் கட்டிக் கொண்டு, மேல்துண்டை எடுத்து தலையில் முண்டாசு கட்டிய படியே தண்ணீரில் இறங்கிவிட்டார்."[1]

பாரத நாட்டை 'எங்கள் தந்தையர்நாடு' என்று பெருமிதத்துடன் கூறினார் பாரதியார். அவர் காலத்தும் காமராசர் போல் தந்தையராய் விளங்கின தலைவர்களை நினைத்தே அவர் அவ்வாறு பாடினார் போலும். மற்றபடி தாய்நாட்டை 'அன்னை' என்று குறிப்பதுதான் மரபு. குமரிமாவட்டத்து மக்கள் காமராசரை அப்பச்சி (தந்தை) என்றே அழைத்தனர். புற நானூற்றுப் புலவர்கள் புரவலரான அரசர்களை 'எந்தையே' என்று மிகுதியும் குறிப்பது இங்கே ஒப்பு நோக்கத்தக்கது.— "இரவிநோனே ஈந்தேன் தந்தை"[2] 'எந்தை சேட்சென்னி' 'நலங்கிள்ளி'[3] இது போல இன்னும் பல இடங்களைச் சுட்டிக் காட்டலாம்.

**காமராசர் கருமவீரர்**

பெருந்தலைவர்க்கு அமைந்த பிறிதொரு சிறப்புப்பட்டம் கருமவீரர் என்பதாகும். கருமமே கண்ணாகக் கொண்ட கரும வீரர்கள் நடவடிக்கைகள் பற்றி குமரகுருபரர் பட்டியலில் தந்துள்ளார்—

மெய்வருத்தம் பாரார், பசிநோக்கார், கண்துஞ்சார், செவ்வி அருமையும் பாரார், அவமதிப்பும் நாடார்.—என்பது அது, 9 ஆண்டுகள் ஆட்சியில் ஒரு நூற்றாண்டுச் சாதனையைச் காமராசர் நிகழ்த்தினார். அது எவ்வாறு? மெய்வருத்தம் பாராது, பசிநோக்காது, கண்துஞ்சாது, செவ்வி அருமை பார்க்காது; அவமதிப்பையும் பொருட்படுத்தாது. ஆதலின் அவர் கருமவீரர். தமிழகத்தில் அடங்கின இருபதாயிரம் கிராமங்களில் 75%மின் வசதி பெற்றது இவரது காலத்தில்தான். 1950-51ல் இருந்ததை விட 3025 ஆரம்பப்பள்ளிகள் அதிகமாயின. நாட்டுப் பணியையே வீட்டுப் பணியாகச் செய்த அவர் கருமவீரரே. அவர் ஆட்சிப் பொறுப்பில் இருந்த காலத்தில், சென்னை மாநகராட்சிக்கு அவரால் கிடைத்த ஆதரவில் மகிழ்ந்து அப்போதைய மேயர் பாராட்டிய பாராட்டு இதோ:

---

1. சவுந்திரபாண்டி—பேட்டி; மறக்க முடியாத மாபெருந் தலைவர் - பேட்டிகளின் தொகுப்புநூல்.
2. புறநானூறு 376 : 16
3. ௸ 20 : 10

"பெருந்தலைவர் அவர்களை ஒரு மகாத்மா என்று குறிப்பிட வேண்டும். ஏழை எளியவர்க்குத் தம் இரத்தத்தைச் சிந்துபவனே மகாத்மா, இல்லையேல் துராத்மா ஆகிறான் என்றார் சுவாமி விவேகானந்தர். இவர் கருத்துப்படி காமராஜ் அவர்களை மகாத்மாவாகக் கருதலாம்."[1]

பொறுப்பிலிருப்பவர்கள் கண்ணயராமல் உழைக்கவேண்டும் என்பது பெருந்தலைவரின் கொள்கை. "மந்திரியாக இருப்பது மாலை வாங்கிக் கொண்டு சுற்றுவதற்கு அல்ல" என்றார் அவர்.[2] "கண் பொர விளங்கும் நின் விண்பொரு வியன் குடை, வெயில் மறைக் கொண்டன்றோ"[3] என்ற வெள்ளைக்குடி நாகனாரின் கடிந்துரையைக் காட்டிலும் கடுமையான உரையே ஆகும் இது. மூச்சுக்கு மூச்சு சாதனையை விரும்பினவர் அவர். அவர் கூறுகிறார்—

"வெந்த சோற்றைத் தின்று விதிவந்தால் சாவு என்றா இருக்க முடியும்?"[4] மனிதனாகப் பிறந்தவன் கடினமாக உழைத்து ஏதேனும் சாதனையைப் புரிந்தாக வேண்டும் என்பதே காமராசரின் இந்த எளிய உரையின் விளக்கமாகும். அவர் கூறியது போலவே அவர் நாட்டிற்காக உழைத்தார். கர்மவீரர் என்ற சிறப்பை மெய்யாகவே நிருபித்துக் காட்டினார். "காமராஜ் உழைப்பின் உருவம், தேசபக்திச் சுடர் பொலியும் உள்ளத்தினர்"[5] என்றே பாராட்டினர் பலரும். புறநானூற்றுத் தலைவர்கள் 'பெரும' என்று அழைக்கப்பட்டுப் பாராட்டப்பட்டதைப் பல இடங்களில் காணலாம் புறநானூற்றில். "படை தொட்டனனே குருசில்"[6] 'பரிசில் மன்னும் குருசில்'[7] இவ்விளி பயன்படும் இடங்களிலெல்லாம், அத்தலைவர்களின் படைத் திறமோ அல்லது கொடைத் திறமோ ஆகியசெயல் வீரம் குறிக்கப் படுவது நோக்கத் தக்கது. அதியமானின் பகைவர்களை அவ்வையார் எச்சரிக்கும் போது நீரிலே யானையையே வீழ்த்தி விடும் முதலையைப் போன்ற என் தலைவன் 'கருமவீரன்' என்பதை மறந்து இளையவன் என்ற கருத்தில் வந்து நாடு

1. சீனிவாசன். கெ.என்.; காமராசர் காலத்தில் சென்னை மாநகராட்சி; ப. 5
2. நமசிவாயம். மு.; மக்களாட்சி காமராஜ், ப.73
3. புறநானூறு 35 ; 19-20
4. நமசிவாயம். மு., மக்களாட்சி காமராஜ் ப. 166
5. திருநாவுக்கரசு; காமராஜ் வரலாறு; முன்னுரை
6. புறநானூறு 341 : 16
7. ௸

கொள்ள நினையாதீர் என்றுரைத்தார்—"தாள்படு சில்நீர்க் களிறு அட்டு வீழ்க்கும்; ஈர்ப்புடை கரா அத்து என்னை, நுண்பல் கருமம் நினையாது; இளையன் என்று இகழின் பெறல் அருநாடே"[1]

**காமராசர் கருப்புக் காந்தி**

அருங்குணங்கருதிப் பெருந்தலைவர் என்று காமராசர் பாராட்டப்பட்டது போல, உடலுழைப்பை வைத்துக் 'கருமவீரர்' என்று பாராட்டப்பட்டது போல, உடல் வண்ணத்தாலும் ஒரு பட்டத்தைக் கட்டிக் கொண்டார். அது கறுப்புக் காந்தி என்பது. காந்தியடிகளோடு ஒப்பவைத்து அவரை மக்கள் தென்னாட்டுக் காந்தி என்றது ஒரு பக்கம். காந்தியடிகளின் வாரிசு அல்லது காந்தீயப் பெருந்தலைவர் அவர் என்பது அவர்களின் கருத்தாக லாம். காமராசர் காந்தியடிகள் போன்றவரே; உள்ளத்தூய்மை யில், அகிம்சை தருமத்தில்; ஏழையை நேசித்ததில். சாவி மிகப் பொருத்தமாகவே பின் வருமாறு கூறினார். "மேல் சட்டையைக் களைத்து விட்டு கையிலே ஊன்று கோலை எடுத்துக் கொண்டால் காமராஜ் அசல் காந்தியாகவே மாறி விடுவார்"[2] முன்னாள் ஆளுநர் கே.கே.ஷா. குறிப்பிடும் போது 'அவரது (காமராசர்) தூய்மையான வாழ்க்கை ஐயப்பாட்டிற்கப்பாற் பட்டது' என்றார்.[3] காமராசருக் கமைந்த கறுப்புக் காந்தி என்ற சிறப்புப் பெயரையும் சங்க காலத்தலைவர்களின் சிறப்புப் பெயர்களோடு ஒப்ப வைத்துச் சிந்திக்க இயலும். கருமையின் பெயராலேயே கரிகால் பெருவளத்தான்—கருங்கை ஒள் வாட் பெரும் பெயர் வழுதி, என்று சங்க காலத்துத் தலைவர்களின் சிறப்புப் பெயர் களுக்கு, 'கறுப்பு' அடைச் சொல்லாக வருவதைக் காண்கிறோம். கருங்கை, கருங்கால் என்று கறுமைப் பட்ட அவயவங்களே அரசர்க்கு அன்று பாராட்டப்பட 2 ஆம் நூற்றாண்டிலிருந்து 20 ஆம் நூற்றாண்டின் வளர்ச்சிபோல காமராசருக்கு முழுமேனி அளவும் 'கறுமை' என்பதால் பாராட்டப்பட்டது எனலாம். முன்னைய அரசர்க்குத் திகழ்ந்த இப்பாராட்டில் 'கறுப்பு' வைரத் தைக் குறித்த குறியீட்டு மொழியாகலாம். போரில் வல்லவரான அவர்களது காலும் கையும் வைரம் போல் உரங் கொண்டிருந்த தைக் குறித்த பாராட்டாகலாம் அது. காமராசரும் வைரம் பாய்ந்த உடம்பினரே. கறுமை இத்தலைவர்களுக்கெல்லாம்

1. புறநானூறு 04 : 3-5
2. சாவி; சிவகாமியின் செல்வன்; முன்னுரை
3. சீனிவாசன். கெ.என்.; காமராஜ் காலத்தில் சென்னை மாநகராட்சி; ப. 11

அணியே ஆயிற்று. இதனை வைத்து வள்ளல் அதிகமானை அவ்வையார்—நீலமணி மிடற்றொருவன் என்று பாராட்டினார்.

"பால்புரை பிறை நுதல் பொலிந்த சென்னி
நீல மணி மிடற்று ஒருவன் போல
மன்னுக பெரும"[1]

இவ்வாறே "கருமை" காமராசருக்கு அணியே ஆயிற்று. இது வெள்ளையனே வெளியேறு என்று வெள்ளைப் பகை வீழ்த்தி கருமை. வெள்ளையும் கறுப்பும் எதிர் நிறங்கள். வெள்ளையரும் காமராசரும் எதிர்த்துருவங்கள்.

20 ஆம் நூற்றாண்டில் பொற்காலம் கண்ட காமராசரின் பெருமைகள் எல்லாம், 2 ஆம் நூற்றாண்டில் பொற்காலம் கண்ட சங்ககாலத் தலைவர்களோடு மிகவும் பொருந்துகின்றன. ஆம்! பெருந்தலைவர் முறை செய்ததில் கரிகாலன்தான். வினை முடித்ததில் கருங்கைப் பெருவழுதிதான். சங்ககால மன்னர் திலகமான ஏனாட்டுத் திருக்கிள்ளியின் உடல் விழுப்புண் பட்டு காண்பதற்கு இனிமையற்று விளங்கியது. அவனது புகழை வஞ்சப் புகழ்ச்சியாக இதைவைத்து வருணித்த பாடல் ஒன்று இங்குக் குறிப்பிடத்தக்கது.

"கிள்ளியே, உனது உடல் புண்பட்டு அதனைக் காண்பதற்கு இனிமை யற்று விளங்குகிறது; ஆனால் புண்ணுக்குக் காரண மான உன் போர் வெற்றியைப் பற்றிக் கேட்கும் போது செவிக்கு இனிமையாக உள்ளது" என்று அமைகிறது அப் பாடலின் பொருள்.

"நீயே அமர் காணின் அமர் கடந்து அவர்
படை விலக்கி எதிர் நிற்றலின்
வாஅள் வாய்த்த வடு ஆழ்யாக்கை யொடு
கேள்விக்கு இனியை, கட்கு இன்னாயே"[1]

காமராசரும் உடல் தோற்றத்தால் கரியவர்தான். ஆனால் புகழுக்கு உரியவர். புலன் அழுக்கு அற்ற அந்தணாளர்[2] அவர்.

## இலட்சிய அரசியல்

காமராசருக்குக் கிடைத்த பெருந்தலைவர், ஏழைபங் காளன், கறுப்புக்காந்தி என்ற சிறப்புகளெல்லாம் முன்னிலைப்

1. புறநானூறு 91 : 5-7
1. புறநானூறு 167 : 1-4
2. ஷை 126 : 11

பரவலாக வந்த சிறப்புகள் அல்ல. மக்களுக்கு அவர் செய்த அருந் தொண்டால் அவற்றின் விளைவாக வந்த அருஞ்சிறப்புகளாகும். மக்கள் நலனை மையமாகக் கொண்ட அருந் தொண்டாகத் திகழ்ந்தது அது. அதன் விளைவு தமிழகம் ஒரு இலட்சிய அரசைச் சிலகாலம் பெற்றுச் சிறந்தது.

முழு உரிமை, வறுமை ஒழிப்பு, சமவாய்ப்பு, அறியாமை போக்கல், என்ற ஜனநாயகப் பண்புகளைச் செயல்படுத்தி வெற்றி காணும் இலட்சிய அரசைத் தம் வாழ்வில் கனவாகக் கண்டவர் காமராசர். வன்முறையை, அடக்கு முறையைக் கையாளாமல், சமதர்ம வாழ்வு அமைய இயலும் என்று உறுதியாக நம்பினார் அவர். ஜனநாயக சோஷியலிசம் என்று அதற்குப் பெயர் தரப்பட்டிருந்தாலும், அப்பெயரையோ, அல்லது அப்பெயரை வைத்துத் தம்மையோ பிரபல படுத்த எண்ணாமல். அதன் செயலாக்கம் குறித்தே கருத்துக் கொண்டிருந்த தலைவர் அவர்.

''நாட்டிலுள்ள கோடிக்கணக்கான மக்கள் சம உரிமையும் சம வாய்ப்புகளும் பெற்று வாழ வழி செய்ய வேண்டும். இதற்குப் பெயர் எதுவாக இருந்தால் என்ன?''[1] என்றார் அவர்.

மக்கள் நல்வாழ்வே அவர் தம் அரசியல் கொள்கையாக இருந்தது

''சட்டமும் விதிமுறைகளும் மக்களுக்காகவே ஏற்பட்டவை சட்டத்திற்காகவும் விதிமுறைகளுக்காகவும் மக்கள் இல்லை''[2] என்று வலியுறுத்திச் சொன்னார் அவர். வரிவிதிப்பது நாட்டின் நலனுக்காகத்தான். அரசின் விதிமுறையாக ஏற்றுக் கொள்ளப் பட்ட ஒன்று அது. அதையும் கூட மக்கள் மனங்கோணாமல் போடவேண்டும் அவர்கள் சக்திக்கு மீறாமல் பார்த்துக் கொள்ள வேண்டும் என்று அதிகாரிகளுக்கு அறிவுறுத்தினார்.[3]

சம வாழ்வுச் சமுதாயமே காமராசருக்கு மிகவும் விருப்பமான தாகத் திகழ்ந்தது. ஆனால் அதையும் கூட கட்டாயத்தால் கொண்டு வர அவர் விரும்பவில்லை. சமுதாயத்தில் மாடிவீட்டு வாழ்க்கை வாழும் மேட்டுக்குடிமக்களும் காலப் போக்கில் சம வாழ்வுக் கொள்கையை ஏற்றுக் கொள்வார்கள், அதற்கு எதிரான

---

1. நமசிவாயம். மு.; 'மக்களாட்சி காமராஜ்' ப. 328
2. சந்தானலட்சுமி, 'நாட்டுக் குழைத்த நம்மவர் காமராஜ்', பக். 45
3. நமசிவாயம். மு.; மக்களாட்சி காமராஜ்; பக். 97-98

வாழ்க்கை நெடுநாள் வாழ இயலாது என்று அந்த இலட்சிய வாதியின் உள்ளம் உறுதியாக நம்பிற்று. செல்வம் உள்ளவர் களிடத்திலிருந்து அதனை மீட்க வன்முறையைக் கையாள அவர் விரும்பவும் இல்லை. பணக்காரன் தோளில் நட்புடன் கையைப் போட்டு அப்படியே அவனது சட்டைப் பையையும் உரிமையுடன் துளாவவேண்டும் என்று எளிய முறையில் விளக்குவார். இந்த தமது சமதர்மக் கொள்கையைக், கூட்டுறவு முறையை விரிவு படுத்துவது அதற்கு உதவும் என்று அந்தக் கோணத்தில் வெகு வாகத் தமது சிந்தனையைச் செலவிட்டார்.

1966இல் உருசிய நாட்டுப் பயணத்தின் போது ஒரு கூட்டுப் பண்ணைக்குச் சென்றார். பண்ணையைப் பார்வையிட்ட பின்னர் விவசாயிகள் குடியிருப்பிற்குச் சென்று அங்குள்ளோரின் வாழ்க்கை, ஊதிய விகிதம், இவைகளைப் பற்றிக் கேட்டுத் தெரிந்தார். அங்கிருந்த தாய்மார்களைப் பார்த்து நம் ஊர்ப் பெண்மணிகளை விசாரிப்பது போலவே, என்னம்மா? நலமா? என்று வினவினாராம். குழந்தைகளையெல்லாம் கன்னத்தில் தட்டிக் கொடுத்து வா, வா, என்றழைத்து அன்பு காட்டினாராம். அந்தப் பண்ணை வாசிகளுக்கு இந்திய நாட்டிலிருந்து வந்த பெருந் தலைவர் என்ற எண்ணம் மறந்து தம் பண்ணையைச் சார்ந்த ஒரு பெரியவரிடம் பேசிக் கொண்டிருக்கிறோம் என்ற உணர்வை அவர் உண்டாக்கி விட்டார்.[1] தலைவர்கள் மக்களுக்குத் தொண்டர்கள் என்ற கருத்தைக் கண்ணியமாகக் கருதிய அரசு காமராசரின் அரசு. அவர் கூறுகிறார்...

''வோட்டர்கள் பெருமான்கள்தான்; அவர்கள்தான் உண்மையான எஜமானர்''[2]

**பசியைக் கொன்ற பாட்டாளி அரசு**

புறநானூற்றுக் கால அரசியலில் மிகவும் அஞ்சப்பட்ட ஒன்று பசி. பசியைப் பிணிக்கு ஒப்பவைத்துப் பேசினர். பசிக்கு உண வளித்த அரசரை மருத்துவர் என்றும், அவர்களது அரண்மனை களை மருந்தகங்கள் என்பது போலும் குறித்தன இலக்கியங்கள்.

> ''பசிப்பிணி மருத்துவன் இல்லம்
> அணித்தோ சேய்த்தோ''[3]

பசி ஒரு பெரிய பகை என்று எண்ணப்பட்டது.

---

1. மேதகு குடியரசுத் தலைவர் ஆர். வெங்கட்ராமன்; காமராஜ்காலத்தில் சென்னை மாநகராட்சி; பக்.120-122
2. நமசிவாயம் மு.; மக்களாட்சி காமராஜ்; ப. 13
3. புறநானூறு 173 : 11-12

"பசிப் பகை கடிதலும் வல்லோன் மாதோ"[1]

பசிதீர உணவு வழங்கினோர் உயிர் கொடுத்தவராக எண்ணப் பட்டனர்.

"உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே"[2]

மேம்பட்ட வேளாண்மைக் கொள்கை அதனால் அக்காலத்தில் கருதப்பட்டதெனத் தெரிகிறது. நீரையும் நிலத்தையும் இணைப்புச் செய்கின்றவர் உடலையும் உயிரையும் இணைப்புச் செய்கின்றவராய் எண்ணப்பட்டனர்.—"நீரும் நிலனும் புணர்ந் தோர் உடம்பும் உயிரும் புணர்ந்திசினோரே"[3] நன்செய் நிலத்தின் ஒரு சிறு அளவுப் பரப்பும் பாழ்படுவது அக்காலத்தோர்க்குச் சம்மதம் இல்லாதிருந்தது. "ஒரு பிடி படியும் சீறிடம் ஒரு களிறு புரக்கும் நாடு கிழவோயே"[4] என்று வரும் கூற்றால் இது புலப் படுகிறது. இதே உவமையை வைத்து உணவுக் கொள்கையைப் பெருந்தலைவரும் விளக்கியுள்ளது நோக்கத்தக்கது.— "ஒரு யானை அதற்கு ஏற்றபடி சாப்பிடுகிறபோது ஒரு கவளம் சோறு கீழே சிந்திவிடுகிறபோது அந்த ஒரு கவளம் சோறு லட்சக்கணக் கான எறும்புகளுக்கு ஆகாரமாகிறதே."[5] 20 ஆம் நூற்றாண்டின் காமராசர் அரசும் பசியொழிப்பின் பாட்டாளி அரசாகவே விளங்கிற்று. அரசியலுக்கு அரிசி முதன்மையாகத் தொடங்கியது அவர் காலத்தில்தான். அதனைத் தொடர்ந்தே 'ரூபாய்க்கு 3 படி' 'ஏழைக்கு 5 கிலோ' என்று அரிசியை அரசியலில் நினைக்கும் நினைவு ஒரு தொடர் ஓட்டம் போல் நடந்து வருகிறது. காமராசர் இளமையில் கல்வி கற்ற கல்விக் கூடத்தின் பெயரே கூட பிடியரிசிப்பள்ளி தான்.

பசி எனும் நெருப்பு ஒருவன் வயிற்றில் பற்றி எரியும் போது அதை அணைக்க முயல்வதற்குப் பெயர் தான் ஜீவகாருண்யம் என்று ஜீவகாருண்யத்திற்குப் புதுவிளக்கம் தந்தார் காந்தியடிகள். இதுபோல் உலகம் வியக்கும் வண்ணமாகப் புதுக்கொள்கைகளை உருவாக்கின காரணத்தால்தான் அவர் 'மகான்' என்று பெயர் பெற்றார். காந்தியடிகளின் சொல்லை யெல்லாம் செயலாய் மாற்றும் சபதம் ஏற்றிருந்த காமராசர் அவ்வகையில் புதுமை

1. புறநானூறு 400 : 16-17
2. ஷை 5 : 19
3. ஷை 5 : 23-24
4. ஷை 40 : 11
5. நமசிவாயம், மு.; மக்களாட்சி காமராஜ் ப. 15

யாகப் புகுத்திய திட்டமே மதிய உணவுத்திட்டம். இதனால் 30,000 பள்ளிகளைச் சேர்ந்த 15 இலட்சம் குழந்தைகள் உணவும் கல்வியும் ஒருங்கே பெற்றனர்.

சேரமான் உதியஞ்சேரலாதன் நாடு வியக்கும் வண்ணம் விருந்தொன்றை வழங்கிய காரணத்தாலேயே பெருஞ்சோற்று உதியஞ்சேரல் என்று சிறப்புப் பெயரும் பெற்றான். புறநானூற்றில் காப்புச் செய்யுளை அடுத்த முதற் செய்யுளாக இப்பெருந்தகையின் செய்யுள் அமைந்தது தனிச் சிறப்புடையது. வள்ளுவரும் கடவுள் வாழ்த்துக்கடுத்து வான் சிறப்பை வைத்தார். பசிக்கு உணவு வழங்குவோர் கடவுளுக்கு அடுத்த நிலையில் வைக்கப்பட வேண்டியவர் என்பது ஒரு மரபு வழிக் கொள்கை போலும். இந்த நிலையில் மதிய உணவுக் காமராசரும் கடவுளுக் கடுத்து வைத்துப் போற்றப் பட்டார். எல்லோருக்கும் இதயம் லப் டப் லப் டப் என்று அடித்துக் கொள்ளும் என்பர். காமராசருக்கு இதயமோ உற்பத்தி—தன்னிறைவு என்றே அடித்துக் கொண்டது. நெல் விளைச்சலில் அவர் காட்டிய ஆர்வம் குறுந்தொகை இலக்கியத்தின் 'ஓரேருழவன்' துடிப்பையே நமக்கு நினைவு படுத்தும். ''நிலமோ பரந்த நிலம். இருப்பதோ ஒரே ஒரு கலப்பை. மழை பெய்து நிலம் ஈரமாகியுள்ளது. ஈரமெல்லாம் புலர்வதற்குள் உழுதாக வேண்டும். அத்தகைய உழவனின் உள்ளத்துடிப்பு எவ்வாறு இருக்கும். இலக்கியம் காட்டும் ஓரேருழவனின் உள்ளத் துடிப்பு. இது தான். காதலில் பிரிவுத்துயருக்கு இதை உவமையாக்கிப் பேசியுள்ளது குறுந்தொகை இலக்கியம்''

> ''ஈரம் பட்ட செவ்விப் பைம் புனத்து
> ஓர் ஏர் உழவன் போல
> பெருவியப்பு உற்றன் றால் நோகோ யானே''[1]

இக்கருத்தை அரண் செய்வது போலவே காமராசரைப் பற்றிப் பெருந்தகை யொருவர் கூறிய கூற்றும் கிடைக்கிறது—

''திரு காமராசரின் உவமைகளில் வயலும் வரப்பும் மலையும் ஆறும் குளமும் ஊருணியுமே வருகின்றன''—என்றார் அவர்[2]

சிந்தையில் இருப்பதை வாய் பேசும் என்கிறது விவிலியம். காமராசரின் சிந்தையிலும் எப்போதும் உழவனும், கழனியும், ஏரியுமே நின்றதால் அவரது வாய்ச்சொல்லிலெல்லாம் அச்சார்புச் செய்திகளே பிறந்தன. அரசியல் வேதாந்தத்தைப் போதிக்கும் ஒரு போதனையில் கூட நெல்லைக் குறிப்பிட்டுள்ளார்—

1. குறுந்தொகை 131 : 4-6
2. நமசிவாயம், மு.; மக்களாட்சி காமராஜ் ப. 3

"என்னால் காத்திருக்க முடியாது, இப்போதே பதவியில் உட்கார வேண்டும் என்றால் முடியுமா? நெல்லை இன்றைக்கு விதைத்துவிட்டு நாளை அறுவடை செய்ய அரிவாளை எடுத்துக் கொண்டால் நெல்வருமா?"[1]

திட்டப் பிரச்சாரத்திலும் நெல்லே எடுத்துக் காட்டாகிறது—

"நெல்வயலைப் பார்க்காத ஒருவன் வயல் பக்கம் போகிறான். உழவர்கள் நிலத்தை உழுது அதாவது சகதியாக மாற்றி அதில் ஆழமான மணியான நெல்லை விதைக்கிறார்கள். வயலே பார்க்காதவன் அங்கே வந்து ஐயா இவ்வளவு நெல்லை சகதியிலே போடுகிறீர்களே, வீணாய்ப் போகிறதே என்று கேட்கிறான். ஐந்தாண்டுத்திட்டங்களுக்குச் செலவு செய்கின்ற செலவை வீண் செலவு என்பதும் இதுபோல்தான் இருக்கிறது"[2]

பல இடங்களிலுமிருந்து பெருந்தலைவரைக் காணவரும் மக்களிடம் அவர் கேட்கும் முதற்கேள்விகள் இரண்டேதானாம். ஒன்று சாப்பிட்டீர்களா? என்பது. அடுத்தது உங்கள் பக்கம் மழை உண்டா? என்பது. "தமிழ் நாட்டு விவசாயிகளைப் பொறுத்த மட்டில் மிகவும் கஷ்டப்பட்டு உழைக்கும் பண்பு நம்முடைய விவசாயிகளிடம் இருக்கிறது. இது அவர்கள் கூடவே பிறந்தது. தண்ணீர் கொடுத்தால் தங்கம் மாதிரி வளமான பயிரை வளர்ப்பார்கள். இதில் சந்தேகமே இல்லை."[3] "எவ்வழி ஆடவர் நல்லர் அவ்வழி வாழிய நிலனே" என்று புறநானூற்றில் கண்ட அவ்வையின் கூற்று இங்கே நினைவிற்கு வரும். ஆனால்...

வேதம் ஓதிய வேதியர்க்கோர் மழை
நீதிமேவிய வேந்தர்க்கோர் மழை
கற்புடை மாதர்க் கோர் மழை
மாதம் மாரி மூன்றெனப் பெய்யுமே" (தனிப்பாடல்)

என்று மழையைப் பகிர்ந்து கொண்ட இடைக்காலத்தில் விவசாயிக்கென்று மழை குறிக்கப்படவில்லை. காமராசரைப் பொறுத்த மட்டில் மழை என்பது மேழிச் செல்வரான விவசாயிகட்கு மட்டுமே. இதுபோலவே இட்டார் பெரியார், இடாதார் இழி குலத்தார் என்று இரண்டு சாதிகளைக் குறித்தார் இடைக்கால

1. நமசிவாயம். மு.; மக்களாட்சி காமராஜ்; ப. 3
2. ,, ,, பக். 50-51
3. ,, ,, ப. 222

அவ்வையார். காமராசரோ மனிதநேயத்தின் அடிப்படையில் உண்ணுவோர் ஜாதி உண்ணவழியில்லாதார் சாதி என்று இரண்டு சாதிகளைக் குறித்தார். சாதி இரண்டொழிய வேறில்லை என்று குறித்தார் அவ்வையார் ஆண் பெண் என்றதால் பிரிவை வைத்து. காமராசரும் பட்டினி கிடப்பவர், பசிக்கு உணவு உண்ணுபவர் என்று இரண்டு சாதிகளையே குறித்தார்.[1] பசித்துன்பத்தை நன்குணர்ந்தவர் காமராசர். போராட்டப் படிகளுள் ஒன்றான உண்ணாவிரதப் போராட்டத்தை மெய்யாகவே போராடிப் பசி தாங்கிப் பழகிய பாரம்பரியத்தைச் சேர்ந்தவரல்லவா அவர்?

**காமராசர் திட்டம்**

இந்திய அரசியலிலும் ஏன் உலக அரசியலிலுமே காண வியலாத ஒரு புதுமையான திட்டம் காமராசர் திட்டம். காமராசரின் தன்னலமற்ற சேவைக்குச் சான்றாக நிற்பது இது. இந்திய தேசிய காங்கிரஸ் வலுவிழக்கத் தொடங்கிய காலை. கட்சியின் சீரமைப்பிற்காக அரசியல் மேதை காமராசர் வகுத்த திட்டம் இது. காந்தியடிகளே கூட முன்னர் கூறியிருந்தார் 'பதவியிலும் அந்தஸ்திலும் நாம் இருந்தால் இருக்கும்வரை சோஷியலிசம் நம்மிடமிருந்து விலகிப்போய்க் கொண்டே இருக்கும்';[2] என்று. இதனைச் சிரமேற் கொண்டது போல் தீட்டப் பட்டதுதான் இத்திட்டம். இதன்படி பதவிகளிலிருந்த மூத்த தலைவர்கள் அனைவரும் தத்தம் பதவிகளைத் துறந்து கட்சி நலனுக்காகப் பாடுபடவேண்டும் என்று முடிவு மேற்கொள்ளப் பட்டது. 'முதலில் கட்சி பிறகு பதவி' என்பதே காமராசரின் தாரக மந்திரமாக இருந்தது.[3] காமராசரே முதற்கண் வந்து தமது முதலமைச்சர் பதவியை இராஜினாமா செய்தார். இதனைத் தொடர்ந்து பிற பல தலைவர்களும் பதவிகளை விட்டு வெளியேறினர். பதவியைப் பிடித்துக் கொண்டிருக்கிறது இந்திய தேசிய காங்கிரஸ் மகாசபை என்ற பெருங் குற்றச்சாட்டை ஓயாமல் கூறிவந்த மாற்றுக் கட்சியினர் அமைதியாயினர். இத் திட்டத்தின் காரணமாக நேரு, லால்பகதூர் சாஸ்திரி, மோரார்ஜி போன்ற தலைவர்கள் நடுவே காமராசரின் செல்வாக்கு உயர்ந்தது.[4]

---

1. சோமயாஜுலு. ந.; நெல்லை மாவட்ட சுதந்திரப் போராட்ட வீரர் வரலாறு; பக். 201-202
2. ஹரிஜன் இதழ் 13-4-1947
3. முருகு தனுஷ்கோடி — பத்திரிகையாளர் நெஞ்சில் காமராசர் ப. 24
4. சாவி. 'சிவகாமியின் செல்வன்' ப. 5

கணவன் இறந்த பிறகு (பூதப்பாண்டியன்) அரசுபீடம் தனக்குக் கிடைக்க இருந்தும் வழிவழி வந்த மரபுக் கொள்கையை மதித்து அப்பெரும் பதவியை வேண்டாம் என்று துறந்த பூதப் பாண்டியன் மனைவி பெருங்கோப்பெண்டு[1] விற்குப்பின் தமிழக வரலாற்றில் ஒரு பதவித்தியாகம் உண்டென்று கூறினால் அது காமராசரின் இந்தப் பதவித்தியாகத்தைத்தான் குறிப்பிட முடியும். எப்போதுமே பதவி நாடாத தொண்டுள்ளத்தை வலியுறுத்துகிற வாழ்க்கையாகவே காமராசரின் அரசியல் வாழ்க்கை இருந்தது. காமராசரின் இந்தத் தன்னலமற்ற தொண்டின் அடிப்படை என்ன என்று அறிந்து கொள்ள அயல் நாட்டு மாணவர்களும் நமது நாட்டிற்கு வருகை தந்துள்ளனர்.[2]

'இந்திரர் அமிழ்தம் இயைவதாயினும் இனிது எனத்தமியர் உண்டலும் இலரே' என்ற சங்க காலத் தொண்டுக் கொள்கையின் எதிரொலி போலவே காமராசரின் தியாக அரசியல் விளங்கிற்று. பதவி என்று ஒன்றை ஏற்கும்போதெல்லாம் சார்ந்தோரின் வற்புறுத்தலால்தான் ஏற்றார். கட்சிக்காரர்களோ, சட்டமன்ற உறுப்பினர்களோ எந்த விதச் சலுகையையும் கேட்டு வரக் கூடாது என்பதே அப்போதெல்லாம் நிபந்தனையாக இருந்தது. இதனால்தான் பதவியை விடவேண்டிய நிலை வந்தபோது அது அவருக்கு எளிதாக இருந்தது. தாம் மட்டுமன்றித் தம்மைச் சேர்ந்தவர்களும் அவ்வாறே தியாக உணர்வுள்ளவர்களாக விளங்க வேண்டும் என்று விரும்பினார் காமராசர். தொண்டர் சத்தியமூர்த்தி அவருக்கு அரசியல் குருவாக விளங்கியவர். வெள்ளையர் காலத்தில் அவருக்கு சென்னைப்பல்கலைக் கழகத் தின் துணைவேந்தர் பதவி வழங்கப்பட்டது. காமராசர் அதனை அவர் ஏற்கக்கூடாது என்று தடுத்தார். அவரும் சீடரின் சொல்லுக் குக் கீழ்ப்படியும் புதுமைக் குருவாகவே விளங்கி அப்பதவி ஏற்க மறுத்தே விட்டார். பிற்காலத்தில் ஒரு நாள் தமது குருவின் நிலையை நினைத்துக் காமராசர் "ஐயோ, பாவம் சத்தியமூர்த்தி, குழந்தை மாதிரி அவருக்கு ஒன்றும் தெரியாது. சின்ன சின்ன பதவிகள் என்றாலும்கூட ஆசைப்படுவார். எப்பவுமேநான் சொல்லுவேன் பதவி என்று வருகிறப்போ அதன் மேலே ஆசைப் படாமல் இருந்தால்தான் தப்பு செய்யமாட்டோம்"[3] என்றார்.

1. புறநானூறு: 195
2. கக்கன் ஜீ; 'உழைப்பே உயர்வு தரும்' பதிப்புரை
3. சாவி ; சிவகாமியின் செல்வன்; ப. 26

ஒருதடவை தலைவரைக் காண வந்த ஒருவர் "ஐயா நல்லா இருங்கிங்களா?" என்று பொதுவாக எல்லோரும் கேட்பது போலவே கேட்டார். காமராசர் சொன்னார்—"எனக்கென்ன வந்ததுங்றேன்? நல்லாவே இருக்கேன், நான் நல்லா இருந்தா போதுமா? இந்த நாடு நல்லா இருக்க வேண்டாமா? என்றார். காமராசர் நாட்டு நலத்தின் மேல் கொண்டிருந்த கரிசனை அளப்பரியது.

மகத்தான தொரு அரசியலை நடத்தியவர் காமராசர். முதல் மந்திரியாக இருந்த போதிலும் மக்கள் நிலைக்கு வந்து அவர்தம் அன்றாடப் பிரச்சினைகளைப் பகிர்ந்து கொள்ளுவதில் நாட்டம் மிகக் கொண்டிருந்தார்.

தீபம் நா. பார்த்தசாரதி பெருந்தலைவர்க்கு அறிமுகம் ஆன நேரம்; தமது சொந்த ஊரைப் பற்றித் தலைவரிடம் கூறும்போது இராமநாதபுரம் மாவட்டம் சிவகாசிக்கு ஆறுமைல் தூரத்தில் தமது ஊர் உள்ளது என்று சொல்லவும், காமராசர் குறுக்கிட்டு உடனே கேட்டாராம்—"உங்க ஊர்க் கண்மாயிலே பாசிக்குத்தகை (மீன்பிடிகுத்தகை) யிலே வருசா வருசம் பெரிய தகராறு வருமே இப்ப எப்படி இருக்கு" என்று. இந்த அளவிற்குத் தமிழகத்தின் ஒவ்வொரு சிற்றூர்களின் பிரச்சினைகளையும் தெரிந்து வைத்திருந் தார் அவர். "உங்கள் நாட்டு முதலமைச்சர் பூகோளத்தையே தமது தலையில் வைத்துக் கொண்டுள்ளாரே" என்று ஒருதடவை அயல்நாட்டு வல்லுநர்கள் தமிழக அதிகாரிகளிடம் வியந்து பேசினார்களாம். எத்துணை அறிந்திருந்தாரோ அத்துணை அடக்கத்தோடிருந்தார் பெருந்தலைவர். இச் சூழ் நிலையிலும் புறநானூற்றுக் குறிப்பொன்றே ஒப்பிட்டுச் சிந்திக்கத்தக்கதாகக் கிடைக்கின்றது. சோழன் நலங்கிள்ளி எல்லாம் அறிந்த அறிவுடையவனாக இருந்தும் அடக்கமுடையவனாக இருந்தான்.

> "அனைத்தும்
> அறிவு ஆகாச் செறிவினை ஆகி
> களிறு கவுள் அடுத்த எறிகற்போல
> ஒளித்த துப்பினை"[1]

மக்கள் நலம் நாடிய காமராசரும் நலங்கிள்ளி போலவே அறிந்து அடங்கிய தலைவராகவே விளங்கினார்.

---

1. புறநானூறு 30 : 7-10

"பாரதம் ஏழ்மையான நாடு. இங்கே உள்ள மக்கள் 100க்கு 90 பேர் விவசாயத்திலும் அதனைச் சார்ந்த தொழில்களிலும் நாட்டம் கொண்டு ஈடுபட்டு வருகிறவர்கள். கிராமப் புறங்களில் வசிக்கிற மக்கள் பரம தரித்திரத்தோடு அறியாமையிலும் மூழ்கி இருக்கின்றனர். இந்த மக்கள் வாழ்விற்குரிய பொருட்களைப் பெறுவதிலும் கலாச்சார நிலையிலும் ஓரளவிற்காவது உயரும்படி செய்வதுதான் முதல் வேலை" என்றார் காந்தியடிகள்[1]

காந்தியடிகளின் இந்தக் கொள்கை முழுவதையும் அமுல் படுத்த முயன்ற ஆட்சிதான் காமராசர் ஆட்சி. காந்தியடிகளுக்கு அடுத்த நிலையில் காமராசர் மதிக்கப்பட்டதன் காரணமும் அது தான்.

"எனக்கு எப்போதுமே காமராசர் மீது அளவு கடந்த மதிப்பு உண்டு. காந்தியடிகளுக்கு அடுத்தபடியான தலைவர் அவர்"[2] என்றார் சாவி.

## அறநெறி அரசு

அரசு என்பது அறநெறியை முதன்மையாகக் கொண்டது. அந்த அறமாவது தமக்குரியார்க்கு ஒரு நீதியும், வேண்டாதவர்க்கு வேறு நீதியும் என்று இல்லாத நிலை. இந்த இருநீதிகள் இல்லாத நிலையே பொற்காலம் கண்ட சங்ககாலத்தலைவர்கள் கைக்கொண்ட கொள்கை. அறியாமல் செய்த குற்றத்திற்காகத் தனது கையையே துணித்துக் கொண்டான் ஒரு அரசன். பொற்கைப் பாண்டியன் என்று அவன் பெயர் நிலைத்துவிட்டது. ஆவின் கன்றிற்காகத் தன் கன்றான புதல்வனைத் தேர்க்காலில் கொன்றான் மனு. அவன் நீதி இன்றும் புகழப்படுகிறது. இவ்வாறு அறநெறி அரசு நச்சிய பண்டைய அரசுகளின் அறநெறிக் கொள்கை அழகிய ஒரு பாடலில் வடிக்கப்படுகிறது.

"அறநெறி முதற்றே அரசின் கொற்றம்
அதனால்; நமர் எனக் கோல் கோடாது
பிறர் எனக் குணம் கொல்லாது
ஞாயிறு அன்ன வெந்திறல் ஆண்மையும்

---

1. சோமயாஜுலு: நெல்லைமாவட்ட சுதந்திரப்போராட்ட வீரர் வரலாறு; ப. 60
2. சாவி. பழையகணக்கு; ப. 100

திங்கள் அன்ன தண்பெருஞ் சாயலும்
வானத்து அன்ன வண்மையும் மூன்றும்
உடையை ஆகி... ..''[1]

இக்கொள்கையை நடப்பில் கொண்டிருந்த சங்ககாலத் தலைவர்களே இன்றும் நினைக்கப்படுகின்றனர்.

தலைவர் என்று ஒருவர் இருந்துவிட்டால் பிறரைப்பற்றி இல்லாததையும் சொல்லி முன்னிலை பரவல் பாடவென்று வருவோர் பலர். ஆனால் நமது சங்ககாலத் தலைவர்களுக்கமைந்திருந்த விமர்சனக்காரர்களோ (புலவர்) அவ்வாறு இல்லாததைச் சொல்லிப் புகழ்பவர் அல்லர். 'வன்பரணர்' என்று ஒரு புலவர் இருந்தார். இவர் புகழ்வதிலும் கடுமையான விதிமுறைகளைக் கடை பிடிப்பவர் போலும். வன்பரணர் என்று அவர்க்கமைந்த பெயரிலேயே அவரின் இந்தக் கடுமை தொனிக்கிறது. புகழ்ச்சிக் குரியோர் அல்லாத அரசர் என்னைப் பாராட்ட வேண்டும் என்பதற்காக அவர்கள் செய்யாத காரியங்களை எல்லாம் சொல்லிப் பாட நான் நினைத்தாலும் என் நாவு எழவில்லையே என்கிறார்.

''பீடு இல்மன்னர்ப் புகழ்ச்சிவேண்டி
செய்யாக் கூறிக் கிளத்தல்
எய்யா தாகின்று எம்சிறு செந்நாவே''[2]

இத்துணைக் கடுமையான விமர்சகர்களால் விமர்சிக்கப்பட்டவர்கள் தான் சங்ககால அரசர்கள்.

''வழிபடு வோரை வல் அறிதியே
பிறர் பழி கூறுவோர் மொழி தேறலையே
நீ மெய் கண்ட தீமை காணின்
ஒப்ப நாடி அத்தக ஒருத்தி
வந்தடி பொருந்தி முந்தை நிற்பின்
தண்டமும் தணிதி''[3] —ஒரு அரசன்பால் இந்த அரும் பண்புகள் இருந்ததைப்பாடிப் புகழ்ந்துள்ளார் சங்க காலச் சான்றோர் ஒருவர். அவ்வரசன் முன்னிலைப் பரவலாளர்களை நன்கு அறிந்து வைத்திருந்தான். பிறர்மேல் பழிச்சொல் பேசுகிறவர்கள் பேச்சை ஒருக்காலும் செவிமடுப்பதில்லை அவன்.

1. புறநானூறு 55 : 10-16
2. புறநானூறு 148 : 5-7
3. ,, 10

ஒருவர் மீது ஒரு குற்றங்கண்டால் நன்கு ஆராய்ந்து அக்குற்றத்திற் கேற்ற தண்டனையையே வழங்கினான். குற்றத்தை ஒப்புக் கொண்டு மன்னித்துவிடுவதும் உண்டு. இவற்றையெல்லாம் வைத்தே அப்புலவர் அவனை அவ்வாறு ஒரு பாடலில் புகழ்ந்தார், நல்ல தலைவன் ஒருவனின் பண்புகளைப் பொதிந்த பாடலாக அது நமக்குக் கிடைத்துள்ளது. நாட்டின் பல்வேறு நிலைகளில் தலைமைப் பொறுப்பை ஏற்பவர்கள் மனனம் செய்துகொள்ள வேண்டிய பாடல் அது.

சங்ககாலத்தில் நீதிக்கென்றும் நல்லாட்சிக் கென்றும் சிறந் திருந்த அரசன் நம்பி நெடுஞ்செழியன் என்பான். அவனது அரச நெறியைப் பின் வருமாறு புகழுகிறார் பேரெயின் முறுவலார் என்ற புலவர்—

''வலியர் என்று வழி மொழியான்
மெலியர் என்று மீக்கூறான்''[1]

இதன் பொருள்: பலம் உள்ளவர் என்று இவன் ஒருவருக்கு அஞ்சி நிற்பதும் இல்லை, வாயில்லாப்பூச்சி என்று மற்றொருவரைக் கடிந்து சாடுவதும் இல்லை; என்பது. இவ்வாறெல்லாம் ஏட்டில் எழுதின சட்டங்களுக்கும் மேலான பல அறங்களைக் கடைப் பிடித்தவை சங்ககால அரசுகள். கண்ணுக்குக்கண், பல்லுக்குப்பல் என்கிற சட்ட அரசுகளும் உண்டு. ஆனால் அவற்றிற்கு மேல் மனிதாபிமானத்தை அடிப்படையாகக் கொண்ட அரசுகளே அறநெறி அரசுகள் இத்தகைய அறநெறி அரசே காமராசரின் அரசாக விளங்கிற்று.

ஒருதடவை அப்பள வியாபாரிகள் சிலர் தலைவரை அணுகி 6% வரி பிறவற்றிற்குப் போடுவதுபோல் போட்டது மிகுதி என்று முறையிட்டனர். காமராசர் அது குறித்து தொடர்புடைய அதிகாரிகளை வினவ, பாக்கட் செய்யப்படும் பண்டங்களுக்குரிய வரிவகையில் அது அடங்கியது என்று சட்டநுணுக்கத்தைப் பெருந்தலைவரிடம் எடுத்துக் கூறினர், அதை மாற்ற முடியாது என்றும் கூறினர். அப்பளம் பாக்கட் பண்டத்தில் அடங்காது என்று ஒரு உட்சட்டத்தை இயல்பான சட்டத்துடன் பிறப்பிக்கச் சொல்லி அப்பளவியாபாரிகளுக்கு அந்த இடத்திலேயே சலுகையை வாங்கி அளித்தார்.

---

1. புறநானூறு : 239

மற்றொரு தடவை மதவாதி ஒருவர் பணக்கையாடல் வழக்கில் சிக்கி, அவர் குற்றவாளி என்று நிருபிக்கவும் பட, மதவாதியானபடியால் தாமே நடவடிக்கை எடுக்க யோசித்து அதிகாரிகள் முதல்வர் காமராசரை அணுகினர். மிகச் சாதாரண மாகத் தீர்ப்பை வழங்கினார் தலைவர் :

> "திருடிட்டார், தப்புதான்; ஆனாலும் திருடினவர் ஒரு மதவாதி, திருடினாலும் திருடினதைக் கொண்டுபோய் ஒரு கூனனுக்கோ குருடனுக்கோதான் கொடுத்திருப்பார்; விட்டுத் தள்ளுங்கோன்னே"

என்றார். அறநெறி பளிச்சிட்ட தீர்ப்பு அது; வெற்றுச்சட்டத் தீர்ப்பல்ல! "ஒப்பநாடி அத்தக ஒருத்தி" என்ற புறநானூற்றின் அறநெறி தெற்றெனத் தெரிகிறது பெருந்தலைவரின் தீர்ப்பில். சட்ட அரசல்ல காமராசரின் அரசு. அதனை விஞ்சிய அறநெறி அரசு!

செங்கை அண்ணாவில் அடங்கிய பூவிருந்தவல்லியில் உள்ள அந்தகர் பள்ளி தனியார்க்குரியதாய் இருந்து அரசிடம் ஒப்படைக் கப் பட்டது. காமராசர் முதலமைச்சராய் இருந்தபோது மிகப் பெரிய வளாகப் பரப்பைக் கொண்டிருந்த அந்தகர் பள்ளி சில அமைச்சர்களின் கண்களில் பட்டுவிட்டது. அப்பள்ளியை வேறு இடத்திற்கு மாற்றவேண்டும் என்று துடித்தனர். காமராசர் அறத் திற்கு மாறு என்று கொண்டு அவ்வாறு செய்வதைத் தடுத்தார். அந்தகர் பள்ளி பிழைத்தது. காமராசர் அப்போது கூறினார் :

"மற்றவர்களிடம் நம்பிக்கை வைக்காமல் நம்மிடம் (அரசிடம்) நம்பி கொடுத்துவிட்டுப் போயிருக்கிறார்கள். நடத் தாமல் போனால் தான் நம்பிக்கைத் துரோகம் என்பதல்ல, அதை வேறு இடத்திற்கு மாற்றுவதும் நம்பிக்கைத் துரோகம் தான். அரசைப்போன்ற பொது அமைப்பிடம் கொடுத்த அறக்கட்டளை கூட அப்படியே நடக்கலே என்றால், எந்த நம்பிக்கையோடு பின் சந்ததி அறக்கட்டளை நிறுவ முன்வரும்? சாமர்த்தியமான பேச்சு நம்பிக்கையைக் காப்பாற்றாது. மெய்யா நாணயமா நடக்க வேணும். அப்பதான் நாலுபேர் நம்புவார்கள். குருடர் பள்ளியை வேறு இடத்திற்கு மாற்றாதீர்கள். அங்கேயே நடத்துங்கள்." என்றார் காமராசர்.[1]

---

1. சுந்தரவடிவேலு. நெ. து. கல்விவுள்ளல் காமராசர் பக். 152-155

காமராசரின் அறஉணர்ச்சி இது. மெய்சிலிர்க்க வைப்பது!

ஒருதடவை சாவி, புராண இதிகாசங்களைப் பரப்பும் திட்டம் பற்றி முதல் அமைச்சராக இருந்த காமராசரிடம் குறிப்பிட்டார், தாராளமாகச் செய்யுங்கள் என்று ஊக்க உரை வழங்கிய காமராசர்,

"ஆனால் ஒரு காங்கிரஸ் கமிட்டி மெம்பரையோ, அமைச்சரையோ அதில் சேர்த்திடாதீங்க" என்றார்.[1] தமது பதவி நியமனத்தைக் குறித்துப் பேசும்போது அக்காலத்துக் கல்வி இயக்குனர், "காமராசர் தமது சாதியைச் சேர்ந்தவரை பலருடைய பரிந்துரைக்கு உரியவரை, விட்டு விட்டு என்னை இயக்குநர் ஆக்கினார்"[2] என்றார். தலைவர் அவர்களே இதுகுறித்துப் பேசும் போது சொன்னார்கள் —

> "ஸ்ரீமான் சுந்தரவடிவேலு கறுப்பா செவப்பா என்று கூட எனக்குத் தெரியாது. நான் தமிழ்நாடு காங்கிரஸ் தலைவராக இருந்த போது பலர் கல்வித்துறை சம்மந்தமாக என்னிடம் வந்திருக்கிறார்கள். பள்ளிக்கூடங்களுக்கு வந்தாலும் நெ.து.சு வுக்குச் சொல்லுங்கள்; அவர் உதவியா இருப்பார் என்பார்கள், ஆசிரியர் நிர்வாகிமேல் புகார் செய்துகொண்டு வந்தாலும் நெ.து.சு. கண்டிப்பானவர், நியாயமானவர் என்று சொல்வார்கள். அவர் மேற்பார்வையில் இல்லாத விஷயத்தைப் பற்றியும் அவரிடமே சொல்லச் சொல்லுவார்கள். உதவிக்குப் பாத்திரமானவர் என்று தோன்றிவிட்டால் எப்படியும் உதவி செய்து கொடுப்பார் என்பார்கள். மாணவர்களும் அவரிடம் நம்பிக்கை வைத்திருந்தனர் எல்லாருடைய நம்பிக்கைக்கும் உரியவராய் இருப்பதால் அவரை இயக்குனராக நியமித்தோம்"[3]

திறமையுள்ளோர் மதிக்கப்பட்டனர். வலியோர் அல்ல. "வலியர் என்று வழிமொழியான்' — என்ற நம்பி நெடுஞ்செழியனில் காணப்பட்ட உயர்பண்பு காமராசரில் காணப்பட்டதை இதைப் போன்ற நிகழ்ச்சிகளை வைத்து அறிகிறோம்.

நெற்றிக் கண்ணைத் திறந்தாலும் குற்றம் குற்றமே எனும் நக்கீரத் துணிச்சல் இதற்கு வேண்டும். பெரியவர், உயர்ந்தவர்.

---

1. சாவி: பழைய கணக்கு; ப. 54
2. சுந்தரவடிவேலு; நெ.து., நினைவில் நின்றவர்கள்; ப. 81
3. ,, ,, கல்வி வள்ளல் காமராசர்; ப. 94

தலைவர் என்று சொன்னதற்கெல்லாம் தலையாட்ட வேண்டும் என்ற தன்மை காமராசரிடம் இல்லாதிருந்தது. அவரே கூறி யுள்ளார்.

> "காந்திஜீ சொல்லிவிட்டாரே,? அதை எப்படி கண்டிக்கிற துன்னு நான் பயப்படலே, இதே மாதிரி பட்டேலுடன் கூட ஒரு தடவை சண்டை போட்டிருக்கேன்."[1]

மெலியர் என்று மீக்கூறான் (இளைத்தவர் என்று மிரட்டுவது இல்லை) என்ற நம்பி நெடுஞ்செழியனின் பண்பிற்கும் பெருந் தலைவரிடம் பஞ்சமில்லாதிருந்தது. கூறப்போனால் இளைத்த வரையே மிகவும் நேசித்தார் அவர். அவரே கூறுகிறார்.

> "குடிசைக்காரர்கள் காங்கிரஸில் வந்து விட்டார்கள். எனக்கு சந்தோஷம் தான். காங்கிரசுக்குச் சொந்தமானவர்கள் அவர்கள் தானே"[2]

கவிஞர்கள் பற்றிப் பேசும்போது அவர் கூறுகிறார்.

"கவிஞர்கள் நாட்டு மக்களை மறந்துவிட்டு வெறும் இயற்கை யைப் பாடிக் கெயண்டிருப்பார்கள். இயற்கை வளத்தைப் பற்றியும் அதன் அழகைப்பற்றியும் கவிதை பாடி முடித்து விடுவார்கள். அத்துடன் ஏழைகளைப் பற்றியும் பாட வேண்டாமா?"[3]

இப்படி ஏழைகளின் தலைவராக வாழ்ந்தார் பெருந்தலைவர். அவர் போகுமிடங்களிலெல்லாம் மக்கள் அவரைக் காணத் திரளாகக் கூடினர்.

ஒரு சமயம்; காமராசர் தமது நண்பர்களுடன் வெளியில் சென் றிருந்தவேளை தமது காலணியைத் தவறவிட்டுவிட்டார். புதுக் காலணிகளை வாங்கிக்கொள்ள நண்பருடன் கடைக்குச் சென்றார். காமராசர் சிறிதுநேரம் காத்திருந்தும் காலணிக்கடைக்காரர் தலைவருக்குக் காலணி வகைகளைக் காண்பிக்காது காலம் தாழ்த்திவந்தார். காமராசரோ புரிந்துகொண்டார். கடைக்கார ருக்கு அவ்வேளை காமராசருடன் ஒரு புகைப்படம் எடுத்துக் கொள்ள வேண்டும் என்று அவா. அவருக்குத் தெரியாத வகையில் புகைப்படக்காரருக்குச் சொல்லியனுப்பியிருந்தார். அவன்வர

---

1. சாவி: சிவகாமியின் செல்வன்; ப. 36
2. நமசிவாயம். மு., மக்களாட்சி காமராஜ்; ப. 73
3, நமசிவாயம், மு.; மக்களாட்சி காமராஜ், ப. 102

வில்லை. அவனுக்காகக் காத்திருந்தே காலணிகளைக் காட்டாமல் காலந்தாழ்த்தினார். புரிந்து கொண்ட காமராசர் கூறினார்— ''இந்தாப்பா ஏன் நேரத்தை வளர்த்துறே? போட்டோக் காரனுக்குச் சொல்லியனுப்பினியா?''[1]

அவ்வையார் சிலகாலம் தன்னோடிருக்க வேண்டும் என் பதற்காக இப்படித்தான் ஒரு அன்புச் சூழ்ச்சியைக் கையாண்டான் அதியமான். வழக்கமாக அவருக்குப் பரிசில் தந்து அனுப்பி வைப்பவன் வேண்டுமென்றே பரிசில் தராமல் காலந்தாழ்த் தினான். காமராசரைப் போலவே அவ்வையாரும் அதியமானின் உள்நோக்கத்தைப் புரிந்துகொண்டார். தம் நெஞ்சைத் தேற்றினார்—

''இழை அணியாளை இயல்தேர் அஞ்சி
அதியமான் பரிசில் பெறூஉம் காலம்
நீட்டினும் நீட்டாது ஆயினும் களிறுதன்
கோட்டு இடை வைத்த கவளம் போலக்
கைய கத்தது அது பொய் ஆகாதே''[2]

2 ஆம் நூற்றாண்டின் ஏதோ ஓர் ஆண்டில் ஓர் நாளில் நிகழ்ந்த நிகழ்ச்சி இது. இங்குச் சிந்திப்பது பொருத்தமாகிறது.

**கல்விக் கண் கொடுத்த அரசு**

நாடு சுதந்திரம் அடைந்த புதிதில் தமிழகத்திற் கற்றோர் எண்ணிக்கை குடிமக்கள் எண்ணிக்கையில் ஏழு விழுக்காட்டினரே. காமராசர் காலத்தில் 37 விழுக்காட்டிற்கு ஏறி நின்றது இது. கல்வி நெறியாளர் நெ.து. சு. அவர்கள் காமராசர் காலத்தில் கல்வி வெள்ளம் கரை புரண்டோடியது என்று குறிப்பிடுகிறார்.[3] மூவேந்தர் காலத்திலும் நடக்காத அதிசயம் இது—என்று இதனை வருணித்தார் முன்னாள் முதல்வர் பக்தவத்சலம்.[4] மூவேந்தர் காலத்துக் கல்வி நிலை பற்றி அறிய நம்மிடம் ஆதாரமாய் உள்ளது - ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் பாடிய புறநானூற்றுப் பாடல் ஒன்றே.

---

1. நவசக்தி அம்பி, பேட்டி - மறக்க முடியாத பெருந் தலைவர்.
2. புறநானூறு. 101.
3. சுந்தரவடிவேலு,நெ.து., பேட்டி. மறக்க முடியாத பெருந் தலைவர்
4. நாராயணசாமி, டி.; காமராசர் இருக்கிறார்; ப. 25

''உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்
பிற்றை நிலை முனியாது கற்றல்நன்றே
பிறப்பு ஓர் அன்ன உடன் வயிற்றுள்ளும்
சிறப்பின் பாலால் தாயும் மனம் திரியும்
ஒரு குடிப் பிறந்த பல்லோருள்ளும்
மூத்தோன் வருக - என்னாது அவருள்
அறிவுடையோன் ஆறு அரசும் செல்லும்
வேற்றுமை தெரிந்த நாற்பாலுள்ளும்
கீழ்ப்பால் ஒருவன் கற்பின்
மேற்பால் ஒருவனும் அவன்கண் படுமே''[1]

மேற்கண்ட பாடலின் முற்பகுதி கல்வி நெறி சங்க காலத்தில் செயல்பட்ட விதம் பற்றிக் குறிக்கிறது. கற்பிக்கும் ஆசானுக்குத் தேவைப்பட்ட நிலைகளில் உதவியும், அவர்க்கு வேண்டிய பொருட்களை நல்கியும் அவரிடமிருந்து அறிவைப் பெறவேண்டும் என்பது அது. பாடலின் பிற்பகுதி அவ்வாறு கற்றோரின் சிறப்பை விளக்குவதாக உள்ளது. ''கீழ்ப்பால் ஒருவன் கற்பின் மேற்பால் ஒருவனும் அவன்கண்படுமே'' என்ற நிலை காமராசர் காலத்திற்கு முன் மூதறிஞர் இராஜாஜி அவர்களின் காலத்தில் மறுக்கப்பட்டு குலக்கல்வித் திட்டம் என்பது நடைமுறையிலிருந்தது. எல்லோருக்கும் பொதுக்கல்வி அப்போது இல்லை. தந்தை செய்த தொழில் ஒன்றையே அவன் பிள்ளை கற்றுக் கொள்ள வேண்டும் என்ற நிலை இருந்தது. கீழ்ப்பால் ஒருவன் கற்று மேற்பாற்படும் என்ற கல்வியின் விளைவிற்கு வழியில்லாமல் இருந்தது. குலக் கல்வித் திட்டம் என்று இதனை அழைத்தனர். காமராசர் இத்திட்டத்தை ஆதரிக்கவில்லை. அவர் கருதிய சமதர்ம சமுதாயத்திற்கு இது குந்தகமானது என்று கருதினார் தமது முழுச் சிந்தனையையும் கடையனும் கடைத்தேற வேண்டும் என்ற நல்லெண்ணத்திலேயே செலவிட்டவரல்லவா அவர்?[2] கற்றோர் நடுவிலேனும் ஏற்றத் தாழ்வில்லாதிருக்க வேண்டுமல்லவா? அதனால் எல்லோரும் கற்றாக வேண்டும் என்று கட்டாயப் படுத்தப்பட்டது. மாணவர் சீருடை அணிந்து ஒன்று போல் தோற்றமளிக்கும் வழக்கம் வலியுறுத்தப்பட்டது. எல்லோரும் கற்கும் வகையில் கல்வி இலவசமாக்கப்பட்டது.

---

1. புறநானூறு : 183
2. சுந்தரவடிவேலு, நெ.து.; நினைவில் நிற்பவர்கள்; ப. 79.

மாணவர்க்கு வயிறார மதிய உணவு வழங்கப்பட்டது; உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும் என்ற ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனின் கல்விமானியம் ஆசிரியரோடு நின்றது. அது காமராசர் காலத்தில் மாணவர்க்கும் விரிக்கப்பட்டது. கல்வியைப் பரப்புவதில் முனைப்பாகச் செயல்பட்ட ஒரு முதலமைச்சராக அவர் கூறினார்—

"எதற்காகச் சுதந்திரம் வாங்கினோம்? எல்லோரும் வாழ. எப்படி வாழணும்? ஆடுமாடுகள் மாதிரி உயிரோடு இருந்தால் போதுமா? மனிதர்களாக வாழணும். அதற்கு படிப்பு வேணும்."[1]

சங்க இலக்கியங்கள் அகம்புறம் என்று குறிப்பிட்டது போல் நாட்டு முன்னேற்ற நிலையில் அகம்புறம் என்று குறித்தார் காமராசர். கல்வி என்பது அவரைப் பொறுத்த மட்டில் அகமாம். தொழில், மின்சாரம், முதலியன புறமாம்.[2] காமராசரின் இந்த அகத்துறை விரிவடைந்து புறத்துறைக்கும் உதவியது.

1951இல் இருந்ததைவிட 1960இல் 3025 ஆரம்பப்பள்ளிகள் எண்ணிக்கையில் அதிகமாகி இருந்தன. இளமையில் கல்— என்பதை எந்திர காலத்திற்கேற்ப நூதனமான எடுத்துக்காட்டோடு விளக்கியவர் காமராசர். உரிய காலத்தில் கற்றுவிட வேண்டும் என்று குறிக்கும்போது அவர்,

"மதுரைக்குப்போக வேண்டும் என்றால் குறிப்பிட்ட நேரத்தில் போய் காத்திருந்து இரயில் வரும்போது ஏறிப்போவது தானே நல்லது."[3] என்றார்.

"கண்ணுடையார் என்பார் கற்றார், முகத்திரண்டு
புண்ணுடையார் கல்லா தவர்"—என்றார் வள்ளுவர்[4]

தமிழக மக்கள் அனைவரையும் கண்ணுடையவராய்க் காண விழைந்தார் பெருந்தலைவர். கல்வியை இலவசமாக்கினார். கல்விக் கண்கொடுத்த காமராசர் என்று போற்றப்பட்டார்.

சங்ககாலம் பொற்காலம் என்று போற்றப்பட்டதற்கமைந்த பல்வேறு காரணங்களுள் கல்விமேம்பாடு கொண்டு விளங்கியது

1. சுந்தரவடிவேலு, நெ.து., கல்விவள்ளல் காமராசர்; ப. 63
2. சோமயாஜுலு. ந.; நெல்லை மாவட்ட சுதந்திரப் போராட்ட வரலாறு; ப. 201
3. நமசிவாயம். மு., மக்களாட்சி காமராஜ்; ப. 163
4. குறட்பா : 393

என்பதும் ஒன்று. சான்றாக அவ்வையார், காக்கைப்பாடினியார், வெண்ணிக்குயத்தியார் என்ற பெண்பாற் சான்றோர் நிற்கிறார்கள், மகளிர் மேதைகளாகத் திகழ்ந்தவர்கள் அவர்கள். காமராசரும் தமது காலத்து மகளிரை அவ்வையாக, நற்செள்ளையாக, வெண்ணிக் குயத்தியாகக் காண விரும்பினார். மாதர் கல்வியிலும் நாட்டம் மிகச் செலுத்தினார்.

"தாய்மார் கற்றுவிட்டால் நாட்டில் தொந்தரவே இருக்காது என்றார்"[1]

மாணவர் சிக்கல்களைத் தீர்ப்பதில் கண்ணும் கருத்துமாக இருந்தார் காமராசர். அரசுத் தரப்பில் மாணவர்களோடு பேச்சு வார்த்தை நடத்தும் போது பெருந்தலைவரின் அணுகு முறையே வேறாக இருந்தது. ஒரு தடவை மாணவர் குழு ஒன்று அவரைச் சந்தித்துப் பேசியது. மாணவர்களுள் ஒருவர் வருங்காலப் பிரதமரை நல்லவராகத் தேர்தெடுங்கள் என்றார். தலைவர் அதற்கு— "நான் பார்த்துக் கொள்ளுகிறேன்" என்றார். மற்றொரு மாணவர் "உங்களுக்குப்பின் யார்?" என்று சட்டென்று கேட்டார். தலைவர் சிறிதும் தாமதியாமல் கூறினார்—

"நீ வாயேன்"

தேவிகுளம் பீர்மேடு போராட்டத்திற்காக 1956ஆம் ஆண்டு பிப்ரவரி 20 ஆம் நாள் தமிழ் நாடு முழுவதும் கதவடைப்பு வேலை நிறுத்தம் நடைபெற்ற போது, காமராசர் மாணவர்களைப் போராட்டத்திலிருந்து தந்திரமாகத் தனிமைப்படுத்தி அவர்தம் படிப்பு பாதிக்கப்படாமல் காத்தார் என்பர். அக்காலத்திய கல்வி நெறியாளர் இது குறித்து பின் வருமாறு குறிப்பிட்டார்—

"காமராசரின் அணுகு முறை இளம்பிஞ்சுகளைக் கிளர்ச்சித் தீயில் தள்ளாமல் காத்தது. கல்வி கற்கும் மாணவர்கள் அரசியல் கிளர்ச்சிகளில் தீவிரமாக ஈடுபட்டால், அவர்தம் முன்னேற்றம் பாதிக்கப்படும் என்பதை நன்கு உணர்ந்திருந்தார் காமராசர்."[2] கல்விக் கண்கொடுத்து மாணவரைக் கண்களெனக் காத்த இப்பெருந்தகையைத்தான் தேர்தல் ஒன்றில் தடுமாறி விழவைத்தான் ஒரு மாணவன். தாம் வளர்த்த ஜனநாயகம் வென்றதையும், தாம் கொடுத்த கல்வி கொண்ட ஆற்றலையும் நினைத்து மகிழ்ந்தாரேயன்றி அவ்வேளை பெருந்தலைவர் தளரவில்லை.

---

1. நமசிவாயம். மு.; மக்களாட்சி காமராஜ்; ப. 164
2. சுந்தரவடிவேலு. நெ.து.; கல்விவள்ளல் காமராசர்; ப.90

பாரதம் போன்ற பலதரப்பட்ட மக்கள் வாழும் மிகப் பெரிய தோர் ஜனநாயக நாட்டில் மொழிச்சிக்கல் போன்றவை தவிர்க்க முடியாதவை ஆகும். கல்விக்கண்கொடுத்த காமராசர் அரசு மிகப் பெரிய அளவில் மொழிச்சிக்கல் உருவானவேளை மிகத் திறமை யாக அதனைச் சமாளித்ததும் கல்வி பேசும் இக்கட்டத்தில் குறிப் பிடப்பட வேண்டிய ஒன்றாகும். மத்திய அரசு மும்மொழித் திட்டத்தை வலியுறுத்திக் கொண்டிருந்தது. பலம் கொண்டு மாற்றுக்கட்சியாக நின்ற திராவிட முன்னேற்ற கழகமோ மும் மொழிகளுள் ஒன்றான இந்தி பற்றிய எதிர்ப்பை நாளுக்கு நாள் வலுவாக்கி மாணவர் செல்வாக்கைப் பெற்று வந்தது. இக்காலத் தில் காமராசர் போன்றதோர் முதலமைச்சர் இல்லாதிருந்தால் நிலமை மோசமாகி மாணவரின் படிப்பு வெகுவாகப்பாதிக்கப் பட்டிருக்கும். அந்த நிலை உருவாக விடவில்லை காமராசர்.

> "மொழி வெறியோ, வகுப்பு வாதமோ, இனவெறியோ, நமது தேசிய வாழ்வைப் பாழ்ப்படுத்தி விடக்கூடாதென்று, இயன்ற வரையில் ஜாக்கிரதையாக நடந்து கொண்டவர் காமராசர்."[1]

மொழிச்சிக்கலைப் பொறுத்தமட்டில் இரண்டு கருத்துக்களை அவர் ஆணித்தரமாக வலியுறுத்தினார்—

1. தாய் மொழியிலேயே பாடங்களைக் கற்றுக் கொடுப்பதுதான் இயற்கை;

2. இந்திக்காரர்களைப்பற்றி நாம் தெரிந்து கொள்ள இந்தி கற்றுக் கொள்ள வேண்டும். அதுபோல் அவர்கள் நம்மைப் பற்றித் தெரிந்து கொள்ள தமிழ் கற்றுக் கொள்ளவேண்டும். என்பன அவை.

தமிழக மாணவர்கள் பன்மொழி வல்லுனராக வேண்டும் என்று ஆசைப்பட்டார். மொழிகள் பலவற்றைப் பயின்றிடல் பல இடங் களுக்குச் செல்லவும், தமிழ்மொழிச் செய்திகளைப் பிறருக்குச் சொல்லவும் உதவும் என்று அறிவுரைகள் கூறினார். அவரே பல மொழிகள் பேசும் அனுபவப் படிப்பைக் கொண்டிருந்தது வியந்து போற்றப்படுகிறது. இத்தனைக்கும் ஒன்றும் பெரிய கேம்ரிட்ஜ் பல்கலைக் கழக வித்தகர் அல்லர் அவர். பிடியரிசிப்பள்ளியோடு தமது படிப்பை நிறுத்திக் கொண்டவர்தான் அவர். அக்காலத்தில்

---

1. பெயர் குறுகப் புகழ் நிமிர்த்த பெரியோர் (கட்டுரை), நெல்லை மாவட்ட சுதந்திரப் போராட்ட வரலாறு, (நூல்) ப. 215

பல்வேறு சமயங்களில் ஆந்திரமுதல்வர் சஞ்சீவிரெட்டியிடம் தெலுங்கிலும், கர்நாடக முதல்வர் நிஜலிங்கப்பாவிடம் கன்னடத்திலும், அவர் சரளமாக உரையாடியதை நேரில் கண்டவர்கள் குறித்து வைத்துள்ளனர். அதுமட்டுமல்ல ஒரு தடவை அமெரிக்க நாட்டுப் பிரதிநிதிகளிடம் மூன்று மணிநேரம் ஆங்கிலத்திலேயே பேசி உரையாடியதையும் குறித்துள்ளார்.[1]

இலவசக் கல்வி, மதிய உணவு, பள்ளிச் சீருடை, தாய்மொழி பயிற்று மொழி, கட்டாயக்கல்வி இவையனைத்தும் காமராசர் கால, கல்வி வளர்ச்சியின் முன் எப்போதுமில்லாத முன்னோடித் திட்டங்களாக விளங்கின. பள்ளிச் சீரமைப்பு மாநாடுகள் மாவட்டங்கள் தோறும் நடத்தப்பட்டன. அவற்றின் மூலம் மேற் சொன்ன திட்டங்கள் செவ்வனே செயல்படுகின்றனவா என்பதை மதிப்பீடு செய்ய வாய்ப்பு இருந்தது. கல்வியுள்ளவரை காமராசர் பெயர் நிலைக்கும். அத்தகைய விதத்தில் 'கல்விவள்ளல்' என்ற முத்திரையைப் பதித்துக் கொண்டவர் காமராசர். கல்வி வட்டாரங்கள் என்றும் அவருக்குச் செஞ்சோற்றுக் கடன் பட்டவை. அவர் பெயரால் தமிழ் வளர்ந்த மதுரையிலேயே ஒரு பல்கலைக்கழகம் அமைந்தது மிகச் சிறப்பானது.

''அன்னசத்திரம் ஆயிரம் வைத்தல் ஆலயம் பதினாயிரம் நாட்டல்; அன்ன யாவிலும் புண்ணியங்கோடி, ஆங்கொரு ஏழைக்கு எழுத்தறிவித்தல்'' என்றார் பாரதி. அவ்வகையில் புண்ணியம் கோடியினைக் கட்டிக் கொண்டவர் என்று பாரதப் பெருநாட்டிலேயே பெருந்தலைவர் முன்குறிக்கத் தக்கவரன்றோ?

## ஜனநாயக சோஷியலிசம்

காமராசர் அகில இந்திய காங்கிரஸ் தலைவராக இருந்த போது புவனேசுவர காங்கிரஸ் மாநாட்டில் வைத்து அவரால் கொண்டுவரப்பட்ட கட்சிக் கொள்கை இது. இதற்கு முன் சோஷியலிசம் கொள்கை என்றிருந்தது. அதற்கான தீர்மானத்தைக் கொண்டு வந்தவரும் தலைவரே. அது ஆவடி காங்கிரசின் போது தீர்மானமாகப் பெருத்தலைவரால் முன் வைககப்பட்டது.[2]

---

1. ஆனந்தன் ஜி., பத்திரிகையாளர் நெஞ்சில் காமராசர்; பக். 50-51
2. சோமய ஜுலு. ந.; நெல்லை மாவட்ட சுதந்திரப் போராட்ட வரலாறு; ப. 64

ஜனநாயகசோஷியலிச சித்தாந்தத்தின் பிதா ஜான்ஜோரஸ் என்ற பிரஞ்சுக்காரர் என்பர். பிரஞ்சு சோஷியலிஸ்டு அமைப்பின் தலைவராய் இருந்தவர் அவர். ஜோரஸ், சோஷியலிச வாதிக்கு இருக்க வேண்டிய இன்றியமையாத குணங்களாக மூன்றினைக் கூறுகிறார். அவையாவன—

1. நெருப்பு போன்ற இதயம்
2. நிதானமான தலை
3. தூய்மையான கரங்கள்.[1]

காமராசர் இந்த வகையில் ஒரு சிறந்த சோஷியலிச வாதியாக விளங்கினார். சமுதாயக் கொடுமைகளைச் சுட்டெரிக்க எண்ணிய அவரது இதயம் சில வேளைகளில் நெருப்பாகக் கொதித்ததுண்டு. ஆயினும் நிதானம் இழக்காத உத்தமரும் ஆவார். கைச்சுத்தம் அவரிடம் கண்ட மிகச்சிறந்த பண்பாக விளங்கிற்று. இவ்வாறு ஜோரஸ் கூறிய சோஷியலிசவாதியின் முக் குணங்களும் காமராசரிடம் நிறைந்தே காணப்பட்டன. திருமணம் செய்து கொள்ளாத பிரம்மச்சாரி அவர். இதனால் தமக்கென்று பொருள் சேர்க்கவேண்டிய நிர்ப்பந்தம் அவருக்கு இல்லாதிருந்தது. ஊழற்குற்றம் சாட்டப்படாத ஒருவராய் அவர் விளங்கினார். தமிழ்நாட்டின் முதலமைச்சராய் இருந்த காலத்தில், கட்சி அலுவலின் காரணமாக டெல்லி செல்ல வேண்டிய வேளைகளில் கூட தமது சொந்தச் செலவிலேயே செல்வாராம். அரசுக்குச் சொந்தமான ஒவ்வொரு பைசாவையும் நாட்டு நலனின் பங்காக எண்ணிப்பாதுகாத்தார். சிக்கனத்தைக் கடைப்பிடித்த ஆட்சியும் காமராசர் காலத்து ஆட்சி போல் வேறில்லை என்ற பெயர் நிலவியது. தம்மைப் போல் பிறரும் சிக்கனமாக இருக்க வேண்டும் என்று விழைந்தார். யாருடைய பொருள் வீணானாலும் அது நாட்டிற்கிழப்பே என்ற கருத்தைக் கொண்டிருந்தவர். இது தொடர்பான ஜப்பானிய நாட்டு நிகழ்ச்சியொன்று குறிப்பிடத்தக்கது.

மிக நாகரிகமான உணவுவிடுதி ஒன்றின் உரிமையாளரைச் சந்திக்க ஒருவர் புறப்பட்டார். உரிமையாளர் என்றால் பணப் பெட்டியின் அருகில்தானே இருப்பர் என்ற கருத்தில் சந்திக்கச் சென்றவர் உணவுவிடுதியில் பணம் வசூலிப்பவரிடம் சென்றார். வசூல்காரர் உரிமையாளர் நானில்லை; உள்ளே இருக்கிறார்

---

1. சோமயாஜு. ந; நெல்லை மாவட்ட சுதந்திரப் போராட்ட வரலாறு: ப. 64.

என்றார். வந்தவர் உள்ளே சென்று மேற்பார்வை செய்து கொண்டிருந்த ஒருவரை அவர்தான் உரிமையாளராக இருத்தல் வேண்டும் என்று அணுகினார். அவரும் உரிமையாளர் நானில்லை, அவர் உள்ளே உள்ளார் என்றார். வந்தவர் இப்படியாக உள்ளே எல்லாக் கட்டுகளிலும் விசாரித்துச் சென்றார். இறுதியில் ஒருவரே எஞ்சினார். அவரை அணுகினார். அவரோ விடுதியில் உபயோகிக்கப்பட்ட கண்ணாடிப்பாத்திரங்களைக் கழுவிக்கொண் ருந்தார். வந்தவர் அவரையும் அணுகி உரிமையாளர் எங்கே என்றார். அதற்கு அவர் நான்தான் என்றார். வியந்தேபோனார் வந்தவர். இவ்வளவு பெரிய உணவு விடுதியின் உரிமையாளர். இவ்வாறு பாத்திரம் கழுவுவதா?......வந்த வேலையை முடித்ததும் வந்தவர் நேரிலேயே அவரிடம் கேட்டுவிட்டார். இவையனைத்தும் எனது உரிமைப் பொருட்கள். மேலும் கண்ணாடிப்பாத்திரங்கள். இவற்றைப் பாதுகாக்கும் கரிசனை என்னைவிட இங்கே யாருக்கும் அதிகம் இருக்கமுடியாது. ஆகவே இதை நானே செய்கிறேன் என்றார் உரிமையாளர். அவரைக் காண வந்திருந்த இவர் ஒரு இந்தியர். விடவில்லை. மேலும் கேட்டார். யாரேனும் ஒரு சிப்பந்தியை இப்பணியில் ஈடுபடுத்தி அப்படி அவரால் ஒரு பொருள் உடைந்தாலும் தான் என்ன? அதற் கான விலையைத்தான் அவரிடம் நீங்கள் பெற்றுக்கொள்ளலாம், அவர் உங்களிடம் பணி புரிபவர் அவரது ஊதியத்தில் இருந்துகூட அதற்கான விலையை நீங்கள் வசூலித்துக்கொள்ள முடியுமே என்றார். ''யார் நஷ்டப்படுத்தினால் என்ன? நஷ்டப்படுவது இந்த நாட்டின் பொருள்தானே, ஒரு சிறிய தேவை வீணாகிவிடுமே என்றார்,'' உரிமையாளர். தனியார் உடைமையையும் நாட்டு உடைமை என்று பாதுகாக்கும் ஜப்பானியரின் பேராண்மை கண்டு வியந்துபோனார் இந்தியநண்பர். இவ்வாறான குடிமக்களைக் கொண்டிருப்பதால்தான்; தொழில் முதலிய எல்லா நிலைகளிலும் ஜப்பான் நாடு சர்வதேச நிலையில் உயர்ந்து நிற்கிறது!

காந்தியடிகளின் சொற்பொழிவை மெய்மறந்து ஒரு கூட்டத்தில் ஒரு தடவை கேட்டுக்கொண்டிருந்த ஒருவன், தனது சட்டைப்பையிலிருந்த காசுப்பையைக் களவு கொடுத்துவிட்டான் கூட்டம் முடிந்ததும் காந்தியடிகளிடம் போய் முறையிட்டான் அவன். காந்தியடிகள் அவனுக்கு நூதமான முறையில் பதிலளித்தார். பணத்தை உன்னிடம் இருந்து எடுத்தானே அது அவனுடைய பணம்தான், கொண்டு போகட்டும் விடு என்றார் காந்தியடிகள். காந்தியடிகளின் கூட இருந்தவர்களுக்கும் அவரின்

இந்த தீர்ப்பு விநோதமாகப்பட்டது. நிதானமாக அவரிடம் அதற்கு விளக்கம் கேட்டனர். காந்தியடிகள் சொன்னார்—"பணம் இவன் (களவு கொடுத்தவன்) கையிலே இருந்தது என்னவோ உண்மை, ஆனாலும் இவனுக்கு அதன்மேல் இருந்த கரிசனையைக் காட்டிலும், அவனுக்கு (எடுத்தவன்) அதிகமான கரிசனை இருந்தது. அதனால் அவன் அதன்மேலேயே கண்ணாக இருந்திருக்கிறான். எந்தப்பொருளானாலும் யாருக்கு அதன் மேல் கரிசனை மிகுதியுள்ளதோ அவருக்கே அது சொந்தமானது" இவ்வாறு பதிலளித்தார் காந்தியடிகள்.

நாட்டின் பொருள் பாதுகாப்பு, சொத்துக் கரிசனை ஆகியவற்றின் மீது இதுபோலவே காமராசரின் கண்ணோட்டமும் தனித்தன்மை கொண்டதாக விளங்கிற்று. ஊமை நண்பர் ஒருவர் காமராசரின் பிறந்த நாள்தோறும் அவருக்கொரு காந்தி பொம்மையைப் பரிசாக வழங்குவாராம். காமராசர் இதேன் உனக்கு வீண் செலவு என்று கண்டிப்பாராம்.[1] இப்படிப்பட்ட ஒரு தலைவரையா ஊழல் அணுகும்? ஊழல் கறை படியாத ஒரு சோஷியலிசவாதி காமராசர். சோஷியலிசம் என்பது வெறும் பொருளாதார தத்துவம் அல்ல. மனிதப்பண்புகளின் ஆழத்திலிருந்து தோன்றும் ஒரு சமுதாயக்கடப்பாடு. ஆண்டான் இல்லை அடிமை இல்லை என்ற சமதர்மக் கோட்பாடுதான் இது. தீண்டாமை ஒழிப்பை வலியுறுத்தி வெகுமுன்பே இதற்கு அடிகோலியிருந்தார் காந்தியடிகள். அதனை முழுமையான நிலையில் செயல்படுத்த காங்கிரஸ் உறுதி பூண்டிருந்தது.

இந்தச் சோஷியலிச சமுதாய வடிவமைப்பை இரண்டு விதங்களில் நடைமுறைப்படுத்த வாய்ப்பிருந்தது. ஒன்று தார்மீக முறையில் நடைமுறைப்படுத்துவது. மற்றொன்று கட்டாயத்தின் அடிப்படையில் நடை முறைப்படுத்துவது. ஒரு சாதாரணமான எடுத்துக் காட்டால் இதனை மேலும் விளக்கலாம். —தரையில் உறங்குகிறான் ஒருவன். பாய்விரித்து உறங்குகிறான் மற்றொருவன். இது சமநிலை அன்று. இதில் சமத்துவம் இல்லை. இந்த ஏற்றத்தாழ்வை இரண்டு விதங்களில் போக்கலாம். பாய் விரித்து உறங்குபவனிடத்திலிருந்து சட்டென்று பாயை அபகரித்துக் கொண்டு அவனையும் தரையிலே உறங்கவிடுவது. இது ஒருமுறை. இதனாலும் சமத்துவம் வரும். இம்முறை எளியதும் கூட. ஆனால்

---

1. கக்கன். ஜீ.; 'உழைப்பே உயர்வு தரும்'; மதிப்புரை

கட்டாயத்தால் நடைமுறைப்படுத்துவது இது. மாறாக மற்றொரு முறையும் உண்டு. புதிதாக ஒரு பாயை பின்னி எடுத்துக்கொண்டு வந்து தரையில் உறங்குபவனுக்குத் தந்து அவனையும் பாயில் உறங்கவைப்பது. இங்கும் சமத்துவம் வரும். ஆனால் இம்முறை கடினமானது. உடனே நடப்பது மன்று. இவ்விரண்டில் காமராசர் அரசு இரண்டாம் முறையினையே ஆதரித்தது. இதற்குத் தான் ஜனநாயக சோஷியலிசம் என்று அவர் பெயர் தந்திருந்தார். ஒரு கட்டத்தில் பின்வருமாறு குறிக்கின்றார்—

> "சமவாழ்வுச் சமுதாயத்தை அமைக்கும் பணியைக் கட்டாயத்தின் மூலம் செய்ய விரும்பவில்லை காங்கிரஸ்."[1]

> "போதனை முறைகளையே கையாண்டு உடைமைவர்க்கத்தின் உள்ளத்தில் உயிரிரக்க விளக்கினை ஏற்றுதல்"[2] இதுவாகும்.

> "ஜனநாயகம் பலாத்காரத்தினாலேயே நிலைத்திருப்பதாக இருந்து வரும்வரையில் பலவீனமானவர்களுக்காக அது இருக்க முடியாததோடு அவர்களை அதுபோல் பாதுகாக்கவும் முடியாது"[3] என்றார் காந்தியடிகளும்.

இந்த ஜனநாயக சோஷியலிசம் நிச்சயம் நிலைநாட்டப்படும் என்றார் பெருந்தலைவர். இது அவரது வாக்குறுதியாகவே நமக்குத் தரப்பட்டது.

"சமுதாயத்தில் ஏற்கனவே சுகவாழ்வு வாழ்ந்து கொண்டிருக்கும் மக்களும் சமவாழ்வுக் கொள்கையை ஏற்றுக் கொள்வர். அதை எதிர்த்து நெடுநாள் வாழ இயலாது. அப்படிப்பட்ட சூழ்நிலை வந்து கொண்டிருக்கிறது"[4] என்றார் அவர்.

அவரைப் பொறுத்தமட்டில் சமதர்மம் அவரில் என்றோ குடிகொண்டு விட்டது. நாட்டின் சமதர்ம வாழ்விற்கே அவர் பாடுபட்டார். வருணனைகள் அவரது உரைகளில் இடம் பெற்றதே இல்லை. பேச்சளவிலே ஏழைகள் மந்திரம் ஓதினவர் அல்லர் காமராசர். ஒருதடவை ஒரு மன்றத்தின் விழாவில் கலந்து

---

1. நமசிவாயம், மு., மக்களாட்சி காமராஜ், பக். 155.
2. சிலம்பொலி செல்லப்பன்; இலக்கியச் சிந்தனைகள்; பக். 127-128.
3. இராசம்மாள் தேவதாசன்; முதன்மை ஆசிரியர்-விஞ்ஞானச் சுடர் (திங்கள் இதழ்); கோவை, மே 90.
4. நமசிவாயம், மு.; மக்களாட்சி காமராஜ், பக். 155-156

கொண்டார் அவர். குடிசைவாழ் மக்கள் சங்கம் அது. உரையின் தொடக்கத்திலேயே அங்கே வைக்கப்பட்டிருந்த பெயர்ப் பலகையைச் சுட்டிக்காட்டி அவர் கூறினார் :-

> "குடிசை வாழ் மக்கள் சங்கம் என்று போட்டிருக்கிறீர்கள் நீங்கள் எங்கே வாழுகிறீர்கள்? நீங்கள் ஒன்றும் வாழவில்லை உங்களுக்கு மின்சாரம் கிடையாது, எனக்குத் தெரியும், உங்களுக்கு தண்ணீர் கிடையாது எனக்குத் தெரியும். குடிசையில் இருந்துகொண்டு வாழுகிறோம் என்றால் நிச்சயம் இது இருக்காது" இவ்வாறு யதார்த்தத்தைப் பேசுவதே அவரது இயல்பாகத் திகழ்ந்தது.

வஞ்சிமாநகரைவிட்டு மலைவளங் காணப் புறப்பட்ட சேரன் செங்குட்டுவன் மலைவாழ் மக்கள் வாழும் இடத்தில் வந்து பரிவாரங்களோடு தங்கினான். தங்கள் அரசனைப் பலவித கையுறைகளோடு வந்து கண்ட குறவர்கள் "ஏழ் பிறப்பும் அடியேம் வாழ்க நின் கொற்றம்" என வாழ்த்தினர்.[1] ஏழு ஜென்மங்களுக்கும் சேரனே அவர்களுக்கு அரசனாதல் வேண்டும் என்பது அதன் பொருள். இன்று நிச்சயிக்கப்பட்ட ஐந்து ஆண்டுகளிலேயே ஆட்சியை மாற்றவன்றோ துடிக்கிறோம்! எவ்வளவு உயர்ந்த முறையில் பாதுகாத்து ஆட்சி செய்திருந்தால் அம்மக்கள் சேரனை அவ்வாறு வாழ்த்தியிருப்பார்கள்? சமதர்மவாதி ஏழை பங்காளர் காமராசரும் சேரனுக்குக் கிடைத்தது போன்ற வாழ்த்திற்குரியவராகவே விளங்கினார். அரசுக் கவிஞர் எஸ். டி. சுந்தரம் பெருந்தலைவரை வாழ்த்தியதும் அவ்வாறே —

> "ஏழை எளியோரின் ஏகப்பிர திநிதி
> எங்கள் தலைவர் அண்ணல் வாழியவே
> ஏழேழ் பிறப்பிற்கும் இந்திய நாட்டினில்
> இமயத் துவான் புகழ் வாழியவே"

**நிறைவுரை**

காமராசர் ஆண்ட ஒன்பது ஆண்டுகளும் தமிழகத்தின் பொற்காலமாகும். இது உலகறிந்த உண்மை. பிற பல மாநில அரசுகளும் பின்பற்றும் மாதிரி அரசாகத் திகழ்ந்தது தமிழக அரசு. ஆளுங்கட்சியால் மாற்றுக் கட்சியினர் நடத்தப்பட்ட விதம், மக்கள் நன்மை பெற்ற முறை அனைத்துமே முன்மாதிரியாகத் திகழ்ந்தன.

---

1. சிலப்பதிகாரம் : 25-56

எடுத்துக்காட்டாகக் காமராசரின் திட்டத்தை ஏற்றுக் கொண்டு உடனடியாக மற்ற தலைவர்கள் பதவி விலகியதைக் குறிப்பிடலாம். மோரார்ஜிதேசாய், பாபு ஜெகஜீவன்ராம், எஸ். கே. பாடீல், லால்பகதூர் சாஸ்திரி. ஸ்ரீமாலினி, டி. கோபால்ரெட்டி என்று பெரிய தலைவர்களெல்லோரும் பதவி விலகினர்.[1]

வளமானதோர் எதிர்கட்சி செயல்பட்டது காமராசருடைய ஆட்சிக்காலத்தில். மாற்றுக் கட்சியினரை நன்கு மதித்த பேராளர் அவர். மாற்றுக்கட்சியினரின் திட்டங்கள் நன்மை பயக்கும் என்று கண்டால் அவற்றிற்கு முட்டுக்கட்டை போடும் பிற்போக்குச் சிந்தனை அவரிடம் காணப்படவில்லை. மாற்றுக்கட்சியினரும் ஊழல் சேற்றை அவர்மீது வீசியதில்லை. அவருடைய இறுதி நாட்களில் அவர் பதவியிலிருந்து சம்பாதித்தது என்று காட்டத் தக்க வகையில் ஒரு வீடுகூட இல்லாதிருந்தது. அவருடைய வங்கிக் கணக்கிலும் மிகவும் குறைவானதொரு தொகையே இருந்ததாம்.[2] காமராசரின் கைச்சுத்தம் அனைவரையும் கவர்ந்தது. ஒரு அரசியல் துறவியாகவே வாழ்ந்தார்.[3] அவரே பாரத நாட்டின் பிரதமராக வரவேண்டும் என்று விரும்பினர். பதவி விரும்பாத அவர் அப்போதுதான் நாடாளும் பொறுப்பினை இந்திராகாந்தியிடம் பெரும்பாலான கட்சி உறுப்பினர்களின் ஆதரவுடன் ஒப்படைத் தார். தமிழகத்தின் முதலமைச்சராக, அகில இந்திய பெரும் அரசியல் தீரராக விளங்கிய காமராசரால் தமிழன் தலைநிமிர்ந்து நின்றான் என்பது அனைவரும் அறிந்த உண்மையாகும். இவ்வாறெல்லாம் பெருந்தலைவரின் அரசாண்மையைப் புடம் போட்டுப் பார்த்ததில் சங்க காலத்தின் பொற்காலமே மீண்டும் வந்ததோ என்று வியக்கும் நிலையே இருந்துள்ளது. சங்ககாலச் சமுதாயத்தை நீர்நாண நெய் வழங்கியும், எண் நாணப் பல வேட்டும், மண்நாணப் புகழ் பரப்பியும் வாழ்ந்த பொற்காலச் சமுதாயமாக உருவாக்கிய அக்காலத் தலைவர்க்குச் சேர்ந்த புகழுரைகளெல்லாம் பெருந்தலைவர்க்கும் பொருந்துவதாகும். அவர்களது செயலாண்மையும் அவ்வாறே பொருந்துகின்றன.

---

1. சண்முகம் ர.; நம் விடுதலை வீரர்களின் வரலாறுகள்; ப. 101
2. மேற்படி. ப. 87
3. திலீபன்; 100 ஆண்டு காங்கிரஸ்; ப. 145

1. "கண்பொர விளங்குநின் விண் பொருவியன் குடை
வெயில் மறைக் கொண்டன்றோ? அன்றே வருந்திய
குடி மறைப்பதுவே; கூர் வேல் வளவ"[1] என்பது

"மந்திரியாவது மாலை வாங்கிக் கொண்டு சுற்றுவதற்கு அல்ல"[2] என்ற பெருந்தலைவர் காமராசரின் கூற்றிற்கு நேருக்கு நேர் பொருந்த நிற்கிறது.

2. "வெண் குடை நிழற்றும் ஒருமை யோர்க்கும்
கடுமாப் பார்க்கும் கல்லா ஒருவர்க்கும்
உண்பது நாழி உடுப்பவை இரண்டே"[3]

என்ற நக்கீரனின் அறை கூவல்,

"பசி என்றால் எல்லோர்க்கும் ஒன்றுதான், திராவிடன் பசி ஒருவிதமாகவும் ஆரியன் பசி வேறுவிதமானதாகவுமாகவா இருக்கிறது?"[4] என்ற பெருந்தலைவரின் கூற்றிற்குப் பொருந்த நிற்கிறது.

3. "அறிவுடை வேந்தன் நெறி அறிந்து கொளினே
கோடி யாத்து நாடு பெரிதும் நந்தும்"[5]

என்று பாண்டியன் அறிவுடை நம்பிக்குப் பிசிராந்தையார் வழங்கிய அறிவுரை "ஏழைகள் மனம் கோணாத அளவிற்கு வரி போடணும்"[6] என்ற பெருந்தலைவரின் வரிக் கொள்கைக்கு முற்றிலும் ஒத்து நிற்கிறது.

4. ஆவூர் மூலங்கிழார் செவியறிவுறூஉ ஆக வைத்த உரை (அரசியல் ஆலோசனை)

"ஒரு பிடி படியும் சீறிடம் ஏழு களிறு புரக்கும்
நாடு கிழவோயே"[7] என்பது

"யானையின் ஒரு கவளம் சிந்தினால் இலட்சக்கணக்கான எறும்புகளுக்கு ஆகாரம் ஆகிறதே"[8] என்ற பெருந்தலைவரின் கூற்றினையொத்துள்ளது.

---

1. புறநானூறு 35 : 19-21
2. நமசிவாயம், மு , 'மக்களாட்சி காமராஜ்'; ப. 73
3. புறநானூறு : 189
4. அருண்; உழைப்பே உயர்வு தரும்; ப. 108
5. புறநானூறு : 184
6. நமசிவாயம், மு., மக்களாட்சி காமராஜ்; பக். 97-98
7. புறநானூறு : 40
8. நமசிவாயம், மு., மக்களாட்சி காமராஜ்; ப. 68

5. "செல்வத்துப் பயனே ஈதல்
துய்ப்பம் எனினே தப்புந பலவே"[1]

என்ற நக்கீரர் பெருமானின் செல்வத்தைப் பங்கிடும் கொள்கை,

"செல்வம் பெருகும்போது அதைப் பயன்படும்படிச் செய்ய வேண்டாமா"[2] என்ற பெருந்தலைவரின் அறிவுரைக்கு ஒத்து விளங்குகிறது.

6. "மேற்பால் ஒருவன் கற்பின் கீழ்பால் ஒருவனும்
அவன்கட் படுமே"[3]

என்ற ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனின் கல்விக் கொள்கை-

"படித்துவிட்டால் உலகம் தெரிகிறது. நீ என்ன உயர்வு? நான் என்ன மட்டமா? என்று கேட்கும் தைரியம் ஏழைக்கும் வந்து விடுமல்லவா?"[4] என்று பெருந்தலைவர் கூறிய அறிவுரைக்குப் பொருந்தி நிற்கிறது.

சங்ககால அரசரின் ஆட்சிக் கொள்கைகள்; சான்றோரின் சமுதாயச் சிந்தனைகள் ஆகியன முற்றிலும் காமராசர் காலத்துச் சிந்தனைகளையும், செயல்பாடுகளையும் நேருக்குநேர் ஒத்து நிற்கின்றன. சங்ககால அரசின் மறுபதிப்பே காமராசர் அரசு என்று சாதிக்க வழியுண்டு. புறநானூற்று வாசகந்தான் காமராசரின் பொற்கால அரசின் சாசனமோ என்று எண்ணவும் தோன்றும். உண்மையிலேயே சங்க இலக்கியங்களை மிகவும் பாராட்டியவரும் கூட காமராசர். ஒரு சூழ்நிலையில் அவர் கூறியுள்ளார்—

"உண்மை வரலாறு தெரியவேண்டும் என்றால், சங்க நூல்களைத் தான் தேடிப்படிக்க வேண்டியதிருக்கிறது"[5] என்று!

தோற்றமும் வளர்ச்சியுமன்றி, பொற்காலம் கண்ட இப்பெருந் தலைவரின் வாழ்க்கையின் முடிவும் பொற்காலம் கண்ட அப்பெரு மக்களின் முடிவையொத்தே விளங்கினதென்றால் எத்துணை வியப்பான செய்தி அது! சங்ககாலச் சான்றோர் ஈகைக்கும் நட்புக்கும் இலக்கணமாக வாழ்ந்து தங்கள் தலைவர்களை வாழ்த்தும்போதெல்லாம், அவர் தம் வாழ்வு பற்றிய ஒரு நல்லெண்ணக்

1. புறநானூறு : 189
2. நமசிவாயம், மு., மக்களாட்சி காமராஜ்; ப. 15
3. புறநானூறு, 183
4. நமசிவாயம், மு., மக்களாட்சி காமராஜ், ப. 195
5. மேற்படிப : 178

குறிப்பை வைத்து வாழ்த்துவது மரபு. தங்கள் தலைவர்கள் வீர மரணமே எய்தல் வேண்டும். நோய்வாய்ப்பட்டு இறத்தல்கூடாது என்பது அவர்தம் வேண்டுதலாக இருந்தது. "நோய் இவன் ஆகிப் பெயர்க"[1] இவ்வுலகை நீத்தவேளை பெருந்தலைவரும் நோய் வாய்ப்பட வில்லை. விடுதலை வாங்கித்தந்த நாட்டுத்தந்தை காந்தியடிகள் பிறந்த அதே அக்டோபர் 2இல் சொல்லிவைத்தது போல் தமது வாழ்வை முடித்துக்கொண்டார். தங்கள் முடிவை யும் தமது கட்டுப்பாட்டிற்குள் வைத்திருக்கும் ஆற்றல் மகான் களுக்கே உரியது. அத்தகைய மகான்களுள் தாமும் ஒருவர் என்பதைப் பெருந்தலைவர் உறுதிபடுத்திவிட்டார். அவரது அரசியல் வாழ்வின் சிறப்பை முன்னாள் அமைச்சர் கக்கன்,

"முயற்சியுடையோர்க்கு அவர் நல் நம்பிக்கை
தொழிலாளர்க்கு அவர் ஓர்
தோன்றாத் துணை
சோம்பித் திரியும் மெத்தனமான மனிதருக்கு
அவர் ஒரு தூண்டு கோல்
முன்னேறத் துடிக்கும் சமுதாயத்திற்கு
அவர் ஏற்றதொரு தலைவர்.[2] என்று புகழ்ந்தார்.

இழந்துவிட்டோம் அத்தலைவரை. இயற்கையின் நியதி அது. ஆனாலும் கல்வி உள்ள இடங்கள்தோறும் காமராசர் உண்டு. ஏழைகள் உள்ள இடங்கள்தோறும் இந்த ஏழைப்பங்காளர் உண்டு. எதை நாம் மறந்தாலும் அவர்கூறிய ஒரு வாசகத்தை மட்டும் மறவாமல் நினைப்போமாக!

"இறந்த பின்னும் வாழ நினைத்தால்
நீ வாழும்போது நன்மை செய்"—காமராசர்.

---

1. புறநானூறு 13 : 9
2. கக்கன் ஜீ. "நமது தலைவர்" (கட்டுரை) முன்னேற்றப் பாதை (நூல்) ப. 80

# காமராசரின் மனிதநேயம்

மனிதன் என்கிற சொல் அதன் அமைப்பிலேயே—தன்— என்கிற தன்னலக் குறியீட்டைக் கொண்டு விளங்குவதுபோலவே மனிதன் இயல்பாகவே தான், தனது, தனக்கு, என்ற தன்னலத் திற்கு இலக்காகி நிற்கிறான். இந்தக் குறுகிய வட்டத்திலிருந்து ஒருவன் தன்னை விடுவித்துக் கொள்ளும் பாங்கே மனித நேயம் என்று போற்றத்தக்கது. தான் தனது தனக்கு என்ற நிலை யிலிருந்து விடுபட்டு மன்பதையையே நினைக்கும் நிலை இது. இது மிக அரிதான ஒன்று.

''மற்ற மனிதர்களின் கண்களே நம்மைக் கெடுக்கும், என்னைத் தவிர மற்றவர் யாவரும் குருடராய் இருந்தால் எனக்கு நேர்த்தி யான உடையோ பெரிய வீடுகள் உயர்ந்த நாற்காலிகள் முதலிய வைகளோ தேவையில்லை'' என்றார் மேனாட்டு அறிஞர் ஒருவர்.[1] மனிதன் என்பவன் மற்றவர்களைப்போலவும் மற்றவர்களைக் கொண்டும் வாழ நினைக்கிறானேயொழிய; மற்றவர்களுக்காக வாழ நினைப்பவன் என்பவன் மிக அரிதாக விளங்குகிறான். மனிதன் மனிதனாக மனிதனுக்கென்று மனிதனோடு பரந்து நின்று செயல்படும் நிலையே மனிதநேயம் எனலாம். கடவுட்டன் மையும் இதனைப் பெற்றிருக்காவிட்டால் முழு அழகு பெறாது. கடவுளர் அவதாரம் எடுத்தனர் என்று கூறுவது இந்த மனித நேயத்தை ஏற்றுச் செயல்படவே எனலாம். அத்தகைய மனித நேயசீலரே காமராசர்.

''பணிவுடையன் இன் சொலன் ஆதல் ஒருவற்கு''[2]

---

1. பெஞ்சமின் பிராங்கிளின்.
2. குறள் : 95

"செயற் பால தோறும் அறனே, ஒருவற்கு"[1]
"அஃதொருவன், விற்றுக் கோள் தக்கதுடைத்து"[2]
"அஞ்சுவ தோரும் அறனே ஒருவனை"[3]
"அஃதொருவன் பெற்றான் பொருள்"[4]
"ஒருவர்க்கு மாடல்ல மற்றயவை"[5]

இவ்வாறெல்லாம் குறள் நூல் முழுவதும் ஆங்காங்கே 'ஒருவர்க்கு' 'ஒருவன்' என்று குறிக்கப்படும் 'அவன்' இந்த மனித நேயம் எதிர் பார்க்கப்படும் மாந்தனே. அவனே குறள் நாயகன். வள்ளுவர் படைத்த இலட்சிய மாந்தன் எனலாம். அந்த மனிதநேய சீலனைப் பெயரிடாமலேயே நிறுத்தியுள்ளார் வள்ளுவர் மன்பதைக்கு ஒருமாதிரி மாந்தனாக! இக்குறள் நாயகனுக்குப் பெயரிடவேண்டுமென்றால் 'காமராசர்' என்று பெயரிடலாம். குறள் நாயகனைப்போல் மனிதநேயம் திகழ்ந்த ஒரு அரசியல் நாயகன் காமராசர். கலியுக தருமன், பாரதநாட்டுச் சாலமோன், துறவுத் தலைநின்ற இரண்டாம் சீவகன், இவ்வாறெல்லாம் இந்த சத்தியச் சீலருக்கு மறுபெயர்களிட்டு அழைக்கலாம். மனிதநேயத் தடாகமாக விளங்கியுள்ள குறள் நூலின் அறம் பொருள் இன்பம் (காமம்) என்ற பாடுபொருள்கள் அறத்துப்பால் பொருட்பால் காமத்துப்பால் என்று முப்பால் பாகுபாட்டினைக் கொண்டு விளங்குவதை அறிவோம். அறத்துப்பால் பொருட்பால் காமத்துப் பால் என்ற இந்த முப்பால்களுள் காமத்துப்பாலைத் தம் பெயரளவில் நிறுத்திக் கொண்டு ஏனை இருபாலாகவும் வாழ்ந்து காட்டியவர் பெருந்தலைவர். நடமாடும் குறள் என்று அவரைக் குறிப்பிட்டால் அது மிகையாகாது. மாபெரும் தலைவன் என்று தாம் அழைக்கப்படுவதைக் காட்டிலும் 'மனிதன்' என்று மதிக்கப் படுவதையே அவர் விரும்பினார்.

வெள்ளையர் அரசு விடுதலைக்கு முன் மாநில சுயாட்சி வழங்கித் தேர்தல்களை நடத்திய போது சிறைக்குள்ளிருந்த படியே தேர்தல் ஒன்றில் வெற்றி வாகை சூடினார். பின்னரும் வெள்ளையரின் ஆட்சியில் எப்பதவியையும் ஏற்கக் கூடாதென்று அப்பதவி துறந்து விட்டார்.[6] 1952இல் விடுதலைக்குப் பின்னும்

1. குறள். 40
2. ஷை 220
3. ஷை 336
4. ஷை 260
5. ஷை 400
6. பார்த்தசாரதி, ஆர், டி.; தமிழ்நாடு தந்த தலைவர்கள்; ப. 111

காங்கிரஸ் பொதுத் தேர்தலில் மாபெரும் வெற்றியை ஈட்ட வில்லை என்பதற்காகத் தார்மிகப் பொறுப்பேற்று கட்சித் தலைமையைக் கைவிட்டார், 1963இல் காமராசர் திட்டத்தின் கீழ் முதலமைச்சர் பதவியை இராஜிநாமா செய்தார். இவ்வாறு வந்து விழுந்த பதவிகளை யெல்லாம் பந்துபோல் உதைத்துத் தள்ளிய அவரது தியாக சீலம் அவரது மனிதநேயத்தின் உயர்நிலை என்று கூறவேண்டும்.

தங்கள் சொந்த நலனுக்காகப் பதவி துறந்தவர்கள் உலக வரலாற்றில் உண்டு இங்லாந்தின் ஐந்தாம் எட்வர்டு மன்னர் ஒரு விதவையை விரும்பினார், பாராளுமன்றம் அதைக் கண்டித்தது, இறுதியில் ஆட்சிபீடமா, காதலியா என்ற நிலை வந்தபோது தமது விதவைக் காதலிக்காக அவர் அரசைத் துறந்தார் என்பது உலக வரலாறு. அது முழுவதுமான சுயநலத்தின் அடிப்படையிலான பதவித் தியாகம் ஆகும். காமராசரின் பதவித்தியாகங்கள் எல்லாமே மனிதநேயத்தின் அடிப்படையில் அமைந்தவை. தொண்டனுக்குத் தொண்டனாக இருப்பதையே அவர் விரும்பினார். 1969இல் காங்கிரஸ் இரண்டாகப் பிரிந்து இந்திரா அலை நாடெங்கும் வீசிய காலை பதவிக்காக ஆசைப்பட்டு அவரும் அந்த அலையோடு அலையாக அடித்துச் செல்லப்படவில்லை. மாறாகத் தமது கொள்கை காத்து எதிரணியிலேயே நின்று விட்டார்.

அரிமர்த்தன பாண்டியனிடம் அமைச்சராக இருந்த திருவாதவூரர் தாம் கொண்ட பக்திக் கொள்கைக்காகத் தம் பதவியைத் துச்சமென மதித்தார். 20 ஆம் நூற்றாண்டின் மாணிக்கவாசகராகவே விளங்கினார் மனிதருள் மாணிக்கமான காமராசரும். யாமார்க்கும் குடியல்லோம்; நமனையஞ்சோம் என்றார் அப்பர். விடுதலைப் போரின்போது இவ்விதமாக நெஞ்சு நிமிர்த்து நின்றவர்தான் பெருந்தலைவரும்,. அதனால் 20ஆம் நூற்றாண்டின் அப்பரும் ஆவார்.

மனித குலத்திற்கு ஓயாமல் உழைப்பதே மிகச்சிறந்த நன்னெறி என்றார் காந்தியடிகள். அந்தக் காந்தியத்தில் தோய்ந்து அகிம்சை எனும் அச்சில் வார்ப்புக் கொண்டதே காமராசரின் மனித நேயம் - அதில் சுய நலம் தலைகாட்டவில்லை. பேராசைக் குடி கொளளவில்லை. மாறாக நல்ல கருணை தெரிந்தது. கடமை மிளிர்ந்தது. துணிவு நிறைந்து காணப்பட்டது. காமராசரின் வாழ்க்கை என்பது ஒரு சாதாரண மனிதனின் வாழ்க்கை என்று கூறிவிடமுடியாது. சுமார் அரை நூற்றாண்டுக் காலம் நிகழ்ந்த இராஜசூயம் வேண்டிய. மனிதநேய வேள்வி.

வீரனுக்குப் போராடுவதே வெற்றி. ஏனெனில் அவன் போராட்டத்தில் இன்பத்தைக் காணுகிறான் என்று கூறினார் காந்தியடிகள், காமராசரும் தம் வாழ்வில் போராட்டங்களிலேயே சுகங்கண்டவர். விவரம் தெரிந்த வயது முதல் 40 ஆண்டுகள் அரசியல் வாழ்வில் 3000 நாட்களை அவர் சிறையிலேயே கழித்தவர். அதாவது 10 ஆண்டுகள், இன்னும் சொன்னால் அரசியல் வாழ்வில் $\frac{1}{4}$ பகுதி சிறைவாழ்வு வாழ்ந்தவர். நாட்டிற்காக நாட்டுமக்களின் நலனுக்காக! எஞ்சிய காலத்திலும் கூட பதவியி லிருந்த 9 ஆண்டுகளைத் தவிர்த்து ஏனை இருபது ஆண்டுகளும் போராட்டங்களிலேயே கழிந்தன. காந்தியடிகளே கூறியிருக் கிறார்--

'நல்ல காரியங்களுக்காகத் தம்மைத் தியாகம் செய்ய முற்பட்டால், பணம் பெரிதாகத் தோன்றாது' இதனைத் தமது வாழ்வில் சோதனை செய்து கொண்டு வெற்றி பெற்றவர் காமராசர்.மெய்யாகவே போராட்டத்தில் முழு மூச்சாக ஈடுபட்ட அவருக்குத் தமது ஆயுள் இன்சூரன்ஸ் வேலை பெரிதாகப்பட வில்லை. பணத்தாசை இல்லாமல் போனது. தமது வேலையை உதறித் தள்ளிவிட்டே கட்சிப் பணிகளில் ஈடுபட்டார் அவர். "அகிம்சை அதிகாரத்தை ஏற்க விரும்பாது. அது அதன் குறிக்கோளுமல்ல. ஆனால் அது அதிகாரத்தை வழிப்படுத்தும், முறைப்படுத்தும்" என்பதும் காந்தியடிகளின் சத்தியவாக்கு.

காமராசரும் பதவியைப் பெரிதாக மதிக்காதவர் என்பதற்கு, அவரது திட்டமெனப் பெயர் பெற்ற 'காமராசர் திட்டம் சான்றாகும். மேலும் இந்திய அரசியலில் சிக்கல்கள் உண்டான காலங்களிலெல்லாம் சிக்கல்களைத் தீர்த்துவைத்து அரசியலை முறைப்படுத்தினவரும் அவரே ஆவார். நேருவிற்குப்பின் யார் என்ற வினா சிக்கலை உருவாக்கிய வேளை பொருத்த முடன் லால்பகதூர் சாஸ்திரியை நியமிக்க உதவினார். இந்திரா அம்மை யாருக்கும் மொரார்ஜிதேசாய்க்கும் அதன்பின்னர் பலத்தபோட்டி எழுந்த வேளை ; காமராசர் தலையிட்டு அச்சிக்கலைத் தீர்த்து டெல்லி அதிகாரத்தை முறைப்படுத்தினார். "தியாகம் தன்னை அறியாது, எண்ணிப்பார்க்காது. அதுவே இன்பம். வேறு எந்த இன்பமும் அதற்கு ஈடாகாது" என்றும் மொழிந்தார் காந்தி யடிகள். காமராசரும் இதற்கிணங்க, தான் தனது என்று எப் போதும் எண்ணியதே இல்லை. தியாகத்திலேயே இன்பங்

கண்டவர். பிரம்மச்சாரியாகவே காலம் முழுவதும் வாழ்ந்தார். ஒரு மனிதனுக்கு நியமிக்கப்பட்ட சராசரி சுகத்தையும்கூட காணதவர் அவர்.

இவ்வாறு காந்தியடிகளின் உண்மைமொழிகளை யெல்லாம் செயல்வடிவமாகக் காணும் வெறி கொண்டவரான காந்தீயப் பெருந்தலைவராக வாழ்ந்தார் காமராசர். இவரது பண்பாட்டு நிலை மிகச்சுருக்கமாகக் கீழ்க் கண்டவாறு குறிப்பிடப்படுகிறது—

''தமிழ் தழைக்க வந்த தவப்புதல்வர். மகாத்மாவின் உண்மையான சீடர்களில் முக்கியமான ஒருவர். காந்தீயத்தை அடிப்படையாகக் கொண்ட அரசியல் கிளர்ச்சிக்கும் வளர்ச்சிக்கும் ஓய்வு ஒழிவின்றி உழைத்தவர். உயர்ந்த பதவிகளை அந்தப் பெருநோக்குடனேயே தாங்கிச் சமாளித்துக் கொண்டார். தமது அறிவிற்கு எட்டாத அம்சங்களை இதயத்தில் இலங்கிய காந்தி பக்தியால் உணர்ந்து கொண்டார். மொழி வெறியோ, வகுப்பு வெறியோ, தம் தேசிய வாழ்வைக் கறைப்படுத்திவிடாமல் இயன்ற வரையில் ஜாக்கிரதையாக நடந்து கொண்டார். பேச்சாளியும் இல்லை; தேசமே இவர் குடும்பம். ஆம், பாரத தேசம். தமக்கென்று வேறுகுடும்பம் இல்லை, அந்தப் பாரத பூமியும் கிராம இந்தியா. தவறு என்று உணர்ந்ததும் ஒப்புக் கொள்ள ஒருக்காலும் தயங்கியதில்லை. ஏச்சுக்கும் பேச்சுக்கும் அஞ்சா நெஞ்சராய் தாமறிந்த காந்தீயப்போக்கிலேயே காரிய சித்திக்கு இன்றியமையாதவை எனத் தாம் கருதிய அம்சங் களையே நினைத்துக் கொண்டு ஒழுகி வந்த இவரோடு இராஜாஜி முதலானவருக்குக் கருத்து வேற்றுமையுண்டு. இவர் பொதுச் செயல்களில் வேறு எக்குறை கண்டாலும் தேசிய ஒருமைப் பாட்டிற்கு விரோதமான எதையும் அறிந்தோ புரிந்து கொண்டோ செய்யமாட்டார்.''[1]

மிகச் சிலராகவும், அரிதானவர்களாகவும் விளங்கின சங்க காலத் தலைவர்கள் எத்தகைய மனித நேயர்களாக விளங்கினர் என்று காட்டும் பழஞ் செய்யுள் ஒன்று உண்டு. அதில் சான்றோர் பண்புகளாக எட்டு வரிகள் குறிக்கப் படுகின்றன. திருக்குறள் கடவுட் பண்புகளையும் எட்டு என்கிறது. ''எண் குணத்தான் தாளை வணங்காத்தலை.''[2] இலக்கண நூல்களும் சான்றாண்மை

1. சோமையாஜுலு. ந., நெல்லை மாவட்ட சுதந்திரப் போராட்ட வரலாறு, ப. 217.
2. குறள்:9

என்பது எட்டு மூலத் தன்மைகளைக் கொண்டது என்கின்றன. அவையாவன: குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம், வாய்மை, தூய்மை, நடுவுநிலைமை, அழுக்காறாமை, அவாவின்மை ஆகியனவாம்.[1] இவ்வெட்டுத் தன்மைகளையும் கற்புடைய எட்டு உறுப்புகள் என்று குறித்துள்ளது வீரசோழியம். பழம்பாடல் ஒன்றில் இவ்வாறே எட்டுப் பண்புகள் வரிசைப் படுத்தப்பட்டுள்ளன. அப் பாடல் பின்வருமாறு:-

> "பெரிது ஆறாச் சிறு சினத்தர்
> சில சொல்லால் பல வேள்வியர்
> நுண் உணர்வினான் பெருங்கொடையர்
> கலுழ் நாளையான் தண் தேறலர்
> கனி குய்யான் கொழுந்துவையர்
> தாழ் உவந்து தழுவும் மொழியர்
> பயன் உறுப்பப் பிறர்க்கு ஆற்று
> ஏமம் ஆக இந்நிலம் ஆண்டோர்..."[2]

காமராசரின் மனித நேயத்திலும் எட்டுக் கூறுகளை அறுதியிட்டு ஆராயக்கூடும். அவருடைய எளிமை, அவருடைய கருணை, அவருடைய சாதுர்யம், அவருடைய நிதானம், அவருடைய நடுவு நிலைமை, அவருடைய பக்தி, அவருடைய தன்னம்பிக்கை, அவருடைய பெருமிதம், என்பன அவையாகும். இவ்வெட்டுப் பண்புகளாகப் பிறந்த நேயமே காமராசரின் மனிதநேயம். இவ்வெட்டுப் பண்புகளாலுமே அவர் பெருந்தலைவர் என்ற நிலைக்கு உயர்ந்தார். அவரால் மனிதகுலம் நலம் பெற்றது. ஒரு அரசியல் வாதியாக மட்டுமல்லாமல் ஒரு மனித நேயப் பண்பாட்டாளராகவும் அவர் திகழ்ந்தார். உழைப்பு எனும் ஆயுதம் ஏந்திய அகிம்சைவாதி அவர். பின் சென்றது பாரத நாட்டு மனுக்குலப் படையொன்று. அவரால் விடுதலை உணர்வு பெற்ற தோடன்றி அவரைப் பிரதிபலித்த மனிதநேயப் படையாகவும் திகழ்ந்தது அப்படை. அப்படைத் தளபதியாகத் திகழ்ந்தவர் காமராசர். எட்டுத் தன்மைகளைக் கொண்டுத் திகழ்ந்ததே அம்மனித நேயம்

## எளிமை

காமராசர் என்றாலே முன் நிற்கும் அவரது பண்பு அவரது எளிமையே. அவரது தோற்றமே எளிமையான தோற்றம்.

1. ஆசிரியமாலை புறத்திரட்டு
2. புறநானூறு: 360

நியூயார்க் டைம்ஸ் பத்திரிகையாளர் ஒருவர் காமராசரின் எளிமை யான தோற்றம் குறித்துக் கீழ்க் கண்டவாறு கூறியுள்ளார்.

''தென்னிந்தியக் குடியானவனின் முரட்டுத் தோற்றத்தை மூடி மறைக்க எந்த விதமான மெருகும் ஏற்றப்படாதவர். மலை போன்ற கருப்பு மனிதர்' அதில் ஒளிவிடும் வெள்ளைமீசை.''[1]

எளிமையின் சின்னமாகவும் தேசியத்தின் அடையாளமாகவும் காங்கிரசார் அணிந்து கொள்ள விதிக்கப்பட்டிருந்தது கதராடை. கட்சி ஒழுங்குகளுக்குக் கட்டுப்படுவதின் புற அடையாளமாகவும் அது விளங்கிற்று. கதராடையைத் தவறாது அணிந்து முன் மாதிரி காட்டினார் காமராசர். அதனை அணிவதிலும் நாகரிகத்தைக் கருதாது முழங்கைக்கும் தாழ மேற்சட்டை கைப்பகுதிகள் தொங்க தொளதொள வெனச் சட்டை அணிந்து அதிலும் தனக் கென்று ஒரு அடையாள முத்திரையைப் பதித்துக் கொண்டவர் காமராசர். ''எளிமையே உன் பெயர்தான் காமராசர்'' என்றார் அக்காலத்தில் பிரசித்தி பெற்றிருந்த நீதிபதி பி.வேணுகோபாலன்.[2] சிறிது நேர ஓய்வுக் கேனும் மெத்தை விரித்த கட்டிலையும் குளிர் சாதன அறை யையும் நினைத்திராத சீலர்.

மிகச் சிறந்த காங்கிரஸ் தொண்டரென அவர் பெயர் டெல்லி வட்டாரத்தையும் அசைக்கத் தொடங்கிய வேளை, பண்டித நேரு முதல் முதலில் காமராசரைக் காணத் தென்னகம் வருகிறார். காமராசர் என்றால் உயர்ந்தவர், மிக உயர்ந்த அந்தஸ்தை நாடி இருப்பவர் என்றெல்லாம் கற்பனை செய்து வருகிறார் நேரு. ஓய்வறையில் முதல் முதலில் அவரைக் காண்கிறபோது ஒரு சாதரண பெஞ்சில், தலைக்கடியில் கையை வைத்துப் படுத்திருந்த நிலை கண்டு வியந்து போகிறார்.

மிகச் சாதாரண மனிதராகத் தோன்றினார் அவர். அவ்வா றிருக்கவே விரும்பியும் உள்ளார். நகைச்சுவை எழுத்தாளர் சாவி, அவர் மிகச் சாதாரண மனிதராக நடந்து கொண்டதாக விளக்கி ஒரு நிகழ்ச்சியைக் கூறுகிறார்:-

காமராசர் முதல் அமைச்சர் பதவியிலிருந்து விலகி கட்சிப் பணியில் தீவிரமாக ஈடுபட்டவேளை. சாவி அவருடன் ஒரு

---

1. அந்தோணிதாஸ். ஜே.கா., நியூயார்க் டைம்ஸ்.
2. கல்வி வள்ளல் காமராசர் 12 ஆம் ஆண்டு நினைவு நாள் மலர்.

தடவை டெல்லியில் தமிழ்நாடு விடுயில் தங்கி இருந்தார், பகலெல்லாம் தலைவருடன் சுற்றியலைந்த களைப்பில் சாவி குறட்டை விட்டுத் தூங்க ஆரம்பித்து விட்டார். சில நிமிடங்களில் பெருந்தலைவர் அங்கு வந்து. ''சரியாப் போச்சு. நான் தான் குறட்டை விடுகிறவன்னா, நீங்க எனக்கு மேலே சத்தமா விடறீங்க. எழுந்து போய் பக்கத்து ரூமிலே படுத்துக்குங்கோ அப்பத்தான் நானும் நல்லாத் தூங்கலாம்' நீங்களும் நல்லாத் தூங்கலாம் என்று சொல்லி லேசாகச் சிரித்தாராம் தலைவர்.''[1] எளிமையுடன் தொண்டரோடு தொண்டராக வாழ்ந்தவர் காமராசர். பழம்பெரும் காங்கிரஸ் தொண்டரும் முன்னாள் நகர காங்கிரஸ் கமிட்டியின் செயலாளருமான தாம்பரம் ஆர். கிருஷ்ணன் அன்றொருநாள் பெருந்தலைவர் தமது இல்லத்திற்கு வருகை தந்த பசுமையான நினைவுகளை இன்றும் நினைத்து மகிழ்கிறார். தலைவரின் மரணச் செய்தி கேட்டு 2-10-1975இல் முதல் முதலில் அவர் இல்லத்திற்கு விரைந்த பொழுது அவரது பாதங்களைத் தொட்டு சூடு இருக்கிறதா என்று ஆராய்ந்த ஆர். கிருஷ்ணன் அப்போது எத்துணைப் பெரிய தலைவரின் அகில பாரதத்தையும் அளந்துவிட்ட பாதங்களைத் தொடுகின்றோமே என்று உணர்ச்சி வயப்பட்டுப் போனாராம்.[2]

கையில் கடிகாரம் கூட கட்டிக் கொள்ளாத முதலமைச்சர் ஒருவரை இந்த உலகம் இதுவரையில் கண்டதுண்டா? அத்துணை எளிமையாக வாழ்ந்தார். எத்துணைப் பெரிய தலைவர்! அவரது தோற்றத்தின் எளிமைகூட மனுக் குலத்திற்குப் பெரியதோர் படிப்பினையாகத் திகழ்ந்தது. "காட்சிக்கெளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல் மீக்கூறும் மன்னன் நிலம்''[3] என்று அரசனுக்கான இலக்கணத்தைக் குறள் நூல் குறிக்கையில் அரசனின் எளியகாட்சி முதலில் கூறப்படுகிறது. காட்சிக் கெளிமை என்பது செவ்வி காணுதலின் எளிமையைக் குறித்தது எனலாம். யாரும் எளிதில் சென்று மன்னனைக் காணும் நிலை அது. நீதியை எடுத்துரைக்க கண்ணகி பாண்டியன் அவை சென்றபோது கண்ணகி எளிதில் அனுமதிக்கப்படுகிறாள். அதோடு—''நீர்வார் கண்ணை என்முன் வந்தோய் யாரையோ நீ மடக் கொடியோய்'' என்று அனுதாபத்

1. சாவி, பழைய கணக்கு; ப: 53.
2. பேட்டி 6-5-90.
3. குறள் 386.

துடன் விசாரிக்கவும் படுகிறாள். இதுவே காட்சிக் கெளிய நிலை. இந்த நிலை காமராசர் ஆட்சிக் காலத்திலும் நிலவியது. யாரும் போய் அவரை எளிதில் காணமுடிந்தது. தங்களின் குறைகளைச் சொல்ல வாய்ப்பிருந்தது. காட்சிக் கெளியராய் காமராசர் விளங்கினார்.

இந்த எளிமையைக் காந்தியடிகளிடமிருந்து கற்றுக் கொண்டார் என்று கூறவேண்டும். காந்தியடிகளின் அந்த ராத்மாவே காமராசர். "அந்த காந்தி மகாத்மாவின் அந்த ராத்மா, ஆன்மிகப் பேரொளி, மனிதப் பண்புகளின் மாண்பு, சமயச் சஞ்சீவித் தன்மையைத் தன்னகத்தே இளம் வயதிலேயே காத்துக் கொண்டு வாழ்ந்த இயல்பினன் காமராஜ்'' என்று வரலாற்றாசியர்களும் குறிப்பிடுகின்றனர்.[1]

தோற்றத்தால் மட்டுமல்ல உள்ளத்தாலும் பெரியவர் காமராசர். அடைக்கலம் என்ற பெயருடைய சிறுவன் ஒருவன் தொழுநோயால் பாதிக்கப்பட்டிருந்தான். அவனது தந்தை தன் மகன் சிகிச்சைக்காய்க் காமராசரிடம் உதவி கேட்க வந்த போது அவர் பெருந்தலைவரிடம் பேசும்போதெல்லாம், சாமி சாமி என்று கைகுவித்து நின்று மரியாதையுடனும் அடக்கத்துடனும் பேசினார் அடிக்கொரு தடவை அவன் அப்படி சாமி சாமி என்றழைத்துப் பேசினது காமராசருக்குப் பிடிக்கவில்லை. 'இத பாருப்பா, நான் எல்லாம் கூட மனிதன் தான். வெறும் ஆசாமிதான். உன்னைப் போலவே மனுஷ ஜென்மந்தான், என்னை போயி சாமி ஆக்கி விடாதே தெரியுதா?' என்று கண்டித்தார் அவரை[2]. ஒரு தடவை சிறையிலிருந்து வெளியே வந்த காமராசருக்கு விருதுநகரில் பெரிய வரவேற்பு நிகழ்ந்தது. கூட்டத்தில் தலைவர் பேசும்போது ஒரு அரிய வேண்டுகோளை விடுத்தாராம்:

'நண்பர்களே, எனக்குத் தலைக்கனம் வரக்கூடாது. எல்லோரும் கடவுளிடத்தில் அதற்காகப் பிரார்த்திக்க வேண்டுகிறேன்' என்பதுதான் அந்தவேண்டுகோள்[3] பழகுவதற்கு இனிமை யானவராய் விளங்கியுள்ளார் பெருந்தலைவர். "இனிய பெருமஎமக்கே''[4] 'ஈண்டா இன்சாயலன்''[5] என்றெல்லாம்

1. நமசிவாயம். மு, காமராஜ் வரலாறு, ப. 569
2. ஷை ப. 564
3. தமிழ்வாணன், கல்கண்டு, "பத்திரிகையாளர் நெஞ்சில் காமராசர்'' ப. 207
4. புறநானூறு 94:3
5. ஷை 178

புறநானூற்றுப் பெருந்தலைவர்களின் எளிமையைக் குறித்து நிற்கும் புகழுரைகள் இங்கே ஒப்பிட்டு நோக்கத்தக்கன. குசேலருக்கு ஒரு கண்ணன், ஏழை எளிய தொண்டர்களுக்கு எங்கள் பெருந்தலைவர் என்று அவரது கட்சியாளர் போற்றும்படி வாழ்ந்தார் காமராசர்.[1]

காட்சிக் கெளியன் கடுஞ்சொல்லனல்லன்—என்றது போல் தோற்றத்தினால் மட்டுமன்றி, காமராசரின் பேச்சிலும் இனிமை இருந்தது. எதையும் எளிதாகவும் சிக்கனமாகவும் பேசி விளங்க வைத்தவர். "சில சொல்லாள் பல கேள்வியர்"[2] என்று புறநானூறு குறித்தது இதனைத்தான். உத்தரபிரதேசப் பத்திரிக்கை நிருபர் சங்கத்தில் ஒரு தடவை பெருந்தலைவர் பேசினார். அப்போது பெருந்தலைவரிடம்—ஐயா நீங்கள் ஏழே நிமிடங்களில் ஐம்பது கேள்விகளுக்குப் பதில் அளித்திருக்கிறீர்கள் என்று வியந்து கூறினார். ஒரு தேர்தல் பிரச்சாரத்தின் போது 2 மணி நேரம் 25 நிமிடங்கள் 8 பெரிய கூட்டங்களில் பேசி முடித்திருந்தாராம்.[3]

அலங்காரமொழி வருணனை ஜாலங்கள் அவருக்குத் தெரியாதன. தமது பேச்சு நடையில் ஒருவிதப் பாமரர் பாணியையே வருவித்துக் கொண்டவர்—"அதற்கு என்னன்னே, அவரும் வரட்டுமேன்னே, அப்புறமா எனக்கு என்ன வேலைன்னே..." இப்படி அவரது உரைப்பாணி பாமரரைக் கவருவதாகவே இருந்தது. "எனக் கென்ன வந்துன்னே, நல்லவே இருக்கேன்னே"[4] இப்படியான சில உரைகள் இன்னும் அவரது நண்பர்களின் செவிகளில் ஒலித்துக் கொண்டிருக்கின்றன. காமராசரின் உடைப்பாணி தனி, அவரது உரைப்பாணியும் தனியானதே, அவரது உரையாடல்களில் காணப்பட்ட பழமொழிகளும், தொடர்களும் பாமரர் நடுவே புழக்கத்தில் இருந்தவையே, சில எடுத்துக் காட்டுகள்:-

"வெந்த சோற்றை தின்னு விதி வந்தா சாவுன்னு இருக்க முடியுமான்னே"[5] "பரபரப்பு பகட்டுக் காலம் இது. சீக்கிரமா

1. சோமசுந்தரம். என்.டி. அரசுக்கவிஞர்,
2. புறநானூறு 360;2.
3. சங்கரன, எஸ். என். பத்திரிக்கையாளர் நெஞ்சில் காமராசர், ப. 178
4. சவுந்தரபாண்டியன், மறக்க முடியாத பெருந்தலைவர் ப. 36
5. நமசிவாயம் மு. மக்களாட்சி காமராஜ், ப. 166

பயனும் பலனும் வேணும் என்று பதைபதைக்கும் அவசரம்தான் கொடிக்கட்டிப்பறக்கிறது· ரிஷிபிண்டம் ராத்தங்காது...''[1]

''இந்தாப்பா ஏன் நேரத்தை வளர்த்திறே?''[2]

''கடுஞ் சொற்களைக் காட்டிலும் மென்மையான சொற்கள் எவ்வளவோ மேல்''. —இது காமராசர் அவர்களின் பொன் மொழிகளுள் ஒன்று. புறநூனூற்றுச் சான்றோரின் மனிதநேய இலக்கணமாகச் சொல்லப்பட்டவற்றுள்—தாள் உவந்து தழுவும் மொழியர், என்பது[3] காமராசரின் பேச்சுப்பாணியே எனலாம். காமராசர் பேச்சின் எளிமை பற்றி முன்னாள் கல்விநெறியாளர் கூறுகிறார்—

> ''முதல் அமைச்சர் காமராசர் பேச வேண்டிய முறை வந்தது. உலகளந்த உத்தமர் எழுந்து நின்றார். சொற்பொழிவு ஆற்றினாரா? இல்லை. உரையாடினார். குழந்தைகளோடு உரையாடுவது போல் இனித்தது''[4]

எவ்வளவு பெரிய தத்துவமானாலும் அதை எளிமைப்படுத்தி விளக்குவதிலே வல்லவர் காமராசர். பிரபல பத்திரிக்கையாளர் மணியன் அவருடைய உரையொன்றினை எடுத்துக் காட்டி பின் வருமாறு கூறுகிறார்—

''மேட்டுத் தெரு பண்ணையார் வீட்டிலே வாரத்துக்கு ஒரு தரம் மொட்டை மாடியைக் கழுவி விடுவாங்க, பாத்திருக்கீங்க இல்ல, மூணாவது மாடியிலே கழுவி விடற அந்தத் தண்ணி ஒரு பைப் வழியா கீழே வரும். அந்தக் குழாய் தரை வரைக்கும் வராது· மூணு நாலு அடி மேலே நின்னுடும், அப்படி விழற தண்ணியில் ஊர்ல இருக்கிற மொட்டைப் பசங்க தலையை நீட்டுவாங்க. அவங்களுக்கு அதுல ஒரு குஷி. மேலே இருந்து வர தண்ணியிலே ஒரு சக்தி இருக்குது. அது குஷியைக் கொடுக்குது. மூணாவது மாடியிலே இருந்து விழற அந்த தண்ணிக்கு இவ்வளவு சக்தின்னா, மலை மேலே இருந்து விழற தண்ணிக்கு எவ்வளவு சக்தி இருக்கும்! அந்தச் சக்தியை மலையடிவாரத்திலேயே மிஷின் வச்சுப்பிடிக்கிற அந்த சக்திதான் மின்சாரம். அந்த மின்சாரம் எதற்கு? எல்லாம்

---

1. நமசிவாயம். மு. மக்களாட்சி காமராஜ், ப. 370
2. அம்பி; நவசக்தி-பேட்டி
3. புறநானூறு 360,6
4. சுந்தரவடிவேலு, நெ. து. கல்வி வள்ளல் காமராசர், ப. 35

உங்களுக்குத்தான். ஹைட்ரோ எலக்டிரிக் தத்துவத்தை இதை விடவும் தெளிவாக யாரும் விளக்கக் கேட்டதில்லை.''[1]

இவ்வாறு மனோவாக்குக் காயத்தால் உள்ளமும் எளிமை, உரையாடலும் எளிமை, தோற்றமும் எளிமையென்று எளிமை பூண்ட மனித நேயராக விளங்கினார் காமராசர். இதனால் தான் எதனையும் மிக நுட்பமாக நிதானிக்கும் அறிஞர் அண்ணா காமராசரைப் பற்றிக் குறிப்பிடும்போது 'அவர் குணக் கொழுந்து' என்றார். காமராசரே எளிமை என்பதைப் பற்றி குறிப்பிடும்போது பின் வருமாறு கூறினார்.

''மகாத்மா காந்தியிடமிருந்த மகத்தான மிக மகத்தான அரும்பண்புகளில் முக்கியமாகப் பிரசித்தி பெற்றவை இரண்டு. அவை நடத்தையில் எளிமை, மனிதவர்க்கத்தின் சேவை என்பனவே. நாம் கனவு கண்டு வைத்திருக்கும் நவ இந்தியாவை இந்த இரண்டு கருவிகளைக் கொண்டு அமைப்போமாக.''[2] எளிமையை இதனால் தமது தொண்டுக்கான கருவியாகப் பெருந் தலைவர் கொண்டிருந்தார் என்பது புலனாகிறது. முதலமைச்ச ராக இருந்த போதும் சரி அதற்குப் பிறகும் சரி நடைமுறையில் எளிமையை அவர் கடைபிடித்ததற்கு எண்ணற்ற சான்றுகளைக் காட்டலாம். குறிப்பாக அவர் புகழ்விரும்பாமை ஒரு சான்று. இராஜஸ்தான் பல்கலைக்கழகம் அவருக்கு 'டாக்டர்' பட்டம் தர முன் வந்த போது அதை ஏற்க மறுத்து விட்டார்.[3]

''எந்த நிலையிலும் அதே முக்கால் கைக் கதர் சட்டை தான் அணிந்திருந்தார். அதே பழைய வீட்டிலேயே தங்கி வாழ்ந் தார். கையில் கடிகாரம் கூட இல்லாத ஒரு முதலமைச்சர். வரலாறு காணாத எளிமை, சட்டைப் பையில் ஒரு துட்டுப்பைகூட கிடையாது. சட்டைப்பை என்னவோ பெரியது தான்''[4]

பெற்ற அன்னைக்கு அவர் அளித்த மாதாந்திரத் தொகை ரூ 100 மட்டுமே- இது தொடர்பாக ஒரு உருக்கமான செய்தி கூறப் படுகிறது. புகைப்பட நிபுணர் ஒருவர் கூறியது:-

---

1. இராமலிங்கம். கே. கே., உயர்ந்த மனிதர்கள் உன்னத நிகழ்ச்சிகள், பக்: 55—56
2. நமச்சிவாயம். மு., மக்களாட்சி காமராஜ், ப:320
3. சுந்தரவடிவேலு. நெ. து., கல்விவள்ளல் காமராசர் பக்; 161—162
4. சாவி, சிவகாமியின் செல்வன் ப: 64

"ஒரு நண்பரை அழைத்துக் கொண்டு விருது நகருக்குப் பயண மானேன். பஸ் ஸ்டாண்டிலிருந்து ஒரு சைக்கிள் ரிக்ஷாவை வைத்துக்கொண்டு பெருந்தலைவரின் இல்லத்திற்குச் சென்றோம். சைக்கிள் ரிக்ஷாக்காரன் சொன்ன சம்பவம் உள்ளத்தை உருக்கு வதாக இருந்தது. ஊரிலுள்ள சில பிரமுகர்கள் சேர்ந்து வாங்கி அந்த ரிக்ஷாவை வழங்கியிருப்பதையும், காமராஜ் தமது தயாருக்கு மாதம் மாதம் வழங்கும் பணம் குடும்பச் செலவிற்குப் போதா தாகையால் அந்த ரிக்ஷா மூலம் வரும் வருமானத்தை நாள் தோறும் அன்னையாரிடம் கொண்டு கொடுத்து வருவதாகக் கூறின போது என் கண்கள் கலங்கின"[1] எளிமையே உருவான ஒரே தலைவர் காமராசர்தான் என்று டெல்லி வட்டாரமே பேசலாயிற்று. காங்கிரசாரின் டெல்லி முகாமின் வரவேற்பு அதி காரியாக இருந்த தீன்தயாளன் பின் வருமாறு வியந்து பேசி யுள்ளார்.

> "பதினைந்து தினங்களுக்கு முன் இங்கு முதலமைச்சராக வந்தார். இரண்டு நாட்களுக்கு முன் பதவியிலிருந்து விலகிய சாதாரண மனிதராகவும் இங்கே வந்தார். இன்றோ அகில இந்திய காங்கிரஸ் கட்சியின் தலைவர் பதவியே தேடி வந்தது. ஆனாலும் எந்த விதமான மாறுதலையும் காணமுடிய வில்லையே."[2]

சங்ககாலத் தலைவர்களைப் புலவர்கள் பராட்டும் இடங்கள் தோறும் 'அளியன்' என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளமை யினைக்காணலாம், பொறையாற்றுக்கிழானைக் கல்லாடனார்— 'அளியன் ஆயின் பொருநன் இவன்' என்றார்.[3] அதியமானையும், அவ்வையார் ஒரு கட்டத்தில் "புன்தலைப்பொருநன் அளியன்" என்றார்[4] ஒய்மான் நல்லியாதனை நன்னாகனார் "விருந்தினன் அளியன் இவன்"[5] என்றார். இவ்விடங்களிலெல்லாம் அவ்வத் தலைவர்கள் எளிமையோடு தோன்றி தண்ணளி செய்தனர். என்ற கருத்தே தென்படுகிறது,20ஆம் நூற்றாண்டுப் பெருந் தலைவர் காமராசரும் அந்த 2ஆம் நூற்றாண்டின் தலைவர் களைப் போல் 'அளியன்' என்றே திகழ்ந்தார். காமராசரின்

---

1. முருகு தனுஷ்கோடி, பத்திரிக்கையாளர் நெஞ்சில் காமராசர். ப: 168
2. சாவி: சிவகாமியின் செல்வன், ப: 101
3. புறநானூறு 391
4. ஷை 390
5. ஷை 376

எளிமை பூண்ட மனிதநேயம் மன்பதைக்கு விளைத்த விளைவுகளும் சிந்திக்கத்தக்கன. லண்டன் மாநாட்டிற்கு விதிக்கப்பட்டிருந்த ஆடை விதிகளை மதிக்காது அரை நிர்வாணப்பக்கிரி என்று மேல்நாட்டுப் பத்திரிக்கைகள் கேலி செய்ததையும் பொருட்படுத்தாது தமது எளிய தோற்றத்தை மாற்றிக் கொள்ளாமல் அந்த மாநாட்டில் கலந்து கொண்டு வந்த காந்தியடிகள் போலவே காமராசரும் மேநாட்டுப்பிரதிநிதிகளுக்காகத் தமது எளிமைத் தோற்றத்தை மாற்றிக் கொள்ளவில்லை. இது அவரைச் சுற்றியுள்ள எத்தனையோ தொண்டர்களுக்கும், தலைவர்களுக்கும் படிப்பினையாகவே விளங்கிற்று. அவர்களில் சிலர் அவருக்குப் பயந்தே படாடோபத்தை விரும்பாமலிருந்திருக்கலாம். இதைத் தொடர்ந்து சிக்கனமும் கடைப்பிடிக்கப்பட்டது. இவ்வெளிமை காங்கிரஸ் கட்சிக்கு வெளியிலுள்ளோரை அக்கட்சிக்கு வரும்படி ஈர்த்தது. இல்லை எனில் சுதந்திர கட்சி என்று மூதறிஞரால் அமைக்கப்பட்டிருந்த கட்சியும், மக்கள் ஆதரவை மிகுதியாகப் பெற்று வளர்ந்து கொண்டிருந்த திராவிட முன்னேற்ற கழகமும், கவர்ச்சியான பொதுவுடமைக் கொள்கையைக் கொண்டிருந்த கம்யூனிஸ்டுகளும், எதிர்க்கட்சிகளாக நிலைத்திருந்த அந்த நிலையில் காங்கிரஸ் சின்னாபின்னமாக்கப்பட்டிருக்கும். பாமர மக்களை மட்டுமல்ல அரும் பெரும் அறிஞர்களையும் பேச்சாளர்களையும் எழுத்தாளர்களையும் கூட தமது எளிமைத் தோற்றத்தால் கவர்ந்தார் காமராசர். சாவி அவருக்கும் தமக்கும் இருந்த உறவை மிக அழகாக வருணிக்கிறார்:-

> ''காமராரிடம் எனக்கிருந்த உறவு ஒரு சங்கீத வித்வானுக்கும் அந்த வித்வானையே சுற்றிக் கொண்டிருக்கும் ஒரு ரசிக விசிறிக்கும் உள்ள உறவு போன்றது.''[1]

காமராசரின் கைகள் அவரது கால்முட்டுக்கும் கீழ் விழக் கூடிய நீளமான கைகள். இத்தகைய வகையில் அமையும் உருவத் தோற்றம் மிக அரிதானது. இவ்வாறு கரங்கள்நீண்டு அமைவது சாமுத்திரிகா இலட்சணம் என்று சொல்லப்படும் உடலிலக்கணத்திற் குரியதுமாம். இதனைக் கொண்டவர் நாடாளும் பேறு கொண்டவர் என்பர். புறநானூற்றுத் தலைவர்களுள்ளும் ஒரு அரசன் இத்தகைய தோற்றம் கொண்டவனாய் விளங்கியது, 'தாள் தோய் தடக்கை கலிமான் வழுதி'[2] என்ற குறிப்பால் புலப்படுத்தப் படுகிறது. (பாண்டியன் சித்திரமாடத்துத்துஞ்சிய நன்மாறன்)

---

1. சாவி, பழைய கணக்கு, ப: 114
2. புறநானூறு 59;2

**கருணை**

அகிம்சையை அறிவுறுத்தியவர் காந்தியடிகள். கருணைக்கு அடிப்படையானது அகிம்சை. அந்த அகிம்சையை ஆதரித்து அதற்கு எதிரான வன்முறையை வெறுத்தார் அவர். இதனால் கருணாமூர்த்தி என்று காந்தியடிகள் போற்றப்பட்டார். அவரின் சீடரான காமராசரும் ஏழைப்பங்காளன் என்று அனைவராலும் பாராட்டப்பட்டவர். அதனால் இவரும் கருணாமூர்த்தியே!

காமராசரில் குடி கொண்டிருந்த கருணையே அவர் கட்சிப் பணியில் தலைப்பட மூலமான காரணமானது எனலாம். ஜாலியன் வாலாபாக்கில் நடந்த வன்கொலைகளின் சுவடுகள் அவர் உள்ளத்தில் கருணையைப் பிறப்பித்தன. அதனாலன்றோ இந்தியச் சமுதாயம் இத்தகைய பெருந்தலைவர் ஒருவரைப் பெற முடிந்தது. காமராசரின் மனித நேயத்தில் இரண்டறக் கலந்திருந்தது கருணை. 'ஓம்பாது ஈயும் ஆற்றல் எம்கோ' என்று புறநானூற்றுத் தலைவர் ஒருவர் போற்றப்பட்டார்.[1] அதை யொத்துத் தமக்கென எதையும் பேணிக் கொள்ளாது நாட்டுக் கீந்தவர் காமராசர். மனைவி மக்கள் என்ற உறவுகள் இல்லாதவர் என்றாலும் குடும்பச் சிக்கல்களை உணர்ந்தவர் அவரைப்போல் வேறொருவர் இல்லை என்றே சொல்ல வேண்டும். சிறுவன் அடைக்கலத்தின் தந்தை தனது மகன் சிகிச்சைக்கு ஏற்பாடு செய்யுமாறு காமராசரை வேண்டினபோது[2] காமராசர் சாதாரண மாக அவரருகில் அவரது குடும்ப நிலையைப் பொறுமையாகக் கேட்கிறார்:-

''உன் வருமானம் என்ன?''

''பன்றி வளர்க்கிறேன்.''

''பிறகு?''

''ஊரில் இசைக்குழுவில் தப்பட்டை வாசிக்கிறேன். எட்டணா பங்குகூலி கிடைக்கும்

''அப்படின்னா சாவு வீட்டுக்கெல்லாம் போவேன்னு சொல்லு......''[3]

---

1. புறநானூறு 22:3
2. முற்பககம்;99
3. நமச்சிவாயம்,மு. மக்களாட்சி காமராஜ், ப. 565

அவ்வளவு பெரிய பொறுப்பிலிருந்தும் பாமர மக்களின் நிலைக்கு இறங்கி வந்து அவர்களோடு அவர்கள் துன்பங்களைப் பகிர்ந்து கொள்ள அவரால் முடிந்தது. இதனாலேயே ஏழைப் பங்காளன் எனப்பட்டார்.

அரசாங்க அதிகாரிகளோடு சேரிப்பகுதியொன்றிற்கு ஒரு தடவை பெருந்தலைவர் சென்றிருந்தார். தங்கள் குடிசைகளைச் சீர்ப்படுத்த பண உதவி வேண்டும் என்று தலைவரிடம் முறையிட்டனர் சேரிமக்கள். பேச்சுவார்த்தைக்குப் பிறகு தலா ரூ. 100 தருவதென்று முடிவுகட்டப்பட்டது. அதிகாரிகள் கோட்டை அலுவலகம் போய் அப்பணம் பட்டுவாடாவிற்கு ஏற்பாடு செய்வதாகக் கூறினர். விட்டாரில்லை தலைவர். உள்ளூர்க் கஜானாவிலேயே இருந்து அப்பொழுதே பணம் பட்டுவாடா செய்ய உத்தப் விட்டார். குடிசைமக்கள் தலைமேல் கைகுவித்து காமராசரைப் போற்றினர். வாய்ச்சொல் கருணையல்ல காமராசர் கருணை. மனிதநேயக் கருணை. அவரைப் பற்றிப் பொதுவாகக் கூறப் படுவது—''நன்மை தரும் செயலை உடனே செய்து விடவேண்டும் என்ற துடிப்பும் மனிதாபிமானமும் உடையவர் அவர்.''[1]

சென்னை தியாகராய நகரின் உஸ்மான் ரோடும் துரைசாமி ரோடும் சந்திக்கும் இடத்தில் தெருவோரம் உள்ள பிளாட்பாரங் களில் சிறுசிறு வியாபாரிகள் காய்கறி வியாபாரம் செய்து வந்ததைப் போக்குவரத்திற்கு இடைஞ்சல் என்று சொல்லி அரசு அலுவலர் தடுத்தனர். சிறு வியாபாரிகள் சார்பில், எழுத்தாளர் சாவி பெருந்தலைவரை இது குறித்து அணுகினார். ''அன்றாடம் வியாபாரம் நடந்தால்தான் இவர்கள் வீட்டில் அடுப்பெரியும் அவ்வளவு தானே'' என்று கேட்டறிந்த காமராசர் உடனே பெரிய அரசியல் திட்டங்களுள் ஒன்றுபோல அதை எடுத்துக் கொண்டு தொடர்புடைய அதிகாரியைக் கூப்பிட்டனுப்பி அக்காய்கறிகடைக் காரர்களுக்கு அங்கேயே அருகில்வேறு இடத்தை ஒழுங்கு செய்து கொடுத்தார். நாளையிலிருந்து அவங்ககிட்ட காவலர் போகக் கூடாது என்று ஆணையும் பிறப்பித்தார்.[2]

சீனப்போரின் போது ஒரு நிருபரின் மூத்தமகன் இராணுவத்தில் பணிபுரிந்தவர் வெகுநாள் குடும்பத்தினரோடு தொடர் பில்லாமலேயே இருந்தார். குடும்பத்தினர் வருந்தினர். காமராசர்

---

1. சந்தானலட்சுமி: நாட்டுக்குழைத்த நல்லவர், ப. 47.
2. சாவி, பழைய கணக்கு, பக், 57-58

பிரம்மச்சாரிதான். பிள்ளைப்பாசம் அறியாதவர் தான். ஆயினும் கருணையுள்ளத்தோடு அக்குடும்பத்தினருக்கு உதவ முன் வந்தார். இராணுவ அதிகாரிகளுடன் உடனடித் தொடர்பு கொண்டார். அப்பெற்றோருக்கு மகனைப் பற்றிய தகவலை உடனடியாகப் பெற்றுத் தந்தார்.[1]

இந்திய பாகிஸ்தான் போர் மூண்டதையொட்டி இராணுவ வீரர் கூட்டம் ஒன்றில் காமராசர் கலந்து கொண்டார். வட நாட்டுப் பகுதியிலுள்ள இந்தக் கூட்டத்தில் 'வணக்கம்' என்று ஒரு வீரர் காமராசரிடம் தமிழில் கூறினார். உங்கள் ஊர் எது என்று ஆவலுடன் காமராசர் அவரிடம் கேட்டார். வேலூர் என்றார் அவர். வேலூரில் எந்த தெரு என்று மேலும் அவரை விசாரித்தார் பெருந்தலைவர். அது மட்டுமல்ல: ''நான் அந்தப் பக்கம் போகும் போது உங்கள் உறவினரைச் சந்திக்கிறேன்'' என்றார் தலைவர். பனிமலை எல்லையிலுள்ள வீரருக்கு அப்போதே தமது வீட்டாரைக் கண்டது போல மகிழ்ச்சியுண்டாயிற்று. மற்றவர்களுக்கும் மகிழ்ச்சி. காமராசரை இவர் நமது அண்ணன் என்றனர்.[2]

நாகர்கோவில் மக்களோ 'அப்பச்சி' என்றனர். இராணுவத்தினர் அண்ணன் என்றனர். குடும்பம் என்று ஒன்று இல்லாத காமராசர் இப்படித் தமது மனித நேயத்தால் குடும்ப உறவுகளைச் சம்பாதித்துக் கொண்டது விந்தையிலும் விந்தையன்றோ?

மக்களுக்காகச் செயல் படவேண்டும் என்ற கருணைத்துடிப்பு அவரது வாய்மொழி வாயிலாகவும் புலப்பட்டது.

> ''பலகாலமாக சுதந்திரத்தை எதிர்பார்த்து நல்வாழ்வு கிடைக்கும் என்று காத்துக்கிடக்கும் கோடிக்கணக்கான மக்களுக்கு எதையும் செய்யாமல் இருப்பதையெல்லாம் அப்படியே விட்டுவிடு என்றால் எப்படி சாத்யமாகும்? அது முடியாது[3] என்பார்.

அரசாங்க வரவு செலவுக் கணக்குகளைப் பட்ஜட் தீர்மானிக்கும். பொருளாதார நிபுணர்களுடன் கலந்து நிதியமைச்சர்

---

1. முருகு தனுஷ்கோடி, பத்திரிகையாளர் நெஞ்சில் காமராசர், ப. 175.
2. சுப்பராவ், பத்திரிகையாளர் நெஞ்சில் காமராசர், ப: 176
3. நமசிவாயம். மு, மக்களாட்சி காமராஜ், ப. 64 6

பட்ஜட்டை வடிவமைப்பார். பற்றாக்குறை பட்ஜட் என்பார். உபரி பட்ஜட் என்பார். இதெல்லாம் ஒரு அரசின் நிதிக்கணக்கீட்டு முறை. காமராசரோ தனியொரு குடும்பத்தின் பட்ஜட்டையும் தாமே, சாப்பாட்டிற்கு இவ்வளவு ஆகும், துணிமணிக்கு இவ்வளவு ஆகும் என்று கணக்கிடுவார். அவரது ஆட்சி வருவதற்கு முன்பெல்லாம் பள்ளியில் படித்தவர் யாராயினும் கட்டணம் செலுத்த வேண்டுமென்றிருந்தது. காமராசரின் மனித நேயத்திலுள்ள கருணையின் விளைவாகத் தனியொரு குடும்பத்தின் வரவு செலவு பற்றியும் சிந்தனை உருவானது. அதன் காரணமாகத்தான் இலவசக்கல்வி, மதிய உணவுத் திட்டம், எல்லாம் நடைமுறையில் வந்தன.

ஸ்ரீதரன் என்று பெயருடைய இளைஞன் ஒருவன்; வேலை கிடைக்கவில்லை என்று தன் உயிரை மாய்த்துக் கொள்ள இருந்தான். காமராசர் அவனது உயிரைக் காத்தார் என்று கூறப் படுகிறது. மற்றொரு கட்டத்தில் ஒரு சிறுவனுக்குத் தட்டச்சுத் தேர்வுக்கான கட்டணத்தைப் பெருந்தலைவரே செலுத்தி னாராம். இவ்வாறெல்லாம் பெருந்தலைவரின் கருணைக்குப் பாத்திரமானோர் பலர்.

ஊமை நன்பர் ஒருவர் பெருந்தலைவர் பிறந்தநாள் தோறும் காந்திஜியின் பொம்மையொன்றை அவருக்குப் பிறந்தநாள் பரிசாக வழங்கி வந்தார்[1] இறுதியில் பெருந்தலைவரின் மரண நாளன்று ஊனமுற்ற நிலையிலும் கஷ்டத்தோடு சென்று தலைவரின் சடலத்திற்கு அஞ்சலி செய்தார் என்று கூறப்படுகிறது. வள்ளல் ஆயைக்காணச் சென்ற ஏணிச்சேரி முடமோசியார் நிலை இங்கே நினைவிற்கு வருகிறது. இயல்பாக அவரது கால் ஊன முற்றிருந்த காரணத்தால் ஆய் வள்ளலை எல்லோருக்கும் பிறகு வெகு தாமதமாகச் சென்று கண்டார் போலும். அதற்காகத் தம்மைத் தாமே சபித்துக் கொண்டிருக்கிறார். இக்கருத்தினைக் கொண்ட பாடல் ஒன்று புறநானூற்றில் காணப்படுகிறது. எவ்வளவு பெரிய வள்ளல் ஆய். அவனை முந்திச் சென்று காண வியலாமல் போயிற்றே, எனது கால்மட்டில் ஊனமானது போதாது. என் செவிகளும் செவிடாகட்டும், என் வாயும் பேசக் கூடாமல் போகட்டும், என்று சபித்துக் கொள்ளுகிறார்.

---

1. நமசிவாயம், மு., மக்களாட்சி காமராஜ், பக். 64-6.

"முன் உள்ளுவோனைப் பின் உள்ளினேனே
ஆழ்க என் உள்ளம் போழ்க என் நாவே
பாழ் ஊர்க்கிணற்றின் போழ்க என் செவியே"[1]

ஆயையொத்த கருணை வள்ளலே காமராசர். மதிய உணவுத் திட்டத்தின் பொருளாதாரச் சிக்கல் பற்றிச் சிந்திக்கப்படுகையில்—

"மதிய உணவிற்காகப் பிச்சை எடுக்கவும் நான் தயார்" என்று கூறியுள்ளார்.

கல்விக்காகப் பிச்சைக்காரன் கோலங் கொண்டாலும் தவறில்லை என்றார் வள்ளுவரும்: "உடையார் முன் இல்லார் போல், ஏக்கற்றும் கற்றார்"[2]

ஆனால் ஏழைகளுக்குத்தான் காமராசரின் கருணை. நோயாளிக்கே வைத்தியன் தேவை என்றது விவிலியம். செல்வந்தர் கோபித்துக் கொள்வார்களே என்று ஏழைகளுக்குத் தம் ஆதரவை ஒளித்துக் கொடுத்தவருமல்லர் காமராசர். செல்வந்தருக்குத் தம் கருணை இல்லை என்பதை வெளிப்படையாக உரைத்தவர் தலைவர். "பணக்காரப் பையன்களைப் படிக்கவைக்கவா நான் முதல் மந்திரியா இருந்து ராஜாங்கம் நடத்துகிறேன்"[3] என்பது அவர் உரை.

முல்லைக் கொடியானது தேர் கொடுத்த வள்ளல் பாரியின் வள்ளல் தன்மையைப் பிறருக்கும் சொல்லி அவன் புகழ் பரப்ப வல்லதல்ல என்பதை அறிந்திருந்தும் பாரி தனது தேரை ஈந்தது விளம்பரம் நாடாக் கருணைத் தன்மையாகும்.

பூத்தலை அறா அப்புனை கொடி முல்லை
நாத்தழும்ப இருப்பப் பாடாது ஆயினும்
கறங்கு மணி நெடுந்தேர்
கொள் கெனக் கொடுத்த
பரந்து ஓங்கு சிறப்பின் பாரி"[4]

பாரியை யொத்த விளம்பரம் நாடாத கருணையாகவே இருந்தது பெருந்தலைவரின் கருணை. மக்களுக்கு நன்மை வருவது யாரால்

---

1. புறநானூறு 132: 1-3
2. திருக்குறள்: 395
3. மேதகு குடியரசுத்தலைவர், காமராஜர் வரலாறு; வாழ்த்துரை
4. புறநானூறு: 200

என்பது கேள்வியல்ல', அல்லது போடப்படும் திட்டத்திற்கு என்ன பெயர் என்பது முக்கியமல்ல, மக்கள் நன்மையடைகிறார்களா என்பதே அவரது நோக்கமாக இருந்தது.

> "மக்களுக்கு வாழ்வளிக்கும் திட்டம் யார் போட்டால் என்ன? அதன்மூலம் மக்களுக்குப் பயன் இருக்கிறது என்றால் அதை மக்களிடையே பரப்பும் பணியைச் செய்ய வேண்டும். இந்த மக்கள் தொண்டுதானே மனிதாபிமானம்"[1]

என்றுள்ளார் அவர்.

> "நாட்டின் கோடிக்கணக்கான மக்களும் சம உரிமை பெற்று சம வாய்ப்புகளும் வசதிகளும் கொண்டு வாழ வழி செய்ய வேண்டும். இதற்குப் பெயர் எதுவாக இருந்தால் என்ன?"— இவ்விதமாகவும் அவர் கூறினார்.

காமராசரின் இந்த விதமான மொழிவுகளிலிருந்து பெயரையும் புகழையும் விரும்பாதவர் அவர் என்பது தெளிவாகிறது. "இம்மைச் செய்தது மறுமைக்காம் எனும் அறவிலை வணிகன் ஆய் அலன்"[2] என்று ஆயை ஏணிச்சேரிமுடமோசியார் பாராட்டினார், "முத்திநோக்கு முதலிய இலாபநோக்கோடு கொடை செய்தவன் அல்லன் ஆய்" என்பது இதன் பொருள். இவ்வாறே வையாவிக்கோப் பெரும்பேகனைப் பரணர் பாராட்டியுள்ளார். "என் வள்ளல் பேகன் மறுமைப்பயனாகிய முத்தி முதலியவைகளைக் கருதிப் பொருள் வழங்குபவன் அல்லன். பிறருடைய ஏழ்மைத்தன்மையைக் கண்டே வழங்கினான்" என்றார் அவர்—

> "எத்துணை ஆயினும் ஈத்தல் நன்று என
> மறுமை நோக்கின்றோ, அன்றே
> பிறர் வறுமை நோக்கின்று அவன் கைவண்மையே"[3]

காமராசரின் கருணைத் தன்மையைச் சிந்திக்கும் போது புறநானூற்றுத் தலைவர்களின் பயன் கருதாப் பெருங்கொடைச் சார்பான இத்தகுச் செய்திகளே நினைவிற்கு வருகின்றன. வணிகர் தொழில் மரபில் வந்தவர்தான் காமராசர். ஆனாலும் அற வணிகர் அல்லர் காமராசர். ஆயைப் போன்றவர், பேகனைப்

1. நமசிவாயம், மு, மக்களாட்சி காமராஜ் ப. 194
2. புறநானூறு 134
3. புறநானூறு 141; 13-15

போன்றவர், பாரியைப் போன்றவர். கடையெழுவள்ளல்களையும் 20ஆம் நூற்றாண்டில் ஒன்றாகக் கண்ட ஒருவர்தான் நம் பெருந் தலைவர்! கடையனையும் எழுச்சி கொள்ளவந்த இவர் அவ் வகையில் கடைஎழுவள்ளலே.

அரசியல் செல்வாக்கைச் சொந்த நலனுக்காக அவர் பயன் படுத்தியதே கிடையாது. அவரது தொண்டுகளை வைத்து வணிகக் கணக்கிட்டுப் பார்த்தாலும் நட்டக் கணக்கே காமராசர் பெயரில் எஞ்சும். ஆறு தடவைகளுக்கும் மேல் சுதந்திரப் போரில் கடுங்காவலை அனுபவித்தவர். நாற்பதாண்டுகள் அரசியல் வாழ்வில் முப்பத்தோரு ஆண்டுகள் போராட்டத்திலேயே செலவிட்டவர். சுதந்திரத்திற்கு முன் விடுதலைப்போர் என்றும் சுதந்திரத்திற்குப்பின் வறுமைக்கெதிர் தொடுத்த போரென்றும் போராட்டமே அவரது வாழ்வின் பெரும்பகுதி. உயர்ந்த அமைச்சர் பதவி என்றிருந்தது ஒன்பது ஆண்டுகளே. அக்கால கட்டத்திலும் ஒரு தொண்டராகவே ஓடித்திரிந்தவர். இலாப நோக்கும் வணிகப்பாங்கும் அவரது சமூகநலத் தொண்டின் முன் நிற்கவில்லை. இதுதான் காமராசரின் மனிதநேயம். விளம்பரம் நாடாதவே தாந்த அரசியல் அவருடையது. பொய்ப்பிரச்சாரத்தை அவர் விரும்பியதே இல்லை. மக்களது மனமாற்றத்தையே விரும்பினார் அவர். மக்கள் மனங்களைத் தொடும் ஆற்றல் அவரிடம் இருந்தது. சான்றிற்கு ஒரு நிகழ்ச்சி:-

இறுதியாக நாகர்கோவில் தொகுதியில் இருந்து பாரளு மன்றத்திற்கு அவர் தேர்ந்தெடுக்கப்பட்ட அந்த தேர்தல் வேளை பிரச்சாரத்திற்காக அவர் நாகர்கோவில் செல்கிறார். காங்கிரஸ் கோட்டைகள் என்று கருதப்பட்ட நெல்லையும் குமரியும் ஆன மாவட்டங்கள் சரிந்து கொண்டிருந்த வேளை. ஊர்வலமாக வருகிறார் காமராசர். ஊர்வலம் ஒரு குறிப்பிட்ட தெரு முனையை நெருங்கும்போது தடுத்து நிறுத்தப்படுகிறது. தடுத்தவர் காங்கிரஸ் காரர்களே. தொண்டர்கள்தான். அவர்கள், 'தலைவ ரின் ஊர்தி இந்த தெருவில் நுழையவேண்டாம். மாற்றுக் கட்சித் தொண்டர்கள் கம்பும் தடியுமாக அங்கே கலகம் விளைவிக்க வென்றே காத்திருக்கிறார்கள்.' என்று கூறி பெருந்தலைவரின் ஊர்தி வேறுபக்கம் போகவேண்டுமென்று வற்புறுத்துகிறார்கள். தலைவரோ ஊர்தியை நிறுத்தச்சொல்லி நடந்து சென்று கலகக் காரர் கூடிநிற்கும் இடத்தை அடைகிறார். கலகக்காரத்தலைவன்

என்று அடையாளங்கண்டு அவர்களுள் ஒருவனை நெருங்குகிறார். ''தம்பி உன்னை எனக்கு நன்றாகவே நினைவிருக்கிறதே போன தடவை நான் இங்கே வந்திருந்தபோது நீ கூட மேடையிலே வந்து எனக்கு ஒரு சந்தனமாலை போட்டயே?''—என்கிறார். வியந்து போகிறான் அந்த வாலிபன். அது மெய்தான். சில நாட்களுக்கு முன்வரை அவன் காங்கிரசுக்காக உழைத்தவன். முன்பு அவர் சொன்னது போலவே தலைவரை உற்சாகமாக வரவேற்று சந்தனமாலை அணிவித்தவன். ''என்னையும் ஒரு பொருட்டாக மதித்தாரே இப்பெருந்தலைவர்'' இவ்வாறு அவன் உள்ளத்தில் விசுவாச உணர்வு ஊற்றெடுத்தது. இளைஞன் மனம் மாறினான். அன்றிரவே அத்தெருவெங்கும் இருந்த மாற்றுக் கட்சித் தோரணங்கள் மாற்றப்பட்டன. காங்கிரஸ் கொடிச்சின்னங்களே எங்கும் காட்சியளித்தன. தமது கருணை உள்ளத்தால், மனித நேயத்தால் கல்லையும் கனியச் செய்தவர் காமராசர். மயக்க மொழிகளாலான பொய்ப்பிரச்சாரத்தால் மக்கள் ஆதரவைத் திரட்ட விரும்பாதவர்.

1969இல் கட்சி விளம்பரத்திற்கென நடிகர் திலகம் சிவாஜி கணேசன் இரசிகர் மன்ற விழாவை நாடு தழுவிய அளவில்ஏற்பாடு செய்தார் சின்ன அண்ணாமலை. அந்தக் கூட்டத்திற்கு வரும்படி பெருந் தலைவரை அழைத்த போது மிகவும் கெஞ்சவேண்டிய தாயிற்றாம்.[1] சினிமா மாயை காட்டி மக்களை மருட்டி அவர் தம் ஓட்டுரிமையைக் களவாட விரும்பாதவர் பெருந்தலைவர் என்பது தெளிவாகிறது. கார் விபத்தொன்றைச் சந்திக்க நேர்ந்த போதும் கூட அந்தச் செய்தி மக்கள் நடுவே தேவையற்ற பீதியை யும் அமைதியின்மையும் ஏற்படுத்திவிடக்கூடாதென்று, அச்செய்தி யைப் பெரிதுபடுத்திவிட வேண்டாமென்று பத்திரிகையாளரை வேகுவாக வேண்டினாராம். சென்னை மாநகராட்சித் தேர்தல் ஒன்றின் போது, தொடர்ந்து பிரச்சாரக் கூட்டங்கள் பலவற்றில் கலந்துவிட்டு, இரவு ஒரு மணிக்கு இறுதியான கூட்டத்திற்குத் தலைவர் பேச வந்திருந்தபோது, மேடையிலிருந்த அவரைக் கூட்டத்திலிருந்து ஒரு கல் தாக்கியது. ஒரு குறும்பனின் செயல் அது. கல்லடிபட்டு அவரது கால்விரலில் இரத்தம் வெளிப்பட்டது. அதை இறுதிவரை வெளிக்காட்டிக் கொள்ளவே இல்லையாம். கூட்டத்தில்பரபரப்பு ஏற்பட்டு அது கலகத்திற்குக் காரணம் ஆகி

1. சின்ன அண்ணாமலை; சொன்னால் நம்ப மாட்டீர்கள் ப. 218

விடக் கூடாதே என்று அவர் அப்படிச்செய்துள்ளார்.[1] இப்படிப் பட்ட சூழ்நிலையை ஒரு வாய்ப்பென்று கொண்டு மக்களின் கருணை ஓட்டுகளை அவர் சம்பாதித்திருக்க முடியும். ஆனால் அவர் அப்படிச் செய்யவில்லை. தம் மீதும் தமது கட்சியின் மீதும் அதன் கொள்கையின் மீதும் மக்கள் கொண்ட பற்றால் கிடைத்த ஓட்டுகளே அவர் விரும்பின ஓட்டுகள். பிறவற்றை அவர் செல்லா ஓட்டுகள் கணக்கிலேயே சேர்த்தார். பொய்ப்பிரச்சாரத்தால் மக்களை ஏமாற்றுவது அவரை அவரது கருணை உள்ளம் அனுமதிக்கவே இல்லை எனலாம். இவ்வாறெல்லாம் காமராசரின் கருணைப்பாங்கினை உள்ளிட்ட அவரது மனிதநேயம் மக்களின் மனமாற்றத்திற்கு அடிகோலி ஆரோக்கியமான அரசியலை அவர்களுக்கு உணர்த்தியது. மதிய உணவு போன்ற நலத் திட்டங்கள் செயல் பட்டமைக்கும் அவரது கருணையே காரணம். எத்தனையோ வருங்கால அரசியல்வாதிகட்கு முன் மாதிரியாகும் வகையில் அவரது கருணை செழித்திருந்தது. காதலுக்கு அளவு கூறவந்த குறுந்தொகை இலக்கியம் காதல் என்பது நிலத்தை (உலகம்) விடவும் பெரியது, வானத்தை விடவும் உயர்ந்தது, கடலைவிடவும் ஆழமானது என்றது,

> ''நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று
> நீரினும் ஆரளவின்றே''[2]

காமராசரின் கருணையளவிற்கும் இதனைச் சாற்றிக் கூறலாம். காமராசரின் கருணை பரந்துபட்டது. அது உயர்ந்தது. ஆழமானது. கருணைக்கு அடிப்படையும் காதலாகிய அன்பே, காமராசரும் நாட்டின் மீது, மக்களின்மீது கருணை கொண்டார் எனும் போது நாட்டையும் மக்களையும் காதலித்தார் என்றும் கூறலாம். ஆதலின் குறுந்தொகையின் காதல் இலக்கணம், பெருந் தலைவர்க்கும் பொருந்தலாம். இந்நாடு தானே அவருக்குக் காதலி!

**சாதுர்யம்**

> ''ஊக்கம் முரண் மிகுதி ஒன்றிய நற்சூழ்ச்சி
> ஆக்கம் அவன் கண் அகலாவால்
> வீக்கம் நகப்படா வென்றி நலமிகு தாரார்க்கு
> அகப்படாதில்லை அரண்''[3]

---

1. முருகு தனுஷ்கோடி; பத்திரிகையாளர் நெஞ்சில் காமராசர், பக். 272-273.
2. குறுந்தொகை: 3
3. புறப்பொருள் வெண்பாமாலை, நூற்பா 100

அவசரமான காவல் உதவிக்கு இன்று தொலைபேசி எண் 100 என்கிறோம். புறப்பொருள் வெண்பாமலையின் மேற்கண்ட 100 ஆம் நூற்பா காவல் மிகுந்த அரணைக் கைப்பற்றும் தந்திரத்தைக் கற்பிக்கும் முற்கால இலக்கணத்தைக் கூறுகிறது. மேற்கண்ட போர் இலக்கணம் வெற்றியைப் பொருந்துகிற வீரன் ஒருவனுக்கு ஊக்கமும், முரண் மிகுதியான வீரமும், நற்சூழ்ச்சியான சாதுர் யமும் தேவை என்று உரைத்துள்ளது. சாதுர்யம் என்பது தந்திரத்தை அல்லது சூழ்ச்சியை உள்ளிட்டதே; ஆனால் ஆக்கம் தரும் சூழ்ச்சி அல்லது தந்திரத்தை அது குறிப்பதல்லாமல் மறுதலைச் செயல்களுக்கான சூழ்ச்சியைக் குறிப்பதல்ல. இதனா லேயே நற்சூழ்ச்சி என்று அதனைக் குறித்தது அவ்விலக்கணம். காமராசரும் ஒரு போர்வீரரே. விடுதலைக்கு முன் உரிமைப் போரிலே தீவிரமாகப் பங்கு கொண்டவர். விடுதலைக்குப்பின்னும் எத்தனையோ தேர்தல் போர்க்களங்களைச் சந்தித்தவர். கத்தி யின்றி இரத்தமின்றி எழுந்த போர்களைப் புரிந்த அமைதிப் போராளி காமராசர். இந்த ஜனநாயகப் போராளிக்குப் பல வெற்றிகளைக் குவித்துத் தந்தது அவரில் அமைந்த இந்த நற் சூழ்ச்சியாகிய சாதுர்யமே. அமைதிப் போராட்டங்களின் வழி மனுக்குலத்திற்கு நலன் புரியும் வெற்றிகளைத் தேடித்தந்ததில் காமராசரின் இந்த நற்சூழ்ச்சித்திறனாகிய சாதுர்யத்திற்கும் பங்குண்டாதலின் அவரது மனித நேயப் பண்புகளில் வைத்து எண்ணத்தக்கது.

"அன்று முதலமைச்சர் வசதிக் குறைவுகளோடு எத்தனையோ பிரச்சினைகளைச் சமாளிக்க வேண்டியதிருந்தது."[1] என்று இவரது சாதுர்யம் செயல்பட்டவிதம் குறித்துச் சொல்லப்படுகிறது. மேற்கு ஜெர்மனிய நாட்டின் வெளியுறவு அமைச்சர் வான்ஹாலே என்ப வர் பாரத நாட்டிற்கு விஜயம் செய்திருந்தபோது, "இந்தியாவில் மிகச் சிறந்த முறையில் அரசாங்க நிர்வாகம் நடக்கும் இராஜ்ஜியம் தமிழகம் என்று புகழப்பட்டிருக்கும் காரணத்தால் தமிழ்நாட்டின் மீது மிகுந்த பக்தியுடையவனாய் இருக்கிறேன்" என்றார்.[2]

நற்சூழ்ச்சியாகிய நல்லவைகளுக்குப் பயன்படும் இராச தந்திரம் பெருந்தலைவரிடம் நிறைந்திருந்தது என்பதற்கான

---

1. சோமயாஜுலு. மு., நெல்லை மாவட்ட சுதந்திரப் போராட்ட வரலாறு ப 201.
2 நாராயணசாமி. டி. ஆர்; 'இதோ காமராசர் இருக்கிறார்; ப. 4

எண்ணற்ற சான்றுகள் உண்டு. விடுதலைப் போராட்டக் காலத்திலேயே அவருடைய சாதுர்யம் போற்றத்தக்க வகையில் அமைந்தது.

இவரைக் கைது செய்யவேண்டிய வேளைகளில் வெள்ளைக் காவலர்களுக்குப் பெரும் தலைவலியே வந்தது. வெள்ளையனே வெளியேறு இயக்கம், சட்ட மறுப்பு இயக்கம் போன்ற போராட்டங்களில், தம்போன்றவர்கள் கைது செய்யப்பட்டால், மற்ற தொண்டர்களிடம் தளர்ச்சி உருவாகிவிடக்கூடாதென்று தாம் கைது ஆகாமல் சாதுரியத்தால் தப்பிவந்தார்.[1] சில வேளைகளில் மாறுவேடம் பூண்டு தப்பியும் உள்ளார்.[2] கட்சியின் உள் விவகாரத்திலும் இராஜாஜி போன்ற மூதறிஞர் ஒருவர் கருத்து வேறுபாடு கொண்டு எதிரியாகவே மாறுகின்ற நிலையில், தமது இடத்தைத் தக்க வைத்துக் கொள்ள ஒரு பாதுகாப்புக் கருவிபோல இந்த சாதுர்யத்தையே அவர் பயன் படுத்த வேண்டியிருந்தது.

தேர்தலுக்கான பொருத்தமான வேட்பாளர்களைத் தேர்வு செய்து நிறுத்துவது, தேர்தல் வெற்றிகளின் முதற்படியாகும். அவ்வகையில் தேர்தலுக்கான கட்சிவேட்பாளர்களைத் தேர்வு செய்ய அவர்களை எடை கட்டுவதற்கு இச் சாதுர்யம் மிகவும் தேவையானதாகும். இத்திறத்தில் காமராசரை விஞ்சி நின்றவர் வேறு யாருமில்லை எனலாம். இதனால் சில மாவட்டங்களைக் காங்கிரஸ் கோட்டை என்றே அழைக்கத்தக்க வகையில் வேட்பாளர்கள் ஒட்டு மொத்தமாக வெற்றிச் சிறந்த நிலையும் இருந்தது.

ஆட்சி நிலையிலும், நினைத்துவிட்ட திட்டத்தை நினைத்த மாதிரியாக முடித்துக் காட்டும் ஆற்றலும் காமராசருக்கிருந்தது. எடுத்துக்காட்டிற்கு மதிய உணவுத் திட்டத்தைக் குறிப்பிடலாம். நிதிநிலை இடையூறாக இருந்தபோதிலும் சாதுரியத்துடன் அதனைச் சமாளித்தார். அரசின் நிதி உதவியைப் பெறாமல் முழுக்க முழுக்க மக்கள் இயக்கமாகப் படர்ந்தது அது. பகல் உணவுத் திட்டம் 4400 தொடக்கப்பள்ளிகளில் வேரூன்றியது. இலட்சத்து இருபதாயிரம் பிள்ளைகள் பயன் அடைந்தார்கள்.[3]

1. திலீபன், 100 ஆண்டு காங்கிரஸ், ப. 141
2. ஷண்முகம். இரா., கர்மவீரர் காமராசர் வாழ்க்கை வரலாறு; ப. 17
3. சுந்தரவடிவேலு. நெ. து., கல்விவள்ளல் காமராசர்; ப. 65

அஞ்சா நெஞ்சன் என்று தம்மை மார்தட்டிக் கொள்ளாமல், சிலவற்றிற்கு அஞ்சியொதுங்கிய தன்மையும் காமராசரில் உண்டு. அதுவும் இந்த நற்சூழ்ச்சியின் பாற்பட்டதே. அஞ்சுவது அஞ்சாமை பேதைமை என்றார் வள்ளுவரும்[1]. அவரது வரலாற்றை எழுதியுள்ள அறிஞர்கள் இது அவரில் காணப்பட்ட தனிப்பண்பு என்று பாராட்டியுள்ளனர். "அஞ்சாமல் வாழுகிற குணம் பலருக்கும் இருக்கலாம், ஆனால் அத்துடன் சாதுர்யமாக நடந்து கொள்ளும் திறமை மிகச்சிலருக்கு மட்டுமே அமையும். அப்படிப் பட்டவர்களுள் காமராசரும் ஒருவர் என்பது அத்தகைய பாராட் டுரைகளுள் ஒன்று.[2]

சாதுர்யம் காமராசரிடம் இளமை முதல் காணப்பட்ட ஒன்றே. தமது தோழர்களுடன் சேர்ந்து திருடனைப் பிடித்த சாதுர்யம் இளமையிலேயே காணப்பட்டதுதான். இதே சாதுர் யந்தான் திருடனைத் தேடிப் பிடிப்பது போல் வலை போட்டுத் தேடிய வெள்ளைக்காரப் போலீசுகளை ஏமாற்றித் தப்பவும் பிற்காலத்தில் உதவியது.

பெருந்தலைவரின் சாதுர்யத்திற்கு அடிப்படையான அறிவுக் கூர்மை என்பது பற்றிப் பாராட்டாதவர் இல்லை என்றே சொல்ல வேண்டும். பென்சிலின் கூர்மையைவிடவும் அவரது நினைவு கூர்மையானது. சாவி ஒரு தடவை காமராசரிடம், எழுத்தாளர் 'தமிலன்' பற்றி மிகச்சாதாரணமாகக் குறிப்பிடும்போது தலைவர் சட்டென்று "குட்டி குட்டியா வாக்கியம் எழுதுவாரே அவர் தானே?" என்று அவரது எழுத்துநடையை வைத்து அவரது அடையாளத்தைக் கூறிவிட்டாராம்.[3] பணிகளில் ஓயாது ஈடுபட்டு உறங்கக்கூட நேரமில்லாத நிலையில் அவருக்கு இவற்றை யெல்லாம் நினைவில் வைத்திருக்க எவ்வாறுதான் முடிந்ததோ?

மெத்தவும் படிக்காவிட்டாலும் மேதையாக விளங்கியவர் பெருந்தலைவர். படிக்காதிருந்தும் அவர் கொண்டிருந்த அறிவு, பட்டம் படித்த எத்தனையோ பட்டதாரிகளை விஞ்சிய அறிவு. தமிழ் நாட்டின் பட்டி தொட்டிகளின் பெயர்களையெல்லாம் நினைவில் வைத்திருந்தார் அவர். இந்தியநாட்டின் பூகோளத் தையே தலையில் வைத்திருக்கிறார் என்று இவரை வியந்தவர்

---

1. குறள், 163
2. நாகஷண்முகம்; பதினைந்து தலைவர்கள் வரலாறு, ப. 15
3. சாவி, பழைய கணக்கு; ப. 46

உண்டு. கவிஞர் கண்ணதாசன் "கல்லானே ஆனாலும் கற்றவரை மற்றவரைக் கல்லாக்கி வைத்துவிடும் கல்விமிகக் கற்றுவிட்டாய்"[1] என்று பாராட்டியுள்ளார். பண்டிதநேருவிற்குப்பின் இந்திய அரசியலில் ஏற்பட்டிருந்த சிக்கலைத் தீர்ப்பதில் அவர் சாதுர்ய மாக நடந்துகொண்டவிதமே அவரது அரசியல் வாழ்க்கையில் மிகவும் பாராட்டிப் பேசப்படுகின்ற செய்தியாகும்.

அரசியல் பதவி துறவிதான் காமராசர். ஆயினும் அவரது மனிதநேயப் பண்பாக அவருடைய இத்தகைய சாதுர்யச் செயல் களைக் குறிப்பிட்டே ஆகவேண்டும். 1936ஆம் ஆண்டில் தமிழ்நாடு காங்கிரஸ் தலைவராகக் காமராசரின் அரசியல்குரு சத்தியமூர்த்தி தேர்ந்தெடுக்கப்பட்டபோது, அவரது செயலாளராகக் காமராசர் பணியாற்றினார். 1940இல் தமிழ்நாடு காங்கிரஸ் தலைவராகச் சத்தியமூர்த்தியின் இடத்தில், காமராசர் அமர்ந்தபோது சத்திய மூர்த்தி காமராசருக்குச் செயலராகப் பணிபுரிந்தார்.[2] திகைக்க வைத்த வளர்ச்சி இது.

பாரதநாட்டில் மிக உயர்ந்த தகுதிக்குரிய பட்டமான 'பாரத ரத்னா' பட்டம் பெற்றவர் காமராசர். விருதுப்பட்டியின் ஒரு தேங்காய் வியாபாரியின் மகன் என்ற நிலை எங்கே? பாரதரத்ன பட்டம்தாங்கிய இந்த நிலை எங்கே? மண்ணுக்கும் விண்ணுக்கும் கால் வைத்ததுபோன்ற சாதனையல்லவா? காமராசரின் சாதுர் யமே இதை வழங்கியது. இதனாலேயே நாடு ஒரு அரும் பெருந் தலைவரைப் பெற்றது. மனுக்குலத்திற்கு நன்மையும் பிறந்தது.

**நிதானம்**

ஏழைகளுக்கு வழங்கும் தானத்தோடு நிதானமும் கொண்ட வராய் விளங்கினார் காமராசர். பதறாத காரியம் சிதறாது என்பது பழமொழி. எந்த ஒரு நிலையிலும் நிதானம் காத்த இயல்பு காமராசரின் மனித நேயத்தோடு வைத்து எண்ணப்பட வேண்டியதாகும். நிதானமின்மை அறிவை மயக்கும். அதுவும் தலைவர்கள் நிலையில் அவர்களைப் படபடக்க வைத்துப் பாதா ளத்தில் தள்ளிவிடும். இந்த நிதானம் இருந்தபடியாலேயே பெரிய பதவிகள் வந்தபோதெல்லாம் ஏணியில் ஏரி உச்சியில் போய் நின்றதுபோல்நின்று கொள்ளாமல், சாதாரண மனித நிலையிலேயே மனிதரோடு கூடவே அவரது சிந்தனை நின்று மனிதநேயத்தோடு செயல்பட அவரால் இயன்றது. நிதானத்திற்

1. கவிஞர் கண்ணதாசன்-கவிதைத்தொகுப்பு தொகுதி-3
2. திலீபன்; 100 ஆண்டு காங்கிரஸ், ப. 36.

கும் தன்னடக்கத்திற்கும் தொடர்புண்டு. அதை வைத்து அதற்கும் மனித நேயத்திற்கும் தொடர்புண்டு.

நிதானம் காத்தல் என்பது எளிதன்று. அதுவும் பட்டம் பதவி பணம் என்ற சூழ்நிலையில் புழங்குவோர்க்கு இது மிகவும் அரிதான ஒன்றே. உலகிலேயே உயர்ந்த நிதானத் தன்மை காத்த வராய் உருசியநாட்டுத் தலைவர் ஸ்டாலினைக் குறிப்பர். இரும்பு மனிதர் என்றே அவரை அழைத்தனர் உலக அரசியல் மேதைகள். தமது ஜன்மப் பகைவனான ஹிட்லரின் போர்விமானங்கள் உருசிய நாட்டுத் தலைநகரம் மாஸ்கோவின் வானப்பரப்பில் வட்டமிடத் தொடங்கின பிறகும் தமது பங்களாவில் பூந்தொட்டிகளில் செடி களுக்குக் களை எடுத்தபடியே சிறிதும் பரபரப்படையாமல் இருந் தாராம். நிதானத்தில் ஒருபடி அவரினும் மேல் நின்றவரென்றே சொல்லவேண்டும் பெருந்தலைவரை. அவர் அடி எடுத்து வைத்து நடக்கும் அந்த நடையிலேயே நிதானம் தெரிந்தது. இராஜநடை யின் கம்பீரமும் இலாவண்யமும் இயல்பாக அவர் நடையில் இணைந்திருந்தன. சிந்தனையிலும் நிதானம் அவரது இயற்கை.

"நீ பேசுவதையெல்லாம் நினைக்கவேண்டும். ஆனால் நினைத்ததை யெல்லாம் பேசக்கூடாது"— அவருடைய பொன் மொழிகளுள் ஒன்றாக இது இடம் பெறுகிறது. விருதுநகர்ப் பரந் தாமனின் இந்தக் கீதைப் பாடம் மனித நேயத்திற்குரிய ஒரு ஒப்பு யர்வற்ற படிப்பினையாகும்.

பேசுவதை நினைக்காத குற்றம்தான் ஒரு தயரதன் பிழை யான வரங்களை வழங்கி வாழ்நாள் முழுவதும் இன்னலுற்றான். அந்த தயரதன் இடத்தில் அன்று காமராசர் இருந்திருந்தால் கைகேயி வரம் கேட்டதும் 'இதோ பிடி' என்று வழங்கியா இருப் பார்? 'ஆகட்டும் பார்க்கலாம்' என்று நிதானத்தோடல்லவா கூறியிருப்பார்?.

முன்னேறத் துடிக்கும் ஆவலில் அவசரப்பட்டு முடிவெடுத்துச் சிக்கலில் அகப்பட்டு அவதிப்படும் இளைய தலைமுறைக்குப் பெருந்தலைவர் நிதானம்பற்றிய மிகத் தெளிவான அறிவுரையை வழங்கியுள்ளார். "நேற்று, இன்று, நாளை முக் காலத்தையும் உணரவேண்டும், நாம் உணர்ந்து செயல்பட்டால் மட்டும் போதாது, இந்தக்கால மக்களுக்கு முக்கியமாக வாலிபருக்குச் சரித்திரத்தையும் முக்காலத்தையும் உணர்த்த வேண்டும். பரபரப்பு

பகட்டுக்காலம் இது. சீக்கிரமாகப் பலனும் பயனும் பெறவேண்டும் என்று பதை பதைக்கும் அவசரம்தான் கொடி கட்டிப் பறக்கிறது. ரிஷிபிண்டம் ராத் தங்காது. ஒரே ராத்திரிக்குள் கர்ப்பம் தரித்து விடியற்காலத்துக்குள்ளேயே குழந்தை பிறந்தது என்ற காலம் இருந்ததோ இல்லையோ, இக்காலத்தில் ரிஷி பிண்டம் அவசர உடனடிப் பிரசவவேதனை வேகமாகப் பரவிக்கொண்டு வருகிறது."[1]

அவரது அரசியல் வாழ்வின் பிற்கால நிலையில் காங்கிரசில் பிளவு உருவான போது நிதானம் காத்தவர் பெருந்தலைவர்.

பால் புளிப்பினும் பகல் இருளினும்
நால் வகை வேத நெறி மாறினும்
தாந்திரியாச் சுற்றம் —[2] நிதானம் காத்த சான்றோருடைய குழு ஒன்று பற்றிய புறநானூற்றுக் குறிப்பு இவ்வாறு உள்ளது. கொள்கைப்பற்றில் உறுதியுள்ளவர்கள் பற்றிய குறிப்பு இது. கொள்கைப்பற்றுடைய புறநானூற்றுத் தலைவர்களைப் போல், பால் புளிப்பினும் பகல் இருளினும் நால்வகை வேதநெறி திரியினும் நான் திரியேன் என்று கட்டுப்பாடுடைய மனிதாபிமான நெறியாளராக நின்றார் காமராசர், இவரது நிதானத் தன்மைபற்றி, "காமராசர் சிறந்த சமயோசித புத்தியுடையவர், எதையும் அவசரப்பட்டுச் செய்யமாட்டார். அவர் தைரியசாலி. திடமான உறுதி கொண்டவர். அவர் முடிவு எடுத்தால் சாதாரணமாக மாற்ற முடியாது"[3] என்று குறிப்பிடப்படுகிறது.

உலகில் கொள்கைப் பிடிப்பாளர், தான்தோன்றிகள் என்று இரண்டு வகையினர் உண்டு. புலி, எலி, என்ற இரண்டு விலங்குகளோடு ஒப்பவைத்துப் பேசியுள்ளது இவர்களைப் புறநானூறு. வயலுக்குள் மறைந்திருந்தே நெல் மணிகளைத் தனது வளைகளுள் சேர்க்கும் தன்னலத்தன்மை எலியினுடையது. அவ்வாறில்லாமல் புலி மாறாத ஒரு கோட்பாட்டையுடையது. தான் வேட்டங்கொண்ட விலங்கு வலப்பக்கம வீழ்ந்தாலன்றி அதனை அது உண்ணாது.

---

1. நமசிவாயம் மு; காமராஜ் வரலாறு; ப. 370
2. புறநானூறு: 2 : 17-20
3. பார்த்தசாரதி. ஆர். டி. தமிழ்நாடு தந்த தலைவர்கள் ப. 231

"கடுங் கட்கேழல் இடம்பட வீழ்ந்தன
அன்று அவண் உண்ணாதாகி
பெருமலை விடரகம் புலம்ப வேட்டு எழுந்து
இருங்களிற்று ஒருத்தல் நல்வலம் படுக்கும்
புலி பசித்தன்ன மெலிவு இல் உள்ளத்து"[1]

புலியின் தன்மையைப் போல இப்படித்தான் வாழவேண்டும் என்ற கொள்கைப் பிடிப்புள்ளவராய் விளங்கினார் காமராசர். கட்சி பிளவுபட்ட போது பதவி நாட்டங்கொண்டு தமது கொள்கையைக் கைவிட்டு நிலைமாறிப் போகாமல் எதிரணியிலேயே நின்றுவிட்டார்.

1971இல் நடந்த தேர்தல் முடிவுகளை அவர் ஏற்றுக் கொண்ட விதம் எல்லோரையும் வியக்க வைத்தது. 'இரும்பு நெஞ்சம்' என்பதற்கு ஒரு விளக்கம் என்றால் அது காமராசர்தான் என்கிறார், அரசியல்வாதியும் பத்திரிகையாளருமான சோ. இராமசாமி. தேர்தல் முடிவை அவர் சமாளித்துப் பேசியவிதம் இதோ— "கிட்ட தட்ட 35 சதவிகிதம் ஓட்டு கிடைச்சிருக்கு. அது ஒண்ணும் மோசமில்லை. இன்னும் கொஞ்சம் உழைச்சிருந்தா நல்லா இருந்திருக்கும். நம்கையில நிதி வேற கிடையாது. பல இடங்களிலே கொடி கட்டறதுக்குக் கூடப் பணம் போதல, அடுத்த தடவை நல்லா உழைச்சு மக்களுக்கு எல்லாத்தையும் புரிய வைக்கணும்" என்று கூறினார் அவர்.[2]

ஜனநாயக முறையில் நடக்கும் 'தேர்தல்' என்ற ஒன்றை அறிமுகப்படுத்தியதே காங்கிரஸ்தான். தேர்தல் அறிக்கையை முன் ஓட்டு வாங்கும் முறையின் அடிப்படையில் தான் காங்கிரஸ் தேர்தல்களைச் சந்தித்தது. இந்த முறையில் தேர்தல் நடத்தி ஒரு காலத்தில் பலம் கொண்டு விளங்கிய ஜஸ்டிஸ் கட்சியையெல்லாம் புறங்கண்டது காங்கிரஸ் மகாசபை. பி. வி. இராமசாமி நாடாரும், சாமியப்ப முதலியாரும், இராமநாதபுரம் ராஜாவும் போன்ற பெருந்தலைவர்களையெல்லாம் வீழ்த்திய தேர்தல் முறை காங்கிரசின் தேர்தல் முறை.[3] இவ்வாறு விடுதலை வாங்கித்தந்து, ஓட்டு

1. புறநானூறு :190
2. முருகு தனுஷ்கோடி; பத்திரிக்கையாளர் நெஞ்சில் காமராசர், ப: 188
3. RANMULBI P. The Freedom Struggle and the Dravidion Movement, Orient Longman Ltd., 1980, P. 52-53.

முறையையும் கற்பித்த காங்கிரஸ் தோற்கிறதென்றால், அக்கட்சியைச் சேர்ந்த வேறு எந்தத் தலைவராலும் இந்த முடிவை இவ்வளவு எளிதாக ஏற்க முடியாது.

கட்சியின் உள் விவகாரத்திலும் இந்த நிதானத்தைக் கடைப்பிடித்தவர் காமராசர். 1940களில் முத்துராமலிங்க தேவர் போன்றவர்களெல்லாம் இராஜாஜிக்கு ஆதரவு தந்த வேளையில் பொறுமையாகக் காத்திருந்தார் காமராசர். 1952 இல் நிலைமாறியது. திரு டி. எஸ். அருணாசலம் தலைமையில் அமைந்த காமராசர் ஆதரவாளர், இராஜாஜி ஆதரவாளர்களை முழுவதுமாகச் செல்வாக்கிழக்க வைத்தனர். காமராசரின் நிதானமே அவருடைய பல வெற்றிகளுக்குக் காரணமாயிற்று, 1969 இல் காங்கிரஸ் பிளவுபட்டு காமராசர் எதிரணியில் நின்ற வேளையிலும், மீண்டும் ஆரம்பகால விருதுபட்டித் தொண்டன் போலவே மக்கள் தொண்டராக நிற்க அவரால் முடிந்தது. காமராசரை மக்களோடு மக்களாக மீண்டும் இயங்க வைத்தது கட்சியின் இந்த சரிவும் கூட. அத்தனையும் அவரது நிதானப் பண்பால் விளைந்த விளைவுகளே!

### நடுவு நிலைமை

காவிரிப்பூம் பட்டினத்து மக்கள் வளவாழ்வு வாழ்ந்த நிலையைப் பட்டினப்பாலை என்ற இலக்கியம் அழகுற வருணித்துள்ளது. அதற்குக் காரணம் என்று அமைந்தது அப்பட்டினத்து மக்கள் தம் குணநலன்களே. அக்குணநலன்களுள் தலையாயதாகக் கூறப்படுவது மேழிக் கலப்பையின் பலகாணி போல் மக்கள் நடுநிலைமை வழுவாது நின்றதாம்.

''கோடு மேழி நசையுழவர்
நெடு நுகத்துப் பகல்போல
நடுவிநின்ற நன் நெஞ்சினர்
வடுவஞ்சி வாய் மொழிந்து
தமவும் பிறவும் ஒப்பநாடி
கொள்வதூஉம் மிகைப்படாது
கொடுப்பதூவும் குறைபடாது'' [1]

நடுவு நிலைப் பண்பினைச் சமன் செய்து சீர்தூக்கும் கோலுக்கு (தராசு)ஒப்பிட்டுத் திருக்குறள் பேசியுள்ளது யாவரும் அறிந்ததே.

---

1. பட்டினப் பாலை 204-210

இதற்கு விளக்கமாக அமைவதுபோல் உள்ள ஒரு குறிப்பு "தமர் எனக் கோல் கோடாது: பிறர் எனக் குணங் கொல்லாது" என்று வருவது.[1] அதாவது நமக்கு வேண்டியவர் வேண்டாதவர் என்ற பாரபட்சம் காட்டாத நிலை அது. ஆளுமையின் மிக முக்கியமான அம்சம் இது. இதற்கு எதிரான பாரபட்சமோ தலைவர் ஒருவருக்கு ஆகவே ஆகாத ஒரு தீய பண்பு. அலுவலகங்களில் இது நிர்வாகத்தைச் சீர் குலைப்பது, அரசியலில் உட் குழுக்கள் அமையவும், அதனால் ஒற்றுமைக்குக் கேடு உருவாகவும் காரண மாவது. மனிதாபிமானம் என்று காமராசர் கொண்டது நடுவு நிலைமையைத்தான். எதிர்க்கட்சிகளைக் கண்டித்த வேளையிலும், ஜனநாயகப் பாரம்பரியக் கருத்தோடு பேணியவர் காமராசர். பகைவனுக்கும் அருள்வாய் என்ற ஆன்மீகநெறியை அரசியலுக்கும் நெறியாக்கிக் காட்டியவர் அவர்.

1954க்குப் பிறகு கட்சித் தலைமைக்குக் காமராசர், மராட்டிய மாநில ஆளுநர், முன்னாள் மத்திய நிதியமைச்சர் சி. சுப்பிமணியம் இருவருக்கும் இடையே போட்டி உருவானது. காமராசரே வெற்றிபெற்றார். அவருக்கு 93 வாக்குகளும், சி.எஸ்.க்கு 41 வாக்குகளும் கிடைத்தன. அப்போட்டி முனைப்பு களையெல்லாம் அன்றே மறந்துவிட்டவராய், பின்னர் காமராசர் தாம் அமைத்த 8 பேர் அடங்கின அமைச்சரவையில் அவரை அமைச்சராக்கினார்.[2] அதுமட்டுமல்ல, போட்டியின்போது சி.எஸ். முன் மொழிந்த முன்னாள் முதல்வர் பக்தவத்சலத்தையும் சேர்த்துக் கொண்டார்[3] எத்துணைப் பெருந்தன்மை!

தந்தை பெரியாரோடு கொள்கை அடிப்படையில் கருத்து வேற்றுமை கொண்டிருந்தபோதும், அவரோடு நல்லுறவு பெருந் தலைவருக்கு இருந்தது. காமராஜ் என்றிருந்த பெருந்தலைவர் பெயரை மேடைகள் தோறும் 'காமராசர்' என்று நல்ல தமிழில் குறிப்பிட்டு அப்பெயரை மக்கள் நடுவே புழக்கத்தில் கொண்டு வந்தவர் தந்தை பெரியார். 'பச்சைத்தமிழன்' என்று காமராசரை அவர் குறிப்பிட்டார்.[4]

---

1. புறநானூறு: 55
2. சாவி; பழைய கணக்கு, ப. 59
3. சுந்தரவடிவேலு.நெ.து. கல்விவள்ளல் காமராசர் ப. 13
4. முருகு தனுஷ்கோடி, பத்திரிக்கையாளர் நெஞ்சில் காமராசர், ப. 108

ஊர் மேடைகளில் வேறுபட்டு நின்றாலும் உள்ள மேடைகளில் ஒன்றாய் விளங்கினார்கள் அறிஞர் அண்ணாவும் பெருந்தலைவரும். அண்ணா ஆட்சிப் பொறுப்பேற்ற சில நாட்களிலேயே மூன்றுபடி அரிசிகேட்டு நாடு முழுவதும் போராட்டம் வெடித்தது. காமராசரை அண்ணா அணுக மனிதநேயத்தோடு அவருக்கு உதவ முன் வந்தார் காமராசர். ''புது அரசிற்கு ஆறுமாதகால அவகாசம் என்பது குறைவானது. திட்டங்களை நிறைவேற்ற மக்கள் அவகாசம் தர வேண்டும்'' என்று ஒரு அறிக்கையை விட்டுப் போராட்டத்திற்கு முடிவு கண்டார். காமராசரிடம் இருந்து முதலமைச்சர் பதவியில் இருப்பவர் அண்ணா. அத்தகைய பொறாமை உணர்வு பெருந்தலைவர்க்கு வரவே இல்லை. அண்ணா நோய்வாய்ப்பட்டபோது சிகிச்சையைத் தாமதப்படுத்தினமைக்கு மருத்துவர்களைக் கடுமையாகக் கண்டித்தார்.

டாக்டர் கலைஞர் சட்டசபை எதிர் கட்சித் தலைவராய் இருந்தபோது அவரின் அன்னையார் இயற்கை எய்தினார். அதை அறிந்ததும் காமராசர் விரைந்து அவர் இல்லம் சென்று அன்னையை இழந்து வருந்தின குடும்பத்திற்கு ஆறுதல் கூறினார். தாம் ஒரு காங்கிரஸ்காரர் என்பதையே மறந்துவிட்டவர் பெருந்தலைவர். இலக்கியப் பேரறிஞர் நாரண. துரைக்கண்ணன், காமராசரின் தன்னலமற்ற பண்புகளை வைத்து அவரைப் புத்தருக்கு ஒப்பிட்டுப் பேசியுள்ளார்.[1]

காமராசரும் மூதறிஞர் இராஜாஜியும் அரசியலில் இருதுருவங்களாகவே வாழ்ந்தவர்கள். மூதறிஞர் காங்கிரசை விட்டுவிலகிச் சுதந்திரக்கட்சியைத் தொடங்கின பிறகு இந்த விரிசல் மேலும் அதிகமாயிற்று. பெருந்தலைவர் சுதந்திரக் கட்சியை மிகவும் கடுமையாகத் தாக்கிப்பேசிய சூழ்நிலைகள் இருந்தன. ஆயினும் தனிப்பட்ட முறையில் பெருந்தலைவர்க்கு மூதறிஞர் மீது மிகுதியான மதிப்பிருந்தது.

இவர்களின் அரசியல் மோதல் உச்சக் கட்டத்தை எட்டியிருந்த வேளை, சென்னை இல்லத்தில் மேடையில் கட்சித் தொண்டர்களோடு மூதறிஞர் குறித்து விவாதம் நடத்திக் கொண்டிருந்தார் காமராசர். திடீரென்று மூதறிஞர் அங்கே வர,

1. முருகு தனுஷ்கோடி., பத்திரிக்கையாளர் நெஞ்சில் காமராசர், ப. 117

செய்தி அறிந்து முன்வாயிலுக்கே ஓடி வந்து வரவேற்றார் பெருந்தலைவர்.

> "வாங்கோ, வணக்கம், ஐயா நீங்க இங்கே வரணுமா? சொல்லி விட்டிருந்தா ஓடோடி வந்திருப்பேனே, நீங்களென்ன உங்கள் வயதென்ன' என்னைத் தேடி நீங்கள் வருவதா" என்று துடித் தார் தலைவர். கட்சி மறந்து வயதிற்கு மதிப்பளிக்கும் நடு நிலைமை, கட்சி மறந்து அறிவுக்கும் ஆற்றலுக்கும் மதிப்பளிக் கும் நடுநிலைமை, இந்த நடுநிலைமை தான் காமராசரை உயர்நிலைக்கு உயர்த்தியது. தமது கடைசி காலத்தில் இராஜாஜி தமது கட்சியினருக்கே—

> "காமராசர் தான் தலைவர், சுதந்திரக் கட்சியினர் அவரிடமே ஆலோசனை கேட்டுச் செயல்பட வேண்டும்" என்று கட்டளைப் பிறப்பித்தார்.[1] அரசியல் மார்க்கத்தில் எதிரும் புதிருமாக நின்றும் கருத்து வேற்றுமைக்கு அப்பால் ஒருவர் உள்ளன்பு கொண்டு வாழ முடியும் என்பதை உலகுக்கே காட்டியவர் காமராசர்.

பொதுவுடைமைக் கட்சித் தலைவர் ஜீவா நம் பெருந் தலைவரோடு கொள்கை மாறுபட்டு நின்றவர்தான். நோய்வாய்ப் பட்டு இறுதிக் கட்டத்தில் அவர் மருத்துவமனையில் சேர்க்கப் பட்டபோது அவர் பேசியவை இரண்டே தொடர்தான் "பத்மா வுக்குத் (மனைவி) தந்தி கொடுங்கள் "காமராசருக்குப் போன் பண்ணுங்கள்" என்பன அவை[2]

தம்மை விமர்சனத்திற்கு உட்படுத்தவொட்டாது காத்துக் கொண்ட நல்லநடுநிலையாளராக அவர் விளங்கியமையால், யாரையும் விமர்சிக்கத்தக்க உரிமையும் துணிவும் அவருக்கு இருந்தன. மடியில் கனமிருந்தால் வழியில் பயம் என்பது முது மொழி. நாடே அவருக்கு மனைவி. நாட்டு மக்களெல்லாம் அவர் குழந்தைகள். பிரான்சு நாட்டின் அரசியல் மேதை ஒருவர் நிர்வாகம் நடத்தும் ஒரு தலைவர் எப்படிப்பட்டவராய் இருக்க வேண்டும் என்று கூறிய விளக்கத்தில்—

---

1. முருகு தனுஷ்கோடி; பத்திரிக்கையாளர் நெஞ்சில் காமராசர் ப. 117
2. மேற்படி: ப. 202-205

''குடும்பம் சுற்றம் உறவு என்றில்லாத தலைவர் ஆட்சி செலுத்தினால், அந்த நாடு படிப்படியாக முன்னேறும்'' என்றார். இது காமராசரின் வாழ்க்கைப் பயணத்தால் மெய்ப்பட்டதென்றே சொல்ல வேண்டும்.

கதாகாலட்சேபம் நடத்திக் கொண்டிருந்த வாரியார் ஒரு தடவை காமராசர் நிகழ்ச்சிக்கு வருகிறார் என்பதைக் கேள்வியுற்று அவர் வரும்நேரம் அறிந்து காலட்சேபத்தின் நடுவே, தன்னிடம் எந்தக் காரியத்தை ஒப்படைத்தாலும் அதை ஒழுங்காகச் செய்து முடிப்பவர் ஆஞ்சநேயர், காரணம் அவர் ஒரு பிரம்மச்சாரி பிரம்மச்சாரிகள்தான் தங்களிடம் ஒப்படைக்கப்படும் பொறுப்புகளைச் சரியாகச் செய்யக்கூடிய ஆற்றலும் வல்லமையும் பெற்றவர்கள். அந்தக் காலத்தில் மட்டுமல்ல, இந்த காலத்திலும் தான் என்றார். இப்படிஅவர் சொல்லிக் கொண்டிருக்கும் போதே காமராசரும் உள்ளே வந்தார். செய்தி சூழ்நிலைக்குப் பொருந்த அமைந்திருந்ததால் கூட்டத்தில் ஆரவாரம் எழுந்தது. வாரியார் சரியான நேரம் பார்த்து நான் பிரம்மசாரி என்று சொன்னது யாரை என்பது உங்களுக்குப் புரிந்துவிட்டது. அது தான் இந்த ஆரவாரம் என்றார். கூட்டத்தில் ஆரவாரம் மேலும் அதிகமாயிற்று.[1]

நெய் வைக்கப்பட்ட ஜாடி நன்றாக மூடப்பட்டிருந்தாலும் உள்ளே புகுந்து நெய்யைச் சுவைக்க இயலாத நிலை இருந்தாலும் எறும்புக் கூட்டம் ஜாடியின் மூடியின் மீது வட்டமிட்டவண்ணமே இருக்கும். இதனை வசதியுடையவர்கள் அல்லது பதவியிலுள்ளவர்கள் தங்களுக்கு ஏதேனும் வழங்கமாட்டார்களா என்று அவர்களைச் சுற்றி வெற்று வட்டம் போடும் மாற்றாருக்கு உவமையாகப் பேசியுள்ளது நாலடியார்—

'' ஆகாது எனினும் அடுத்து நெய்யுண்டாகில்
போகாது எறும்பும் புறஞ்சுற்றும்—யாதும்
கொடாஅர் எனினும் உடையாரைப்பற்றி
விடாஅர் உலகத்தவர்.''

நல்ல தலைவன் இவர்களை அடையாளம் தெரிந்துகொண்டு செயல்பட வேண்டும். ஊன் பொதி பசுங்குடையார் என்ற சங்க காலப்புலவர் வீண்புகழ்ச்சி செய்பவரை அடையாளம் கண்டு கொண்டு ஏமாறாது செயல்படும் நல்ல பண்பும் ஆளுமைத்

1. சாவி, பழைய கணக்கு ப. 55

திறனும் காணப்பட்டமைக்காகக் இளஞ்சேட் சென்னி என்ற சங்க கால வேந்தனை மனமுவந்து வாழ்த்துகிறார் — வழிபடுவோரை வல்லறிதியே (முகத்துதி பண்ணுகிறவர்களை நன்கு அறிந்து வைத்திருக்கிறாய்) பிறர் பழி கூறுவோர் மொழி தேறலையே (பிறர் மேல் கூறப்படும் அவதூறுகளுக்கு நீ செவிசாய்ப்பதில்லை) நீ மெய்கண்ட தீமை காணின் ஒப்பநாடி அத்தக ஒருத்தி (குற்றங்களை நன்கு ஆராய்ந்து அதற்கேற்ற தண்டனையையே நீ வழங்குகிறாய்) வந்தடி பொருந்தி முந்தை நிற்பின் தண்டமும் தணிதி (குற்றத்தை ஒப்புக் கொண்டு உன்னிடம் சரணடைந்து விட்டால் மன்னித்தும் விடுகிறவன்)[1] இவ்வாறு புகழ்ந்துள்ளார் புலவர். அப்புலவர் இவ்வாறு புகழ்ந்ததெல்லாம் பெருந்தலைவருக்கும் பொருந்தும். இக்காலத்துப் புலவரான கல்வி நெறியாளர் நெ. து.சு. வும் பெருந்தலைவரை— 'முகத்துதிக்கு ஏமாறாதவர் அவர்' என்றே குறிப்பிட்டுள்ளார்.[2]

மாத்ரு பூமி பத்திரிகையைச் சேர்ந்த குஞ்சப்பன் என்பவரின் நண்பர் காமராசர் முதலமைச்சராய் இருந்த காலத்தில், ஒரு தடவை கோட்டைக்குச் சென்று அவர் அலுவலகத்தில் அவரைக் காண முயன்றாராம். காமராசர் அப்போது பொறியியல் அதிகாரி ஒருவர் மேலிருந்த புகாரை விசாரித்தபடி இருந்தாராம். அதிகாரி தமக்கு வேண்டிய உறவினர் ஒருவருக்கு இலவசமாக ஒரு கழிவு நீர்க் கட்டிடத்தைக் கட்டிக் கொடுத்து விட்டார் என்பதே குற்றச்சாட்டு. விசாரித்து அவர் குற்றவாளி என்று அறிந்த பெருந்தலைவர் அந்தக் கட்டிடத்தை உடனடியாக இடித்துத்தள்ள உத்தரவிட்டாராம்.[3] சோழன் இளஞ்சேட் சென்னியைப் போலவே குற்றங்கண்டு தண்டனை வழங்கும் வேளை, தலைவரின் தண்டனை குற்றத்திற்குத் தகுந்த தண்டனையாகவே இருந்தது.

எதிர்க்கட்சியினரைத் தமக்கு வேண்டாதவர் என்று கரித்துக் கொட்டியதில்லை அவர். அவர்தம் குறைகளைப் பொறுமையோடு கேட்டார். ஜனநாயக முறையில் பலம்குன்றாத ஓர் எதிர்க்

1. புறநானூறு : 10
2. சுந்தரவடிவேலு : நெ. து. கல்வி வள்ளல் காமராசர் ப : 147
3. முருகு தனுஷ்கோடி; பத்திரிகையாளர் நெஞ்சில் காமராசர் ப. 121

கட்சி வேண்டும் என்று விரும்பின நடுநிலையாளர் அவர். சென்னை மேயர் ஒருவர் கூறுகிறார்; "எதிர்க்கட்சியினர் குறிப்பிட்டுக் காட்டின குறைகளையும் ஏற்றுக் கொண்டு செயல்பட்டார் காமராசர். பொது மக்களும் காமராசர் மீது நம்பிக்கை வைத்து ஒத்துழைப்பைத் தந்தனர்."[1]

அரசு அதிகாரிகள் காமராசரின் நடுநிலைத் தன்மையால் சுதந்திரமாகச் செயல்பட முடிந்தது. அவர்களின் செயல்பாடுகளில் ஆளுங்கட்சியினரின் தலையீடு இல்லாதிருந்தது. இந்த அதிகாரி நமது கட்சி ஆதரவாளர் ஆனபடியால் பதவி உயர்வு தர வேண்டும். அந்த அதிகாரி மாற்றுக்கட்சி ஆதரவாளர் அதனால் இடம் மாற்றித் துன்புறுத்த வேண்டும். என்ற நிலை, குறுகிய கண்ணோட்டம் காமராசர் காலத்தில் இல்லாதிருந்துள்ளது. கல்வி நெறியாளர் நெ. து. சு. ஒரு அரசு அதிகாரி என்ற அனுபவத்தை வைத்து இதன் தொடர்பாகத் தமது மனநிறைவைத் தெரிவித்துள்ளார்—" எங்கள் ஆக்கப்பணிகளில் ஈடுபட முன் வருவோர் எந்தக் கட்சியினர் என்று நாங்கள் கவலைப்பட வேண்டாத நிலை இருந்தது."[2] என்றுள்ளார் அவர்.

பாரதம் பரந்த நாடு. உபகண்டம் என்று அழைக்கப்படுவது. அது மட்டுமல்ல பல மொழிகள் பேசும் பல இனத்து மக்கள் பல மாநிலங்களில் பிரிந்து வாழ்ந்தாலும் ஒரு நாடாக நிற்பது இது. வேற்றுமையில் ஒற்றுமை என்பதே பாரத நாட்டுக் கலாச்சாரம். இந்நிலையில் அனைத்து இனமொழியினரையும் அணைத்துச் செல்லும் நடுவு நிலைமை கொண்ட தலைவர்களாலேயே இந்த நாட்டைக் குழப்பத்தினிடையிருந்து மீட்டுச் சீரான எல்லையை நோக்கி இட்டுச் செல்ல முடியும். அத்தகைய உயர் தன்மையுடையவராய்க் காமராசர் விளங்கினார். அனைத்து மாநில மக்கட்கும் நடுநாயகமாக அவர் விளங்கினார். அந்த நிலையில் முதலாவது தான் ஒரு இந்தியன், பின்னர் தமிழன் என்று தம்மை வெளிப்படுத்திக் கொண்டார். தேசிய ஒருமைப்பாட்டைப் பேணுவதில் கண்ணும் கருத்துமாக இருந்தார் காமராசர். மொழிச் சிக்கல் போன்ற சிக்கல்களால் ஒருமைப்பாட்டிற்குக் குந்தகம் விளைவிக்கும் அபாயம் நெருங்கினபோது நிரந்தமான தீர்வுகாண மொழிக் கொள்கையை அவர் சிபாரிசு செய்தார். "இந்திமொழி

---

1. சீனிவாசன் கெ. என். காமராசர் காலத்தில் சென்னை மாநகராட்சி; ப. 101
2. சுந்தரவடிவேலு, நெ, து, நினைவில் நின்றவர்கள், ப; 86

பேசாத தென் மாநில மக்கள் இந்தி கற்றுக் கொள்ளும் போது இந்தி பேசும் மக்கள் தென் மொழிகளில் ஒன்றைக் கற்க வேண் டும்.'' என்ற சமரசமான திட்டத்தை அவர் ஆதரித்தார். தமிழைப் பரப்ப வேண்டும் என்பதில் முனைப்பு இருந்தது அவருக்கு. ஆட்சி மொழிச் சிக்கல் குறித்து அகில இந்திய அளவில் பல்வேறு மாநிலத் தலைவர்களின் ஆலோசனைக் கூட்டம் ஒன்றிற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அறிஞர் அண்ணாவும் கலந்து கொண்ட கூட்டம் அது, கம்யூனிஸ்டுகள் ஆங்கிலத்தை ஒழிக்க வேண்டும் என்று எழுப்பிய குரல் ஓங்கியது. அந்த வேளை அங்கி ருந்த பெருந்தலைவர் தமது இருக்கையை விட்டெழுந்து அண்ணா விடம் சென்று தமிழகத்தைப் பொறுத்தமட்டில் ஆங்கிலம் தேவை என்று அவரை வாதாடத் தூண்டினாராம்.

ஆண்களோடு பெண்களும் முன்னேற வேண்டும் என்ற நடு நிலையாளர் காமராசர். தாய்க்குலம் பற்றி அவர் கூறுகிறார்: "நாம் இக்காலத்தில் தாய்மாருக்குக் கொடுக்க வேண்டிய கவுரவத்தைக் கொடுக்காமல் தாழ்ந்து போனோம். முன்னோர் இந்தக் கவுரவத்தைக் கொடுத்தார்கள். அவர்கள் உயர்ந்த நிலை யில் இருந்தனர்''[1] என்றார் அவர். விலைவாசியைப் பற்றி அதிகம் கவலை கொள்ளுகிறவர்கள் தாய்மார். காமராசரும் இந்தக் கோணத்தில் அதிகமாகக் கரிசனை காட்டி வந்தார். இந்திரா காந்தி ஆட்சிக் காலத்தில் இந்திய ரூபாயின் மதிப்பு குறைக்கப் பட்ட வேளை, அதனால் நாட்டிற்கு நன்மை என்றும் விலை வாசியை அது பாதிக்காது என்றும் பத்திரிகைகள் எழுதின. ரூபாய் மதிப்பு குறைப்பு காமராசருக்கு எள்ளளவும் பிடிக்காம லிருந்தது. மறுநாள் காலையிலேயே சந்தைகளில் கறிகாய் விலை ஏறியிருப்பதை உணர்ந்து துடித்துப் போனார் பெருந்தலைவர். பண மதிப்புக் குறைப்புப் பற்றியும் கத்தரிக்காய் விலை ஏற்றத் தைக் கண்டித்தும் பத்திரிகையில் அறிக்கையே அவர் விட்டார்.[2]

மக்கள் நன்மைக்காகத் தமது கட்சியின் குறைபாடுகளைக் குறித்தும் மக்களுக்கு அறிவிக்க அவர் தவறவில்லை. காரணம்

---

1. நமசிவாயம். மு., மக்களாட்சி காமராஜ் ப : 164
2. MATHAI. M. O., Reminiscences of the Nehru age, P. 230; when the Indian rupee was devalued in a drastric manner under the Indira Regime; the media, blared out the advantages of devaluation and that it would have no effect on domestic prices. Kamaraj was very upset at the devaluation. The next morning he found that the prices of Brinjal had gone up."

பொதுமக்களின் பிரதிநிதியாக அவர் விளங்கினார். அவரது மனித நேயம் அவரை ஒரு சாதாரண தொண்டன் என்ற நிலையிலேயே ஆத்ம திருப்தி கொள்ள அவரை அனுமதித்தது.

உத்தரப் பிரதேச முன்னாள் முதலமைச்சர் பகுகுணா தமது இரங்கல் உரையில் மிக அழகாகவே கூறினார்— "காமராஜ் பொது மக்களின் ஓர் உண்மையான பணியாள்"[1] காமராசரின் மனித நேயத்திற்கு இதனைவிட உயர் சான்று வேறு எதுவாக இருக்க முடியும்?

மக்களுக்காக அவர் திட்டமிட்டுச் செய்த செயல்பாடுகளுக்கு இடையூறு நேருமானால் எந்த வேளையும் தமது பதவியை விட்டு இறங்க ஆயத்தமாக இருந்தார். எடுத்துக்காட்டிற்கு, அவர் 1961 ஜுன் 20-இல் காஞ்சிபுரம் அய்யங்கோட்டையில் பேசும்போது "கல்வியைப் பரப்பவேண்டாம் என்றால் முதலமைச்சர் பதவியை விட்டு இறங்கவும் தயாராக இருக்கிறேன்" என்று அவர் கூறியதைக் குறிப்பிடலாம். மக்கள் தொண்டே மகேசன் தொண்டு என்று கொண்டு அனைத்துச் சமுதாயத்தினருக்கும் நடுநாயகமாக நின்ற மனித நேயர் பெருந்தலைவர் காமராசர்.

## 6. பக்தி

காமராசரை ஆன்மீகத்தில் கண்ணன் என்று வருணித்தார் கவிஞர் கண்ணதாசன், காமராசரில் கண்ட அனைத்து மனித நேயப் பண்புகளுக்குமே அடிப்படை அவரது ஆன்மீக உள்ளமே ஆகும். பக்தியுடையார் காரியத்தில் பதறார். வித்து முளைக்கும் தன்மைபோல் மெல்லச் செய்து பயனடைவார் என்றார் பாரதி. இந்த பக்தியால் விளைந்த பண்பே காமராசரைப் பல நிலைகளிலும் உயர்ந்து நிற்கச் செய்த நிதானம். அந்த நிதானத்தால் மக்களோடு உறவாடும் கருணையும் அதற்கான எளிமையும் அவரோடு சேர்ந்தன. இதனால் காமராசரின் மனிதநேயம் எனும் போது, அவரது ஆன்மீக நிலை பற்றிய கண்ணோட்டம் அவசியம் ஆகிறது.

காமராசரின் பக்தி எனும் போது கடவுள் பக்தி, தேச பக்தி, குரு பக்தி என்று மூன்று கோணங்களில் ஆராயத்தக்கது எனலாம். தந்தை குமாரசாமி நாடாருக்கும் அன்னை சிவகாமிக்கும் பிறந்த

---

1. சீனிவாசன். கெ. என்., காமராசர் காலத்தில் சென்னை மாநகராட்சி; ப : 60

இவருக்குக் 'காமாட்சிராஜா' என்றே முதலில் பெயர்விளங்கிற்று. இவ்வாறு குமாரசாமி, சிவகாமி, காமாட்சி, என்று குடும்பம் முழுமைக்கும் அமைந்த சைவத்திருநாமங்களை வைத்தே இவரது குடும்பம் நல்ல பக்தியுடைய குடும்பம் என்பதை நாம் உணரலாம். கோவில் விழாக்கள் பண்டிகைகள் என்று ஒன்று விடாமல் மகிழ்ச்சியாக எல்லாவற்றிலும் கலந்து கொள்வார் அவர். சிறுவயது முதலே தெய்வ பக்தியில் சிறந்த பயிற்சி பெற்றவர் காமராசர்.

காமராசர் ஆட்சிக் காலத்தில் புராண இதிகாசங்களைப் பரப்பும் திட்டம் ஒன்று செயல்பட்டது. காமராசர் அதற்கு மிகவும் ஆதரவு தந்துள்ளார். 'சத்ய சபா' என்ற பெயரில் ஒரு மன்றம் நிறுவப்பட்டு அதன் வழிக் கதாகாலட்சேபங்கள் தொடர்ந்து நடத்தப்பட்டன. அபராத பணிகளுக்கு நடுவேயும் காமராசர் வருகை தந்து ஊக்கம் நல்கி வந்தார். இராமாயணம் முதன் முதலில் பாடு பொருளாய்த் தேர்ந்தெடுக்கப்பட்டு நிகழ்ச்சிகள் தொடர்ந்து நடந்தன. இன்றை நாட்களில் தொலைக்காட்சியில் இராமாயணத் தொடரைக் கண்டோம். பாரதத் தொடர் நடந்து முடிந்திருக்கிறது. இதற்கெல்லாம் முன்னோடி போல் காமராசர் ஆட்சிக் காலத்தில் இந்தப்பக்தித் தொடர் நிகழ்ச்சிகள் தமிழ்நாட்டில் பக்தி வெள்ளம் பெருக்கெடுத்தோடச் செய்திருந்தன. இதற்கெல்லாம் பெருந்தலைவரின் பக்தி மேம்பாடே காரணம் எனலாம். ஆன்மீகச் சிரத்தையே மூலம். மக்கள் தலைவராக வாழ்ந்த காமராசர் மக்களுக்காகத் தம்மை ஒப்படைத்துக் கொண்ட நிலையில் அவர்களது தனித்தனி சமய உணர்ச்சிகளை மதித்தார். நாள் கிழமை நேரம் காலம் பார்ப்பதில் தமிழ் மக்கள் முனைப்பானவர்கள். 'நாள் செய்வன நல்லவர் செய்யார்' என்பதில் நம்பிக்கையுடையவர்கள். பெருந்தலைவராக அவர் சுற்றி வந்து எத்தனையோ அலுவல்களில் ஈடுபட்டவராய் இருந்தும், மக்களின் இது போன்ற கருத்துக்களுக்கு மதிப்பளித்து நடந்தார்.

ஒரு நாள் இரவு ஒன்பதரை மணி இருக்கும், தமது நண்பர்களுடனிருந்து உரையாடிக் கொண்டிருந்தார் தலைவர். திடீரென்று நண்பர்களுள் ஒருவரிடம் "இருபத்திநான்காம் தேதி என்ன கிழமை?" என்று கேட்டார். நண்பர் 'செவ்வாய்க்கிழமை' என்றார். அடுத்து "அன்று ராகு காலம் எத்தனை மணிக்கு? என்று கேட்டார் தலைவர். நண்பர் 'மூணு-நாலரை' என்றார். உடனேயே— "மெட்ராசுக்கு போன் பண்ணி கூட்டத்தை ஆறு

மணிக்குப் போடச் சொல்லு'' என்றார். ''நாலு மணிக்கோ ஐந்து மணிக்கோ கூட்டத்தைப் போட்டா யாராவது ரெண்டு பேரு ராகு காலம் என்பாங்க. அப்புறம் மாத்தணும். அதற்கு இடம் கொடுக்காமல் முன் ஜாக்கிரதையா செய்திட்டா நல்ல தில்லையா?'' என்றார் மேலும் தலைவர். அத்தனை பேரிலும் இந்த இரண்டு பேருடைய சமயஉணர்ச்சியை மதித்த பேராண்மை யினை இந்த மாமனிதரிடம் காண்கிறோம்.[1]

''மகாத்மாஜி உயிருடன் இருந்தபோது அவர் இறைவனின் ஸ்தூல சின்னமாக விளங்கி ஒளி கொடுத்தார்'' [2] என்பார். காம ராசரின் இந்த இறைப்பற்றுதான் அதன் அடிப்படையான அன்பு. அதன் புலப்பாடான அகிம்சை முதலியவற்றைக் காந்தியடி களிடமிருந்து எளிதாகக் கற்றுக் கொள்ள அவரால் முடிந்தது எனலாம். காந்தி எனும் சொல்லுக்கே ஒளிச்சுடர் என்று தான் பொருள். அந்த ஒளிச்சுடரில் குளித்தெழுந்தவரன்றோ பெருந் தலைவர். காந்தியடிகள் அகிம்சையின் உருவென்றால் அதன் செயல்வடிவம் காமராசரே. 1966ல் ஏற்பட்ட சாமியார்கள் கலகத்தின்போது பசுவதை ஒழிப்புச்சட்டத்திற்காக காமராசர் ஒருவர் மட்டுமே திறம்பட நின்று வாதித்தார். இதனால் அவரது உயிருக்கு ஆபத்து விளைய இருந்தது.[3]

சத்தியம், தருமம் என்பன மீது காமராசருக்கு அபார நம் பிக்கை இருந்தது. சிறுவனாக இருந்த காலத்திலேயே விருதுப்பட்டி மக்களை மதங்கொண்டயானை அச்சுறுத்த சத்திய சங்கிலியை அதற்குத் தரவேண்டும் என்ற எண்ணம் உதயமாகி, அதைக் கொடுத்து யானையின் மதத்தை அடக்கினார். காப்பிய நாயகர் களில் சீவகன் போன்றோர் யானையை அடக்கியதாக இலக்கியங் களில் படிக்கிறோம். அவர்களும் கூட மலர்ந்த மார்பும் தின வெடுத்த தோளுமென காளையராக நின்றநிலையில் யானையை அடக்கியதாகத்தான் படிக்கிறோம். அத்துணைச்சிறிய வயதில் யானையை அடக்கியவர் காமராசர் ஒருவரே ஆவார். இதனால் காவிய வீரர்களையும் விஞ்சிய வரலாற்று நாயகர் இவர் எனல் வேண்டும்.

பிறமதங்களையும் மிகவும் மதித்தவர், பேணியவர் காமராசர்.

---

1. சாவி., சிவகாமியின் செல்வன், ப ; 113
2. அவினாசிலிங்கம். தி. சு. நான் கண்ட மகாத்மா, ப : 202
3. முருகு தனுஷ்கோடி, பத்திரிக்கையாளர் நெஞ்சில் காமராசர், ப, 297

"முஸ்லீம்கள் வாழாவிட்டால் இந்துக்கள் வாழ இயலாது. இந்துக்கள் வாழாவிட்டால் முஸ்லீம்கள் வாழ இயலாது. நபிகள் நாயகத்திற்கு முன்பிருந்தே பல்வேறு மதங்களைச் சேர்ந்தவர்கள் இந்தியாவில் இருந்துள்ளனர். குடியேறியும் உள்ளனர். இந்தியாவிற்கு அவர்கள் நன்மையே அளித்தனர். கட்சிகளாகட்டும், மதங்களாகட்டும் நல்ல கொள்கைகள் இருந்தால் அவற்றை நாம் ஏற்றுக்கொள்ள வேண்டும்"[1]

இவ்வாறு சர்வ சமயசமரச அறிக்கையொன்றையே விடுத்துள்ளார் காமராசர். இவ்வாறு சர்வசமய சமரசநோக்குடைய ஒரு தலைவராலேயே மனித நேயத்திற்கான ஒரு அடையாளத்தைக் காட்ட இயலும்.

காமராசருக்கு ஒரு கிறிஸ்தவ நண்பர் கேரளத்தில் இருந்தாராம், இவருடைய வழக்கு வியாச்சிய காரியங்களுக்கெல்லாம், அவர் பொருளுதவி செய்து வந்தாராம். அதற்கு நன்றிக் கடனாகக் காமராசர் பாராளுமன்றத் தேர்தலுக்கு அனுமதி வழங்கி வெற்றியும் வாங்கிக் கொடுத்தாராம்.[2] அவர் இல்லத்தில் மேசையில் இயேசு-புத்தர்-காந்தி சிலை உருவங்கள் உண்டு. ஊமை நண்பர் கொடுத்தது.[3]

தெய்வபக்தியில் பல நிலைகளிலும் மெய்யான தன்மையாக ஈடுபட்டிருந்த அவருக்கு, அப்பற்றினை நாட்டின் மீதும் திருப்பிவிட மிக எளிதாய் முடிந்தது. நாட்டை அவரது திருக்கோவிலாய், மக்களைத் தெய்வங்களாய் அவர் கொண்டிருந்தார். தெய்வ பக்திக்கும் தேசபக்திக்கும் பாலம் அமைத்தவர் அவர். கோவில் திருவிழாக்களைப் போலவே தேசிய விழாக்கள் நடைபெற வேண்டும் என்று வெகுவாய் விரும்பிய காமராசர்—

"நாம் தேசிய விழாக்களை நடத்திக் கொண்டே இருக்க வேண்டும். கோவில்களில் ஆண்டுக்கு ஆண்டு தெய்வ விழாக்களை நடத்திக் கொண்டே இருக்கிறோமே ஏன்? நம்

1. நமசிவாயம். மு., மக்களாட்சி காமராஜ், ப.26.
2. Mathai. M.O , 'Reminiscences of Nehru age' "But he had a benefactor in a Tamil Christian who had extensive business interests in kerala. From this man Kamaraj took fudicious financial assistance for himself; his mother and his dependent sister. Kamaraj rewarded his benefactor by getting him elected to Parliament." P.229.
3. கிரி. பி.வி., பேட்டியில் பிறந்த கதை ப.32.

முன்னோர் நம்மை விடவும் அறிவாளிகள்'' [1] என்று கூறியுள்ளார்.

நாட்டின் தன்மானச் சின்னம் தேசக்கொடியாகும். அதனை மதிக்க வேண்டும் என்பதில் கரிசனை கொண்டார். கொடிகாத்த குமரன் போன்ற வீர இளைஞரைப் பற்றி அவர் அடிக்கடி குறிப்பிடுவாராம். மொழிப்பற்றும் காமராசரின் பக்திக்கோணத்தில் அடங்கின ஒன்று. பச்சைதமிழன் என்று பெயர் பெற்றவர் அவர். ஆங்கிலம் பேச வேண்டிய சூழ்நிலைகளிலும் ஒரு ஆர்வத்தோடு அவர் அதைப்பேசியதில்லை. கேரளத்தைச் சேர்ந்த சிலர் பண்டிதர் நேருவை அணுகி கர்நாடகத்தோடோ அல்லது தமிழ் நாட்டோடோ சேர்ந்திருக்க விரும்புகிறோம் என்று கூறினர். நேரு இதனைக் குறித்துக் காமராசரிடம் குறிப்பிட்டபோது, அவர் ஆகட்டும் பார்க்கலாம் என்று ஒப்புக்குத் தான் சொல்லிவிட்டார். தமிழ் மாநிலம் தமிழர்களை மட்டுமே கொண்ட தனியோர் மாநிலமாக உயர்ந்து விளங்கவேண்டும் என்ற ஆர்வம் அவருக்கு இருப்பதாக அதிலிருந்து கொள்ள வேண்டியதாயிற்று.[2] அவர் இந்தியைக் கற்றுக் கொள்ள மறுத்து விட்டார் என்றே சிலர் கூறுகிறார்.[3] ஆங்கிலத்தில் பேசினாலும் சில வேளைகளில் விட்டு விட்டு அங்குமிங்குமாக ஒவ்வொரு வார்த்தைகளைப் பேசிவைப்பாராம். குறிப்பிட்ட ஒரு காங்கிரஸ் தலைவரைக் குறிப்பிட்ட ஒரு பதவியிலிருந்து எடுத்து விடவேண்டும் என்று காங்கிரஸ் பெரும்பான்மை தீர்மானித்த போது நேரு காமராசரிடம் நெடுநேரம் ஆங்கிலத்தில் அவரின் கருத்துக் கேட்டாராம். எவ்வளவோ நேரு பேசிய போதும் பெருந்தலைவர் முதலும் முடிவுமாக இரண்டே தடவை He must go என்று மட்டும் சொல்லிச்சமாளித்து விட்டாராம்.[4]

---

1. நமசிவாயம். மு., மக்களாட்சி காமராஜ், ப.356.
2. Mathai. M.O., Reminiscences of the Nehru age, "Some people from kerala approached Nehru saying that they did not want a separate state and would like to be part of Tamil Nadu or Mysore. Nehru seriously made the proposal to Kamaraj who said the equivalent of parkalam (will see) He had no intention of seeing anything." P.217.
3. IBid P.228.
4. IBid P.185.

காமராசரின் தாய் நாட்டுப் பற்றும் தாய் மொழிப் பற்றும் விடுதலைப் போராட்டக் காலத்தில் 'ஜெனரல் நீல்' சிலையை அகற்ற வேண்டும் என்று அவர் நடத்தின அறப்போராட்டத்தின் போதே உச்ச நிலையை அடைந்திருந்தன. 1857 ஆம் ஆண்டில் நடந்த சிப்பாய்க் கலகத்தின் போது மக்களைச் சற்றும் ஈவிரக்க மின்றிச்சுட்டுக் கொன்றவன் நீல். அத்தகையவனின் சிலை தமிழக மக்களின் இதயபீடம் போன்ற மவுண்ட்ரோட்டில் இருப்பதா என்று கொதித்தெழுந்தார். அதனை அகற்றும் போராட்டத்தை அறவழியில் முன் நின்று நடத்தினார். அதன் எதிரொலி தமிழகம் முழுவதும் படர்ந்தது. சத்தியாகிரகம் செய்த சுவாமிநாத முதலியார் ஆகியோர் கைது செய்யப்பட்டபோது, தாமே முன் நின்று போராட்டத்தை நடத்திப் பிரபலப்படுத்தினார். தூதுக் குழு ஒன்றை அழைத்துச் சென்று காந்தியடிகளையும் சந்தித்தார். அகில இந்திய நிலையில் காங்கிரஸ் மாநாட்டில் இதற்கெனத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. நீல் சிலை அகற்றவும் பட்டது. இவ்வாறெல்லாம் காமராசரின் பக்தி இறைவனோடு நிற்காமல் நாடு மொழி என்று பரவிச் சென்று இந்திய மக்களின் தன்மான உணர்ச்சியையும், மனிதாபிமானத்தையும் தூண்டி உயர்வுறச் செய்தது.

நாடு விடுதலை பெற்ற பின்னுங் கூட ஜாதி இன ஆதிக்கங் களுக்கெதிராய் ஓர் விடுதலைப்போரை மீண்டும் தொடுத்துப் போராடலானார். ''வாராக்கால் துஞ்சாதவரின் துஞ்சா'' என்று காதலில் கண் விதுப்பழிதலைத் திருக்குறள் விளக்கியது போல்''[1] விடுதலைக்கு முன்னும் பின்னும் இமையாக் கண்களுடன் விளங்கி நாடு காத்த நல்ல தலைவர் காமராசர். அவர் ஏற்ற வீர சபதம் இது—

> ''என் வாழ் நாளிலேயே சமதர்ம சமுதாயத்தை அமைத்தே தீருவேன். அந்த இலட்சியத்தைக் காங்கிரஸ் நிறைவேற்றியே தீரும். இது என் வாழ்வின் இறுதிப் போராக இருக்கும்.''[2]

அந்த வீரசபதத்தைத் தொடர்ந்தாற்போல் நாட்டில் குறிப்பாகத் தமிழ் நாட்டில் பெரும் மாறுதல்கள் நிகழ்ந்தன. அதனை ஒரு சீரமைப்புப் புரட்சி என்றே குறிப்பிடலாம். தமிழகம் தொழில் துறையில் எந்த மாநிலமும் காணாத வளர்ச்சியைக் கண்டது; கல்வித் துறையில் சாதனைகள் நிகழ்ந்தன, சாதாரண ஏழைகளும்

1. குறள்: 1179
2. அருண், உழைப்பே உயர்வு தரும், ப. 30

தமது மக்களை உயர்கல்விவரை இலவசமாகப் படிக்க வைக்க முடிந்தது. அனைத்து மாநிலங்களுக்கும் முன்மாதிரியாகத் தமிழகம் திகழ்ந்தது.

மாதா பிதா குரு தெய்வம் என்பவர் நாற்பெருங் குரவர் என்று எண்ணிச் செலவிட்டு அதோடு நில்லாமல் மனைவி மக்கள் என்று தொடர்ந்தவரே உலகில் பலர். காமராசரோ அந்த நாற்பெருங் குரவர் என்ற அளவிலேயே பக்தி வைராக்கியத்தை நிறுத்திக் கொண்டவர். மனைவி மக்கள் என்று தொடரவில்லை. அவரது வாழ்க்கை முடிவடைந்தபோது பதவிக் காலத்தில் சம்பாதித்ததாக ஒரு வீடு கூடக்கிடையாது. அவர் மறைந்த போது அவர் பேரில் வங்கியில் இருந்த தொகை மிகவும் குறைவானதே.[1] அவர் முதல் மந்திரியாக இருந்த காலத்தில் ஒரு மாநிலத்தின் முதல்வர் என்ற அதிகார மமதையுடன் ஒருவினாடி இருந்ததில்லை. இந்த மாநிலத்தின் கோடானு கோடி சாமானிய மக்களில் தாமும் ஒருவராகவே தம்மை எண்ணி வாழ்ந்தார். பக்தியுண்டாக்கிய அந்தப்பணிவாலேயே சிறந்த மனிதநேயராக அவர் சிறக்க முடிந்தது பாபுஜெகஜீவன்ராம் காமராசரைப் பற்றிக் குறிப்பிடும் போது கூறினார் —

''நாட்டை ஒன்று சேர்க்க எப்போதும் முயற்சித்த நாட்டுப் பற்றுடையவர்''[2] என்று!

நாட்டையே தமது வீடாக்கி வாழ்ந்த காமராசர் பெற்ற தாய்க்கும் கூட உற்ற மகனாய் விளங்கினார் என்று அவரைக் குறித்துச் சொல்ல வழியில்லாமல், நாட்டுத் தொண்டே கதியென்று கிடந்த பெருந்தகையாவார். மகனைக் குறித்து அன்னையார் புலம்பிய புலம்பலைக் கேட்டு உருகாத மனம் இல்லை. அவரது அன்னையார் கூறுகிறார் —

''அவன் நாட்டுக் குழைப்பது சந்தோசந்தான். ஆனாலும் ஊருக்கு ராஜான்னாலும் தாய்க்குப்பிள்ளை என்பது மறுக்கப் பட்டுவிட்டதே. இங்கே வந்தா நிமிஷந்தான் நிற்பான். உள்ளே நுழைகிறபோதே என்னம்மா சௌக்கியமாம்பான். அப்படி கேட்டுகிட்டே உள்ளே வருவானா, வந்த சுவட்டோட

1. ஷண்முகம். J., நம் விடுதலை வீரர்களின் வரலாறுகள் பக். 87, 89
2. சீனிவாசன், கெ. என். காமராஜர் காலத்தில் சென்னை மாநகராட்சி, ப. 62

அப்படியே தெருப்பக்கமாகத் திரும்பி நடந்துட்டே, நான் வர்றேம்மான்னு வெளியேறிடுவான். என் மகனை இந்த நாட்டிற்கு உழைக்க ஒப்படைச்சிட்டேன். சின்னவயசிலேயே இவன் வீடு தங்கினதில்லை. அவனுக்கு ஒரு கலியாணத்தை செஞ்சு வச்சிடலாமுன்னு நானும் எவ்வளவோ பாடுபட்டுப் பார்த்தேன். முடியலே. அதுதான் குறை.''[1]

பக்தியோடு தொடர்பு கொண்டது தான் பாசமும் நட்பும். நட்புக்குச் சிறந்தவர் காமராசர். குருபக்தியும் அவரில் மிகுதி. காமராசரின் அரசியல் குரு சத்தியமூர்த்தி. அவர் சாதாரண குரு வல்ல. சீடனுக்காகத் தியாகம் செய்த குரு. 1940இல் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டித் தலைவர் பதவிக்கு மிகுந்த போட்டி இருந்த போது சத்தியமூர்த்தி விட்டுக் கொடுத்து காமராசரை அதற்கான தேர்தலில் நிற்க வைத்தது மட்டுமல்ல, அவருக்காக உழைத்து வெற்றியும் தேடிந்தந்தார். ஒரு ஆசிரியர் ஒரு மாணவனை நன்கு படிக்க வைத்து அவன் படித்து முடித்ததும் அவனுக்கு ஒரு வேலையும் வாங்கி கொடுத்தால் அந்த ஆசிரியர் எந்த அளவிற்குப் பாராட்டப்பட வேண்டியவர், அதே அளவு பாராட்டுக்குரியவர் சத்தியமூர்த்தி, திருச்சியில் நடந்த ஒரு பொதுக் கூட்டத்தில் வைத்தே காமராசரை முதல் முதலில் மக்களுக்கு அறிமுகம் செய்து வைத்தார். சத்தியமூர்த்தி அப்போது கூறினாராம்:-

''காமராசர் ஆர்வம் மிக்கவர். சிறந்த தொண்டர், திறமை நிறைந்தவர். ஒரு நாளைக்கு இவர் சென்னையில் கோட்டையில் அமரப் போகிறார்.''[2]

இவ்வாறு குருவாகத் திகழ்ந்த சத்தியமூர்த்தியை மிகவும் மதித்தவர் காமராசர். 1954 ஏப்ரல் 13ஆம் நாள் தமிழ் வருடப்பிறப்பன்று சத்தியமூர்த்தியின் தீர்க்க தரிசனம் பலித்தது போல், காமராசர் முதலமைச்சரானார். பதவி ஏற்பு விழா முடிந்ததும் காந்தியடிகளின் சிலைக்கு மாலை அணிந்துவிட்டு காமராசர் நேராகச் சத்தியமூர்த்தி இல்லத்திற்கே முதல் முதலில் சென்றார். சத்தியமூர்த்தி அப்போது இயற்கை எய்தியிருந்தார். அவரது மனைவியைச் சந்தித்து நன்றி தெரிவித்துக் கொண்டாராம் பெருந் தலைவர்.

---

1. சாவி, சிவகாமியின் செல்வன் ப. 80
2. சந்தானலட்சுமி; நாட்டுக்குழைத்த நல்லவர் காமராஜ் ப. 42

நட்புக்கும் சிறந்த மனிதநேயம் காமராசருடையது. தனுஷ்கோடி நாடாரோடு அவர் கொண்டிருந்த நட்பை அனை வருமே சிறப்பித்துப் பேசுகின்றனர். பாரியும் - கபிலரும், அவ்வையும் அதிகனும் போல் அரசியல் கூட்டாளிகளாகத் திகழ்ந்த வர்கள் இவர்கள்-

வைக்கம் போராட்டத்தின் போது சிறைத் தண்டனை பெற்ற தனுஷ்கோடி நாடாரை ஜாமீனில் வெளிக்கொண்டுவர காமராசர் எடுத்துக் கொண்ட முயற்சி நட்பின் இலக்கணமாக அவரது வரலாற்றில் எழுதப்படுகிறது—

"9 ஆம் தேதி நள்ளிரவில் ஜாமீனில் விடுதலையாகும் வரையில் உணவையும் மறந்து தமது ஆருயிர் நண்பனின் விடுதலைக்காகத் தணலிலிட்ட தங்கம் போல் உருகித் தம்மையே அந்த வேள்வியில் அர்ப்பணித்துக்கொண்டு தவமிருந்தாரே எங்கள் தலைவர் இதல்லவோ நட்பின் அடையாளம்."[1] என்று இதைப்பற்றிவியந்து கூறப்படுகிறது "உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே இடுக்கண் களைவதாம் நட்பு"[2] என்று குறள் காட்டும் நட்பிலக்கணத்தை நடப்பித்துக் காட்டியவர் பெருந்தலைவர். பிரம்மசாரிதானே நட்பு, அன்பு, பரிவு, பக்தி என்ற இந்த உறவுகளெல்லாம் எங்கே இருந்து இவர்க்கு வந்தனவோ? அது தான் காமராசரின் தனித் தன்மை. அவரின் மனிதநேயம்.

அக்காலத்தில் மிகவும் பிரபல்யமாக விளங்கிய 'நவசக்தி' என்ற பத்திரிக்கையின் ஆசிரியர் முருகு தனுஷ்கோடி, தலைவர் காமராசரோடு ரத்தமும் சதையும் போல் பழகியவர். காமராசர் தாம் திருமணம் செய்து கொள்வதில்லை என்று முடிவு செய்த போது தனுஷ்கோடி நாடாரும் இதேமுடிவைத் தாமும் ஏற்று திருமணம் செய்து கொள்ளாமலிருந்தார். அவர் விரும்பியதை இவர் விரும்புவார். அவர் வெறுப்பதை இவர் வெறுப்பார். பள்ளி யிலிருந்தே இருவரும் நட்புக்கொண்டவர்கள். அரசியல் வாழ்வில் விருதுப்பட்டி முதற்கொண்டு காமராசரைப் பின்தொடர்ந்தவர் இவர் ஒருவர் மட்டும் தான் என்று கூறவேண்டும். இவர்களுடைய நட்பைப்பற்றிக் கவிஞர் கண்ணதாசன் ஒரு கருத்தை வெளியிட் டுள்ளார்.

---

1. திண்டிவனம் இராமமூர்த்தி (பேட்டி), மறக்க முடியாத பெருநதலைவர், ப.49
2. குறள்: 788

''காந்தியடிகள் சாகவில்லை என்பதைக் காமராசர் நிரூபித்தார். காமராசர் சாகவில்லை என்பதைப் பலர் நிருபித்துக் கொண்டிருக்கின்றனர். அவர்களில் முதன்மையானவர் முருகு தனுஷ்கோடி''[1] என்று,

கடவுள் பற்று கொண்டு விளங்கினார் காமராசர். நாட்டுப் பற்றிலும் அவரை யாரும் விஞ்சமுடியாத நிலை இருந்தது. குரு பக்தி அவருக்கு இருந்தது. நட்புறவிலும் தலைசிறந்து விளங்கினார் அவர். இவ்வாறெல்லாம் அவரது பற்று நிலைகளை வரிசைப்படுத்தினாலும் அனைத்திலும் அவர் முனைப்புடன் நின்றது நாட்டுப்பற்றில்தான் எனல் வேண்டும். பிறந்த மண்ணின் அருமை பெருமைகளை அவர் உணர்ந்தது போல் உணர்ந்தவர் வேறு யாரும் இல்லை என்றே சொல்ல வேண்டும். மனுக்குலத்தின் ஏகப்பிரதிநிதி என்று அவரது தோற்றத்தை வைத்தே அனுமானித்துச் சொன்ன அறிஞர் உண்டு. ''மானுடப் பரிணாம ஆய்வு நிகழ்த்தும் ஒருவர் காமராசரை முதல் முதலில் பார்த்தால் ஆதிமனிதன் தோன்றியது ஆப்பிரிக்காவில் என்பதை மறுத்து மனுக்குலத்தின் தலைவாரிசு தோன்றியதே பாரதத்தில் என்று முடிவு கட்டுவார்'' என்கிறார் ஒரு அறிஞர்.[2] அடிப்படையிலேயே மனுக்குலத்திற்கு மிக அருகில் நின்றவர் காமராசர் எனலாம். தன்னையும் தன்னவரையும் நினையாது பொது மனித குலப்பிரதிநிதியாக நினைத்தவர் அவர். அவரது ஒரு பிறந்தநாள் விழாவில் பாடப்பட்ட கவிதை ஒன்றை இங்கே குறிப்பது பொருத்தமாகும்.

''காங்கிரசை ஏற்றார் ராட்டையிலே நூற்றார்
அன்னை யாரைப் பேணவில்லை அன்புத் தங்கை
பார்க்கவில்லை
என்னுயிரே மக்களென்று இறங்கிவிட்டார் போராட்டத்தில்
இங்கிலீசு ஆட்சி அது இழுபறியிலாச்சி...''[3]

---

1. முருகு தனுஷ்கோடி, பத்திரிகையாளர் நெஞ்சில் காமராசா, முன்னுரை
2. Mathai-M.O., 'Reminiscences of the Nehru age, "An anthropologist seeing Kamaraj for the first time might have had second throughts about the place of origin of man and might have concluded that man originated in India and not in Africa" P.228.
3. தியாகராஜன். இரா, மறக்க முடியாத மாபெருந் தலைவர், ப. 64

நாட்டுப்பற்று மிகுந்த பெருந்தலைவருக்குப் பணப்பற்று சிறிதும் கிடையாது. என்றாலும் ஏழைகளின் கைகளில் பணம் புழங்க வேண்டும் என்று அவர் விரும்பினார். பணம் உள்ளவர்களிட மிருந்து எவ்வளவு முடியுமோ அவ்வளவு அதைப் பெற்று ஏழை களுக்குத் தர வேண்டும் என்று விருப்பம் கொண்டவர். அதிகார நிலையிலான சுற்றுப் பயணங்களின் போது அவர் கடந்து செல்லும் ஊர்கள் பற்றித் திட்டமிடும் போது செல்வந்தர் அல்லது பெரும் புள்ளி ஒருவர் இருந்த ஊரைத் தொட்டுச் செல்வதாக அவரது சுற்றுப் பயணத் திட்டம் அமையவேண்டுமாயின் 1001 ரூபாய் பண முடிப்பு அவரிடமிருந்து கொள்ளப்படும். ரூ 1001வழங்கும் வாய்ப் பில்லை எனில் அவரது சுற்றுப்பாதையில் அந்த ஊரின் பெயர் இடம் பெறாது. சுற்றிச் சென்றுவிடுவார். இவ்வாறெல்லாம் காமராசரின் பக்தி நெறி பற்றி ஆராய்ந்தால் அவரது தெய்வ வழிபாடும் நாட்டைப் போற்றியதும், குருவைச் சிறப்பித்ததும் நட்பு வழி நின்றதுமான செய்திகள் என்று அப்பொருள் விரிந்த தோர் ஆய்வுக்குரியதாகவே விளங்குகிறது. இவையனைத்தும் அவரது மனித நேயத்திற்குத் துணை நின்ற ஆற்றல்களாக விளங் கின. கர்மவீரர் மட்டும் அல்ல காமராசர் ஆன்மீகத்தந்தையு மாவார்.

## 7. தன்னம்பிக்கை:-

காமராசரின் நாற்பதாண்டு அரசியல் வாழ்வை அலசி ஆராய் கின்ற போது அவர் கொண்டிருந்த தன்னம்பிக்கையே படிப்படி யான முன்னேற்றத்திற்குக் காரணமாக விளங்கிற்று என்பது உணரப்படுகிறது. தன்னம்பிக்கையே, தளர்ந்த நேரங்களில் சோர்ந்து விடாமல் அவரை ஒரு சீரான நிலையில் நிறுத்தி அதனால் சிறந்த சாதனைகளைப் புரியவும், மனித நேயங்கொண்ட வராய் அவர் விளங்கவும் உதவியது.

''முன்பு தேக்கமும் உயிரற்ற வாழ்க்கையும் இருந்த இடங்களில் இப்போது ஜீவத் துடிப்பு நடமிடுவதை நாம் பார்க்கிறோம்''[1]

என்றார் ஒரு கூட்டத்தில். இத்தகைய நம்பிக்கை கொடி காத்த குமரன், வாஞ்சிநாதன், பகத்சிங் போன்ற மிகச் சிலரான தற் கொலைப்படை வீரர்களிடம் மட்டுமே காணப்பட்ட அரிய ஆயுதம். ஜெயபேரிகை கொட்டடா...என்று முழங்கிய பாரதியிடமே அந்த நம்பிக்கை இறுதிநிலையில் தளர்ந்து போனதைத்தான் உணர

1. நமசிவாயம்; மக்களாட்சி காமராஜ்; பக். 44-45

முடிந்தது. எவ்வளவு தான் விடுதலை உணர்ச்சியைத் தட்டி எழுப் பினபோதிலும் மக்களின் நீளுறக்கம் கலையவில்லை. இறுதி யில் தளர்ந்து போனார் அவர் என்று தான் கொள்ளவேண்டும். நெஞ்சு பொறுக்குதில்லையே என்று புலம்ப நேர்ந்தது அவருக்கு, இறுதியில்

''நாடு காக்க உனக்கு ஞானம் சிறிதும் உண்டோ
வீடுகாக் கப்போடா-அடிமை
வேலை செய்யப் போடா''

என்று சபித்துவிட்டுப் போனது போல் போனார் பாண்டிச்சேரிக்கு! ''என்று தணியும் இந்த சுதந்திரதாகம்?'' என்று அவர் பாடி யதும் 'ஒருக்காலும் தணியாது' என்ற தளர்ச்சியில் எழுந்த ஒரு புலம்பலே.

எந்த நிலையிலும் கையறுநிலை பாடத்தக்க கையற்றநிலை யைக் காமராசர் தம் அரசியல் வாழ்வில் சந்தித்ததில்லை. 1969 இல் காங்கிரஸ் செல்வாக்கிழக்க, காமராசரும் தோற்றுப்போகி றார். மாற்றுக் கட்சிப் பெருந்தலைவர்களால் கூட இதை ஏற்க முடியவில்லை. ''காமராஜ் போன்ற பெருந்தலைவர்கள் தோற் கும் நிலை ஏற்பட்டிருக்கக் கூடாதென்றே வருந்தினர்.''[1] அப்படிப் பட்ட நிலையிலும் தமது தோல்வியை இந்திய மக்களாட்சியின் வெற்றி என்றே கொண்டார். மக்களாட்சி அப்போது தான் முழுமை பெற்றது என்று மகிழ்ந்தார் வாக்காளர்கள் என் அதிகாரி கள் என்றார். தொடர்ந்து மக்களுக்காக உழைத்தார். ''மக்களுக் காக எதையும் செய்யாமல் இருப்பதையெல்லாம் அப்படியே விட்டுவிடு என்றால் எப்படிச் சாத்தியமாகும்?'' ''அதுமுடியாது''[2] என்று தொடர்ந்து உழைக்கலாயினார்.

பண்டித லால்பகதூர் சாஸ்திரி பிரதமராய் இருந்த போது டில்லியில் தங்கியிருந்த பெருந்தலைவரைக் கொலை செய்ய முயற்சி மேற்கொள்ளப்பட்டது. அதற்காக அவர் அரசியலைத் துறந்து ஓடிவிடவில்லை அல்லது மக்களைக் கோபித்து அறிக்கை விடவில்லை.

பெற்ற சுதந்திரத்தைப் பேணிக்காப்பதற்குத் தாம் கொண் டிருந்தது போன்ற நம்பிக்கை மக்களுக்கும் வரவேண்டும் என்று விரும்பினார். ''சுதந்திரத்தைப் பாதுகாப்பதற்குத் தன்னம்பிக்கை

1. சண்முகம். இரா., கர்மவீரர் காமராஜ், ப. 49
2. நமசிவாயம். மு. மக்களாட்சி காமராஜ், ப. 64

தலைவராக இருந்து கட்சி வளர்ச்சிக்காகப் பாடுபட்டார். இவ்வளவு நீண்ட காலம் இப்பதவியை வகித்தவர்கள் வேறுயாரும் இல்லை எனலாம். 1952இல் பொதுத் தேர்தலில் காங்கிரஸ் கட்சிக்குப் பெருமளவு வெற்றி கிடைக்காததற்குத் தாமே தார் மீகப் பொறுப்பேற்று தலைவர் பதவியை அவர் இராஜிநாமா செய்தார். திரு. சத்திய மூர்த்தி காமராசருக்கு ஒரு நல்ல குருவாகத் திகழ்ந்துவந்தார். தனுஷ்கோடி நாடார் என்பார் உற்ற நண்பராகத் திகழ்ந்தார். மூதறிஞர் இராஜாஜியோ அவருடன் கருத்து வேறுபாடு கொண்டு ஒரு அரசியல் எதிரியாகவே விளங்கினார்.

### விடுதலைக்குப்பின்

போராடிய ஒருவன் வெற்றி பெற்றபின், அவ்வெற்றிக் கனியைப் புசித்து மகிழ்வதிலேயே நாட்டம் செலுத்துவான். பெருந்தலைவரோ இதிலும் மாறுபட்டே விளங்கினார். விடுதலைக்குப்பின் நாட்டில் எழுந்த பெரிய சிக்கல்களைப் பற்றிச் சிந்திப்பதிலும், அடிமைத்தனத்தால் சீர்கெட்டுக் கிடந்த நாட்டை வளப்படுத்துவதிலுமே நாட்டம் கொண்டவராய்த் திகழ்ந்தார். பாகிஸ்தான் பிரிவினை, காந்தியடிகளின் மரணம்; ஆகிய நிகழ்ச்சிகளால் உருவான பெரும் விளைவுகளைக் குறித்து நேருஜி போன்றவர்கள் கவலை மிகக் கொண்டிருக்க, காமராசர் அவர்களோடு வேண்டிய அளவு ஒத்துழைத்து உதவினார். அகில இந்திய நிலையில் வேண்டப்பட்ட ஒருவராக அவர் அப்பொழுதே திகழ்ந்தாலும், தமிழகத்தின் மீது அவர்க்கிருந்த பற்றும் பேரன்பும் முழுவதுமாக அவரை அங்கே செல்ல விட்டுவிட வில்லை. மூதறிஞர் இராஜாஜி போன்றவர்கள் தொடர்ந்த அரசியல் எதிரிகளாகத் திகழ்ந்த நிலையில், தமிழக அளவில் கட்சி நிலையில் தமது இடத்தை உறுதி செய்து கொள்ளவேண்டிய நிர்பந்தமும் காமராசருக்கு உண்டாயிற்று. அதனால் 1954இல் மூதறிஞர் இராஜாஜி முதல்வர் பதவியை இராஜிநாமா செய்ததும்; காமராசர் முதல்வர் பொறுப்பை ஏற்றுக் கொண்டார். அவர் பதவி ஏற்ற நாள் 13-4-1954 ஆகும். தமிழ் வருடப்பிறப்பன்று அவர் பதவி ஏற்றது நல்ல தமிழ்யுகம் ஒன்று தொடங்கினமைக்கு அடையாளம் போல் இருந்தது.

கட்சி சார்பைப் பொறுத்த மட்டில், 1955இல் ஆவடியில் நடந்த காங்கிரசின் 58 ஆவது மாநாட்டை அவர் ஏற்பாடுகள் செய்து நடத்தித்தந்தது வரலாற்றில் இடம் பெறுகிறது. இக்

அஞ்சாத பொருளில்லை அவனியிலே' என்று பாரதி பாடிய பாட்டு விடுதலைக்குப் பின்பும் மக்களுக்குப் பொருந்துவதாகவே நின்றிருக்கும். குறிப்பாக விலைவாசி ஏற்றத்துக்கு மக்கள் பாடும் பாட்டாக அமைந்திருக்கும்.

ஆண்டுகள் கணக்கில் கட்சிக்குப் பாடுபட்டு உழைத்த தொண்டர்கள் அவர்தம் உழைப்பிற்கு ஊதியம் போல ஒரு சிறு பதவியோ, அல்லது உதவியோ கிடைக்காமல் போனால் தளர்ந்து போவது இயல்பு. இதனால் தொண்டர்கள் நடுவணும் தன்னம்பிக்கையை அவ்வப்போது ஊக்கவுரை வழங்கி வளர்ப்பது கட்சித்தலைவர் ஒருவரின் கடமையாகிறது. தொண்டர்களிடம் தெளிவாகப் பேசி அவர்களை ஊக்கப்படுத்துவதிலும் காமராசர் கைதேர்ந்தவராய் இருந்தார்.

"என்னால் காத்திருக்க முடியாது. இப்போதே பதவியில் உட்கார வேண்டும் என்றால் முடியுமா? நெல்லை இன்றைக்கு விதைத்து விட்டு நாளையே அறுவடை செய்ய வேண்டும் என்று அரிவாளை எடுத்துக் கொண்டு போய் நின்றால் நடக்குமோ?"

இவ்வாறெல்லாம் மிக எளிய நடையில் பேசி அவர் தமது கட்சித் தொண்டர்க்கு நம்பிக்கையூட்டினார்.

முதியோரைத் தேற்றினார்—

"வயோதிக காலத்தில் வேலை செய்ய இயலாமல் போய் விடும். நம் கதி என்னவாகும் என்று பயம் உண்டாகிறது. அவர்களுடைய இந்த அச்சத்தைப் போக்க நாம் முயற்சிக்க வேண்டும்" என்றார்.[1]

இளைஞருக்கு ஊக்கம் வரப் பேசினார்:-

"நேற்று இன்று நாளை முக்காலத்தையும் உணர வேண்டும். நாம் உணர்ந்தால் போதாது. வாலிப வயதினருக்கு உணர்த்த வேண்டும்" என்றார்.

தமிழ்ப் பற்றாளர்க்கும் தன்னம்பிக்கை ஊட்டினார்—

"பல அறிஞர்கள் அத்தனை மொழிகளிலுமுள்ள நூல்களைத் தமிழில் மொழி பெயர்த்து வருகின்றனர். அது மட்டும் போதாது தமிழிலேயே சிந்தித்து நூல்களை எழுத வேண்டும். அத்தகுதி தமிழுக்கு இல்லையோ?" என்று கேட்டார்.[2]

1. நமசிவாயம் மூ., மக்களாட்சி காமராஜ். ப. 352.
2. மேற்படி ப. 177.

மக்களில் எல்லாத் தரப்பினர்க்கும் தன்னம்பிக்கையை கல்வியால் கொண்டு வர இயலும் என்று அவர் பொதுவில் நம்பினார்.

> "படித்து விட்டால் உலகம் தெரிகிறது. நீ என்ன உயர்வு நான் என்ன மட்டமா? என்று கேட்கும் தைரியம் ஏழைக்கும் வந்து விடுமல்லவா?" [1]

இதை வைத்து அவர் கல்விக்குழைத்ததை நாடறியும். 'கர்மவீரர்' என்ற தலைப்பில் கவிஞர் அமர சிகாமணி புனைந்த கவிதை ஒன்றை இங்கே வைப்பது பொருத்தமாகும்—

> "காமராசன் படிக்க வச்சான்
> கண்ணிரண்டும் தொறந்து வச்சான்
> மையிட்டு வீட்டுக்குள்ளே
> கை விளக்கை ஏற்றி வச்சான்"

தன்னம்பிக்கையூட்டும் ஆற்றல் காமராசரின் மனித நேயத்தில் மிகுந்து காணப்பட்ட ஒன்று. தன்னருகிலிருக்கிறவரைத் தளர விடாமல் தாங்குவதில் மன்னன் அவர். ஒரு நிகழ்ச்சி—

நாகப்பட்டினம் ஒய். எம். சி ஏயின் சார்பில் பாரதியார் படத் திறப்பு விழா ஒன்று நடந்தது. அனந்தராமன் என்பார் பாரதியின் பாடல்களைப் பாடப் பணிக்கப்பட்டார். 'பாரததேசமென்று பெயர் சொல்லுவார்', என்று அனந்தராமன் பாடிவரும் போது அவருக்கு அப்பாடலின் அடுத்த அடி திடீரென்று மறந்து விட்டது. சட்டென்று நினைவிற்கு வரவில்லை. மேடையில் நின்று தவிக்கலானார். இதே வேளை "உண்மைகள் சொல்வோம் பல வன்மைகள் செய்வோம்" என்று பாடலின் தொடர்ச்சி மேடையிலேயே ஒலித்தது. பாடிக் கொடுத்தவர் வேறு யாருமில்லை. பெருந்தலைவர் காமராசரே![2] சூடிக் கொடுத்த சுடர்க்கொடி என்பர் பக்தை ஆண்டாளை. 'பாடிக் கொடுத்த பேராளர்' என்றாலென்ன நாடாண்ட இந்த நாயகரை!

தாம் எதிலும் தளராது நின்றதோடு தம்மைச் சார்ந்தோரையும் தளரவிடாது காத்த அருந்தலைவர் அவர். காமராசரின் மிகப் பெரிய சாதனை எது? என்று மேரி அனந்தனிடம்

---

1. நமசிவாயம், மு., மக்களாட்சி காமராஜ், ப. 195
2. இராமலிங்கம், கே. கே., உயர்ந்த மனிதர்கள் உன்னத நிகழ்ச்சிகள்; பக். 96-97

கேட்டபோது அவர் ஒரே வரியில் கூறினார்— "நேரு மறைந்த பின் மேருவாக நின்றது."[1] என்று!

மனிதராகப் பிறந்தவருள்ளும் சிலரிடம் பண்புகள் குவிந்து கிடப்பதொன்றும் வியப்பல்ல. அவற்றுள் மனுக்குலத்திற்குப் பயனாய பண்புகளையே மனிதநேயப் பண்புகளாக நாம் ஏற்க இயலும். காமராசர் மேருவாக நின்றதொன்றும் அவருக்காக அன்று. கட்சி வளர்ந்தது. அரசியல் தூய்மையுற்றது. மக்களுக்கு நிலையான ஆட்சி ஒன்று கிடைத்திருந்தது.

## 8. பெருமிதம்

இன்றைய இளைய தலைமுறையினர் விடுதலைப் போராட்டத்தில் நேரடியாகப் பங்கு கொள்ளும் வாய்ப்பினைப் பெற்றிருக்கவில்லை எனினும் பண்பட்டதோர் தேசியப் பராம்பரியத்திற்கு வளமானதோர் வரலாற்றிற்குச் சொந்தக்காரர் ஆவர். இந்த உணர்வு இதயப்பூர்வமாக இலட்சிய அடிப்படையிலே வேரூன்றி உறுதிப்பட்டுச் செயலாக மலர்ந்து சாதனையைக் குவிக்க வேண்டுமென்றால் பெருமைமிக்க அப்பாரம்பரியத்தை இன்றைய தலைமுறையினருக்கும் படம்பிடித்துக் காட்டியாக வேண்டும்.[2] பெருமை மிக்கது நமது மரபும். எல்லோரும் இந்நாட்டு மன்னர் என்ற இம்மரபுப் பெருமிதத்தைக், காந்தியடிகளிடமிருந்துக் காங்கிரசார் கற்றனர். கத்தியின்றியும் இரத்தம் சிந்தாமலும் யுத்தம் ஒன்று நடத்தலாம் என்று சாத்வீகத்தை உலகுக்கு அறைகூவிச் சொன்ன பெருமிதம் இது. பஞ்சசீலம் என்ற பெருமிதம். கடையனுக்கும் வாக்குரிமை என்ற பெருமிதம்.

முப்பது கோடி முகமுடையாள் உயிர்
மொய்ம்புற ஒன்றுடையாள் — இவள்,
செப்புமொழி பதினெட்டுடையாள் எனிற்
சிந்தனை ஒன்றுடையாள் -

என்று பாரதி பாடிய ஒருமைப்பாட்டின் பெருமிதம்.

" மன்னவன் நானே மந்திரி என் சொல்
மற்றவர் யாருக்குச் சுற்றமிது
என்னுடைய நாடு என்னுடைய வீடு
அன்னியர் இங்கே உள்ளவர் யாவரும்

1. குமரி அனந்தனின் கேள்விபதில்கள் ப. 87.
2. திரவியம். கா., தேசியம் வளர்தத தமிழ்; முன்னுரை.

அண்டிப் பிழைந்திட வந்தவரே
என்னுடைய ஏவல் சொன்னதைச் செய்தோன்
என்னை அடக்குதல் என்று முண்டோ?''[1]

என்ற உரிமைப் பெருமிதம்.

'' வானம் பொழியுது பூமி விளையுது
மன்னவன் கும்பினிக் கேன் கொடுப்பேன்
சீனிச் சம்பா நெல்
என்னைப் போல் வெள்ளாண்மை இட்டானோ துரை
இங்கிலிசு வெள்ளைக் காரனுந்தான் ''[2]

என்று விடுதலைக் குரல் கொடுத்த பெருமிதம்.

இத்தகைய பெருமிதத்தில் குளித்தெழுந்து செம்மாந்து நின்று நாட்டுக் குழைத்தலும் நல்லது செய்தலுமான மனித நேயத்தில் நின்றவர் காமராசர். சிதம்பரம்பிள்ளை போன்றவர் களின் சுதேசி இயக்கத்தையும் பகிரத முயற்சியையும் பற்றி அடிக்கடி தமது பேச்சில் குறிப்பிடுவாராம் காமராசர். தாய் பூமியை வணங்குகிறேன் என்ற பொருளுடைய ' வந்தே மாதரம் ' என்ற தாரக மந்திரம் அவரது உதடுகளில் உச்சரிக்கப்படும்போதே அந்தப் பெருமிதம் அதில் தொனித்தது. விட்டால் வராது என்ற தாழ்மையுணர்வு எப்போதுமே அவருக்கு இருந்ததில்லை. பதவி களைக்கூட தூசு என்று மதித்த அரியதொரு பெருமிதம் அவரு டைய பெருமிதம். திரளான மக்களின் ஆதரவைப் பெற்ற பெரு மிதம் அவருக்கிருந்தது. ''மூன்று தேர்தல்களை ஜனநாயக முறை யில் நடத்தி விட்டோம் ''[3] என்று மகிழ்ந்தார் அவர். ஆரம்ப காலத்தில் அவருக்கிருந்த செல்வாக்கும் அளப்பரியது. சிறைக்குள் இருந்தபடியே தேர்தல் ஒன்றினை வென்று காட்டியவர் தானே?[4] இந்தப் பெருமிதத்தால்தான் பிற்காலத்தில் சிக்கல் மிகுந்த தேர்தல் ஒன்றை சந்தித்த போதும்- ''படுத்துக் கொண்டே ஜெயிப்பேன்''- என்றார். அது அவர் கொண்ட பெருமிதத்தால் வந்த வஞ்சினம் என்றே கூற வேண்டும். தேர்தலில் முதன் முறை யாகத் தோல்வியுற்ற போதும் ''ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும் புதுவது அன்று, இவ்வுலகின் இயற்கை''[5] என்று புறநானூற்றார் தளராதிருந்தது போல் தளராதிருந்தார்.

1. நாமக்கல் கவிஞர்
2. திரவியம். கா., தேசியம் வளர்த்த தமிழ், ப. 79
3. நமசிவாயம். மு., மக்களாட்சி காமராஜ்; ப. 127
4. முற்பக்கம் : 17, 90
5. புறநானூறு : 76

போருக்குப் புறப்படும் புறநானூற்றுத் தலைவர்கள் வஞ்சினம் கூறும் வழக்கம் இருந்தது. வஞ்சினம் கூறலாவது போருக்குப் புறப்படும் முன் பகை மன்னனை நோக்கி விடும் சவால். அக்காலத்தில் அத்தகைய சவால்கள் மெய்யான உணர்ச்சியை உட்கொண்டு அமைந்திருந்தன. ''யான் போர் மேல் சென்று பகைவரை வென்று அவர் தம் முரசு முதல் கைக்கொண்டு மீளாவிட்டால், எங்கள் அரசன் அறம் அற்றவன், என்று குடிமக்கள் அழுது புலம்புவார்களாக. மாங்குடி மருதனைத் தலைவராகக் கொண்ட புலவர் குழுவினர் என்னைப்பாடாது விடுவார்களாக, என்று பாண்டியன் நெடுஞ்செழியன் வஞ்சினம் கூறினான்—

இவ்வாறே கண்ணகிக்குச் சிலை எடுக்க நினைத்துக் கல் கொள்ள வடமலை சென்ற சேர மன்னனும், அக்காரியத்தை வெற்றியோடு முடித்து நான் திரும்பாவிட்டால், நான் பகைவரைக் கலங்கச் செய்யாது குடிமக்களையே கலங்கச் செய்த கொடுங்கோலனாவேனாக என்று வஞ்சினம் கூறிச்சென்றான் என்று சிலப்பதிகாரம் கூறும் [1] —

தற்காலங்களில் தேர்தல் பிரச்சாரக் கூட்டங்களில் விடப்படும் கட்சியினரின் சவால்கள் பழங்காலத்து விளங்கிய இத்தகைய வஞ்சினங்களைப் போன்றவையே. இவ்வகையில் பார்த்தால் இப்போரில் தோற்பேனாகில் இனி போர் செய்யேன், என்பது போல் காமராசரின் பெருமிதத்திற்குச் சிறந்த எடுத்துக்காட்டாக ஒரு நிகழ்ச்சியைக் குறிப்பிடலாம் -

''மதிய உணவிற்காகத் தெருத் தெருவாகப் பிச்சை எடுக்கவும் தயார்'' என்று தலைவர் கூறியதை, 'காமராசர் இராஜிநாமா செய்யப் போகிறார்' என்று திரிந்த செய்தியாகப் பத்திரிகைகள் சில வெளியிட்டன. அந்த நிருபர்களை மறுநாள் நிகழ்ச்சிக்குப் புறப்படும்போது நேரில் கண்ட தலைவர் அவர்களிடம் சிரித்தபடியே - 'ஏன் நான் முதலமைச்சராக இருப்பதில் உங்களுக்கென்ன கஷ்டம். விட்டுவிட்டுப் போய்விடவேண்டும் என்பதில் ஏன் இவ்வளவு ஆசை' என்று கேட்டார். அவ்வாறு கூறியவண்ணமே காரில் ஏறியவர், நிருபர்களை எல்லாம் பார்த்தபடியே நண்பர்களிடம் - யாரையும் விட்டுவிடாமல் ஏற்றிக் கொண்டு வாருங்கள் என்றார்.[2] எந்த நிலையிலும் யாருக்கும் அஞ்சாத பெருமிதம் அவருக்கிருந்தமைக்கு இது ஓர் எடுத்துக்காட்டு.

---

1. சிலப்பதிகாரம் 26 : 13-18
2. சுந்தரவடிவேலு. நெ.து., கல்வி வள்ளல் காமராசர்; ப.65.

புறநானூற்றுத் தலைவர்கள் பகைவர்க்கு மார் காட்டிப் பெற்ற காயங்களை 'விழுப்புண்' என்று கொண்டனர். அவற்றைப் புகழ்ந்தனர் புலவர். காமராசர் ஒரு தடவை அடைந்த தோல்வியும் விழுப்புண் சிறப்பையே அவருக்கு வழங்கிற்று. இதனால் பெருமிதத்துடனேயே ஏற்றார் அத்தோல்வியை. அத்தோல்வி பின்னர் ஒரு மகத்தான வெற்றிக்கு அடிப்படையாக அமைந்தது. அத்தோல்வியினால், வரும் தேர்தல் போருக்குத் தம்மை ஆயத்தப் படுத்தினார் என்பது ஒன்று. அவரது வஞ்சினமும் முன்பைவிட உறுதியாக இருந்தது.

> ''எனது வாழ்நாளிலேயே சமதர்ம சமுதாயத்தை அமைத்தே தீருவேன், அந்த இலட்சியத்தைக் காங்கிரஸ் நிறைவேற்றியே தீரும்''[1]

காமராசர் விடுத்த இந்த சவால் ஒரு வஞ்சினமே. புறநானூற்றுத் தலைவர்கள் கூறின வஞ்சினத்தின் வேகம் இதில் சிறிதும் குறைவு பட்டுக் காணப்படவில்லை.

**நிறைவுரை**

எளிமை கருணை சாதுர்யம் நிதானம் நடுவு நிலைமை பக்தி தன்னம்பிக்கை பெருமிதம் என்று எட்டுப் பண்புகளைக் காமராசரின் மனித நேயத்திற்கு உறுதுணையாக நின்றவைகளாகக் காணமுடிந்தது. திசைகள் எட்டு, செல்வங்கள் எட்டு, மெய்ப்பாடுகள் எட்டு, மனித உடலையும் எண்சாண் உடம்பு என்றே குறிப்பர். உடற் குறைகளாகிய எச்சங்களையும் புறநானூறு எட்டு என்றே குறித்துள்ளது -

> ''சிறப்பு இல் சிதடும் உறுப்பு இல் பிண்டமும்
> கூனும் குறளும் ஊமும் செவிடும்
> மாவும் மருளும் உளப்பட வாழ்நர்க்கு
> எண்பேர் எச்சம் என்று இவை...''[2]

சான்றாண்மை என்பதும் எட்டு மூலத்தன்மைகளையுடையது :-

> ''குடிபுறத்துப் பண்சூடி விழுப்பேரொழுக்கம்
> பூண்டு நாளும் வாய்மைவாய் மடுத்து
> மாந்தித் தூய்மையின் காதலின் பத்து ஏறி
> நடுவுநிலை நெடுநர் வைகி வைகலும்

---

1. அருண், உழைப்பே உயர்வு தரும், ப.30.
2. புறநானூறு 28 : 4.

அழுக்காறின்மை அவாவின்மை எனும்
இரு பெருந்திறனும் ஒரு தாவிட்டு நோவா நாவின் மேலோன்''[1]

காமராசரின் மனித நேயத்திற்கும் எட்டுப் பண்புகளைத் தொடர்பு படுத்தி விரித்துப் பேசியிருப்பது இதனால் பொருத்த முடையதே ஆகும். மெய்ப்பாடுகள் எட்டு ஆயினும் அவை பதினாறாகவும் பின்னர் முப்பத்திரண்டாகவும் ஆவதை உரையாசிரியர் குறிப்பர். அதுபோலவே காமராசரின் மனித நேயக் கூறுபாடுகள் எட்டு என்று கொண்டாலும், பதினாறாகவும் முப்பத்திரண்டாகவும் அவரைக் காண்போரின் அரசியல் மற்றும் மனிதவியல் அறிவாழத்திற்கேற்ப விரித்துக் காணவும் முடியும். ஒரு தனி மனிதத்துவத்தில் தொடங்கி ஒரு சகாப்தமாய்ப் பரிணமித்தது காமராசரின் மனிதநேயம்.

காப்பியங்களில் தலையாய காப்பியமான சீவக சிந்தாமணியின் காப்பிய நாயகன் சீவகன் எட்டு மனைவியரை மணந்து கொண்டதாக அவ்விலக்கியம் கூறும். தத்துவத்தின் அடிப்படையில் இவ்வெட்டுத் துணைவியரும் எட்டு மெய்ப்பாடுகளின் பிரதிநிதிகள் என்று கொண்டு சிந்திக்க வேண்டும். காமராசரின் மனிதநேயத்தின் இந்த எட்டு உறுப்புகளும் இதனால் சீவகனை நினைவு படுத்தக்கூடும். சீவகனை உலக ஞானியான சாலமனுக்கு ஒப்பிடுவது வழக்கம். காமராசரையும் இவைகளையெல்லாம் வைத்து தற்காலச் சீவகன் என்றோ தமிழ் நாட்டின் சாலமன் என்றோ குறிப்பிடமுடியும்.

காமராசரின் மனித நேயத்தின் மேற்சொன்ன எட்டுறுப்புகளும் மனித நேயத்தில் நின்று விளைத்த விளைவுகளையும் நாம் சிந்தித்தாகவேண்டும்.

**காமராசரின் மனித நேயத்தால் விளைந்த விளைவுகள்**

காமராசரின் மனித நேயத்தால் விளைந்த விளைவுகளை நாம் இரு நிலைகளில் அடக்கிப் பேசலாம். அவையாவன :

(1) நிரந்தர விளைவுகள் (2) தற்காலிக விளைவுகள் என்பன

சத்தியாகிரகங்கள், உண்ணாவிரதங்கள், சிறையிருப்புகள் என்று தமது உடலை வருத்தி மக்களின் உரிமைகளை அவர் பெற்றுத்தந்தது போன்றவை நிரந்தரமான விளைவுகளில் அமையும் விளைவுகளாகலாம். காங்கிரஸ் மகா சபை தேச

1. ஆசிரிய மாலை - புறத்திரட்டு,

மக்களுக்காகப் பாடுபட்டு விடுதலை பெற்றுத் தந்த பெருமையினையுடையது. இவ்வாறு ஒரு வரியில் கூறுவது இளையதலைமுறையினர் மீது எவ்விதமான ஒரு தாக்கத்தையும் உண்டு பண்ணாத நிலையை இன்று நாம் காணுகிறோம். இதற்கு முதற் காரணம் மாறுபட்டதொரு சூழ்நிலையில் இது கூறப்படுகிறதென்ற ஒன்றே. ஆண்டான் அடிமை என்ற நிலை இன்று இல்லை. மேலோன் என்று ஒருவன் கீழோன் என்ற மற்றொருவனுக்கு உண்ண நீர்வழங்கும்போதும் கொட்டாங் குச்சியில் அந்நீரை வாங்கி அருந்தும் கொடுமையான தீண்டாமை போன்ற அறியாத்தனங்கள் இன்று இல்லை. அன்றோ இக் காட்சிகள் மிகச் சாதாரணமானவை. இதனாலேயே தன்னுரிமை, தன்மானம் எனும்போது தனித்துடிப்பு இருந்தது. வைக்கம் போராட்டத்தை இங்கே ஒரு சான்றிற்காக எடுத்துக் காட்டலாம்—

திருவனந்தபுரத்திலுள்ளது வைக்கம் எனும் இடம். அக்கிராமத்தின் பொதுச் சாலைகளில் தீண்டாதார் என்று சிலர் மட்டும் நடமாட அனுமதிக்கப்படவில்லை. அப்போதிருந்த அரசும் இக்கட்டுப்பாட்டை அனுமதித்தது. காங்கிரஸ்காரர்கள் இவ்வழக்கத்தை மாற்ற ஒரு பெரும் போராட்டத்தை நடத்தினர். தீண்டாதார் எனப்பட்டாரோடு காங்கிரஸ் தொண்டர்களும் அச்சாலையில் கட்டுப்பாட்டை மீறி நடப்பதென்பது போராட்டத்தின் திட்டமாகவிருந்தது. அரசு போராட்டத்திற்கு எதிர் நின்று வைதீகர்களுக்கு உதவியது. சாலைகளின் முன் அடைப்புகள் அடைத்து காவல்துறை ஏற்பாடு கள் செய்யப்பட்டன. அடைப்புகளுக்கு முன்னால் வழிபாடு செய்யவேண்டுமென்று தொண்டர்களுக்குக் காந்தியடிகள் கட்டளையிட்டார். இறுதியில் அரசு பணிந்தது. வைதீகர்கள் தோல்வியடைந்தனர். 1926இல் சமஸ்தானத்திலுள்ள எல்லா கோவில்களிலும் தீண்டாதார் உட்பட எல்லா இந்துக்களும் தொழும் வகையில் திறந்துவிடப்பட்டன. இதுவே வரலாற்றுச் சிறப்புள்ள வைக்கம் போராட்டத்தின் வரலாறு. காமராசர் வைக்கம் போராட்டத்தில் தீவிரமாக ஈடுபட்டவர்.[1]

நலவாழ்வும் ஒற்றுமையும் நல்லதோர் சமுதாயத்தின் அடையாளங்கள். ‘வடக்கு வாழ்கிறது தெற்கு தேய்கிறது’

---

1. சோமயாஜுலு. ந., நெல்லை மாவட்ட சுதந்திரப் போராட்ட வரலாறு; ப. 84.

என்று குரல் எழுப்பப்பட்ட போதெல்லாம், ஒருமைப்பாட்டிற்கு எங்கே குந்தகம் விளையுமோ என்று வெகுவாக அஞ்சினார் காமராசர். ஒரே இடத்தில் இருந்துகொண்டு பிற இடங்களைப் பற்றி அறியாதவர்க்கு ஒருமைப்பாடு என்று பாடம் ஓதினால் அது பயனளிப்பதில்லை. காமராசர் தமது அனுபவத்தைக்கூறி ஒருமைப்பாட்டிற்காகவும் உழைத்தார். அவர் கூறினார்—

"நான் வட இந்தியாவையும் பார்த்திருக்கிறேன், தமிழ் நாட்டிலோ மூலை முடுக்குகளிலுள்ள கிராமங்களையும் கண்டிருக்கிறேன். இந்தியா ஒரு தேசம்தான். ஒரு சக்தி தான்"[1]

காமராசர் இவ்வாறு ஒருமைப்பாட்டிற்குழைத்தது அவரது மனிதநேயத்தால் வந்த நிரந்தரமான விளைவு எனலாம். சீனப் போர் முதலிய போர்க் காலங்களில் ஓரினமாக நின்றபோது அந்த ஒருமைப்பாட்டின் விளைவுகள் மிக வெளிப்படையாகத் தெரிந்தன. அறிவு வறுமைக்கு முடிவு காணப்பட்டது காமராசர் காலத்தில். காமராசரின் மனித நேயத்தால் விளைந்த முதல் தரமான மேலும் நிரந்தரமான விளைவு என்று இதனைக் குறிப்பிடலாம். அரசு வருமானத்தில் பெரும் பகுதி கல்விக்குச் செலவிடப்பட்டது. ஆரம்பக் கல்வி முறையைச் சிறிது சிறிதாக ஆதாரக் கல்வியாக மாற்றும் திட்டம் செயல்படுத்தப்பட்டது. கல்வியில் பெரும் புரட்சி அவரை ஒரு கல்வி வள்ளல் என்று மக்கள் பாராட்டும் நிலைக்குத் தீவிரமானது. கட்சி மட்டத்திலும் அரசு நிலையிலும் ஊழல் இல்லாத நிலை அவர் காலத்தில் நிலவியது. தலைவன் எவ்வழி தொண்டரும் அவ்வழி என்றவாறு அவர் கைச்சுத்தமுள்ளவராய்த் திகழ்ந்தமையால் சாத்தியப்பட்டது.

காமராசரின் மனித நேயத்தால் விளைந்த தற்காலிக விளைவு களையோ எண்ணி முடியாது. சுடுகாட்டிற்குக்கூட நல்ல பாதை அமைத்துக் கொடுத்தவர். அவ்வப்போது அவரிடம் நன்மைகள் வேண்டிப் பெற்றவர்கள் பலர்.

இத்தகையப் பெருந்தகை 1975ஆம் ஆண்டு இவ்வுலகை நீத்தார். நாட்டின் ஒரு உத்தமமான தலைவர் எப்படி இருக்கவேண்டும் என்பதை இந்த நாட்டிற்கு மட்டுமல்ல உலகுக்கே காட்டிவிட்டுச் சென்றார் அவர். நாட்டு மக்களைப் பிரிந்து சென்றபோதும் காமராசர் மறக்க முடியாத ஒரு அடையாளத்தை விட்டே சென்றார். நாட்டுத் தந்தை காந்தியடிகளின் அந்தராத்துமா

---

1. சோமயாஜுலு. ந., நெல்லை மாவட்ட சுதந்திரப் போராட்ட வரலாறு; ப. 200.

வாகத் திகழ்ந்த அவர், காந்தியடிகள் இந்த உலகில் அவதரித்த திங்களையும் நாளையும்கூட வாழ்வின் இறுதிக்கென்று தேர்ந்து கொண்டது வியப்புக்குரிய ஒன்றே. தமது உயிரோட்டத்தையும் தமது கட்டுக்குள் வைத்த இத்தகைய மாமேதைகள் ஆயிரம் ஆண்டுகளுக்கு ஒருவரே இம்மண்ணுலகில் அவதரிப்பர். அத்தகைய மேதைகளின் வரிசையில் சேர்ந்துவிட்டார் விருதுப் பட்டி கு. காமராசர். 2-10-1975 அன்று அவர் இறந்தபோது கடலெனத் திரண்ட மக்களின் கண்ணீர்க் கண்கள் அவரது மனிதநேயம் எத்துணை உயர்ந்ததாகத் திகழ்ந்தது என்பதை நிரூபித்தன.

அவருடைய மறைவை, பேரிழப்பை, மெய்யான உணர்வோடு நினைத்து அஞ்சலி செலுத்தினர் பல்வேறு தலைவர்கள். ஒருவர் காமராசரின் இழப்பு மிகப் பெரிதாக உணரப்படும் என்றார். மற்றொருவர் இவரையொத்த தலைவரை இவ்வுலகில் காண்பது இனி அரிது என்றார். ஆனாலும் அவருடைய உதவியாளர் என்ற நிலையில் காலம் முழுவதும் உழைத்த வைரவனின் புலம்பலே, 'ஆசு ஆகு எந்தையாண்டு உளன் கொல்லோ' என்று அதியமானுக்கு அவ்வையார் பாடிய கையறு நிலை போன்ற உணர்ச்சிகளையெல்லாம் கொட்டியதோர் புலம்பலாகத் திகழ்ந்தது.

வைரவன் கூறினார்—

> "அவர் இல்லாத இந்த வீடு விக்ரகம் இல்லாத கோவிலாகி விட்டாலும் இந்த வீட்டில் எந்த மூலையில் சென்றாலும் அவரது நினைவு பளிச்சிடுகிறது"[1]

வைரவன் போன்ற தொண்டர்களுக்குக் காமராசர் ஒரு தெய்வமே ஆகி நின்றார். அவர் வாழ்ந்த இடம் இதனால் கோவிலாகத் தென்பட்டது.

அன்றொரு காலத்தில் இயற்கை எய்திய புறநானூற்றுத் தலைவர்களுக் கெல்லாம் பீடும் பெயரும் எழுதி நடுகற்களை நினைவுச் சின்னங்களாக நிறுத்தினர்.

> "நனந்தலையுலகம் அரந்தை தூங்க
> கேடு இல் நல் இசை சூடி
> நடுகல் ஆயினன் புரவலன்"[2]

---

1. தியாகராஜன். இரா.; மறக்க முடியாத மாபெருந் தலைவர்; ப. 31.
2. புறநானூறு 21 : 11-13.

அதற்கு இணையாக இன்று காமராசருக்கு அவர் நினைவாக நாடெங்கிலும் அவரது உருவச் சிலைகள் ஆங்காங்கு செம்மாந்து நிற்பதைக் காணுகிறோம். மக்களின் உள்ளங்களில் அவர் நீங்காது இடம் பெற்றிருக்கிறார் என்பதே அவரது மனிதநேயம் பெற்ற மாபெரும் வெற்றி எனலாம்.

சமீபத்தில்கூட 4-7-90 அன்று விருதுநகரில் தமிழக முதல்வர் கலைஞர் பெருந்தலைவரின் ஒரே தங்கை நாகம்மாள் அவர்களின் பேத்தியின் திருமணத்தை முன் நின்று மிகச் சிறப்பாக நடத்தி வைத்துள்ளார். நிகழ்ச்சியில் அவர் பேசும்போது -

''அகில இந்திய அளவில் புகழ் பெற்ற தமிழக மக்களின் உள்ளங்களில் நீங்காது இடம் பெற்ற பெருந்தலைவர் காமராசரின் தங்கை பேத்தியின் திருமணத்தை நடத்தி வைப்பதில் பெருமை அடைகிறேன்'' என்று கூறியுள்ளார்.[1]

மனிதநேயம் என்று கொண்டு அவர் செயல்பட்ட விதங்களை நினைவில் கொண்டு நாமும் அவ்வாறு செயல்பட முயல்வதே அவருக்கு நாம் செலுத்தும் மெய்யான அஞ்சலியாகும்.

---

1. மாலைமுரசு, 4-7-90, ப.6.

# பின்னிணைப்புகள்

## (1) காமராசரின் பொன்மொழிகள்*

**நாடு**

நாடு உயர்ந்தால் நாம் உயர்வோம்.

**பதவி**

பதவி என்பது யாருக்காவது சொந்தமானதா என்ன? தனி உடைமையா அது. கிடையவே கிடையாது.

**அரசு**

அரசு என்பது எல்லா மக்களுக்குமே பொதுவானது.

**தேர்தல்**

நமது ஜனநாயக முறையில் மிக முக்கியமான நிகழ்ச்சி.

**சுதந்திரம்**

கடையனுக்கும் கதிமோட்சம் கிடைக்கச் செய்வதே.

**பணம்**

ஏழையின் கையில்தான் பணப்புழக்கம் பெருகவேண்டும். அப்போதுதான் நாடு நல்லபடியாக இருக்கமுடியும்.

**ஆஸ்தி**

மழை இருக்கிறதே அது யாருக்குச் சொந்தம்? எல்லோருக்கும் தான். அப்படி இருக்க நிலம் மட்டும் சிலருக்கு இருப்பதேன்?

**பிரிவினை**

வேரோடு கிள்ளி எறிய முன்வரவேண்டும்.

**படிப்பு**

படித்த ஜாதி படிக்காத ஜாதி என்றொரு ஜாதி உண்டாகாமல் பார்த்துக்கொள்ள வேண்டும்.

**மருந்து**

மனமாற்றம் ஏற்படவேண்டும். அதுதான் நல்ல மருந்து.

**கலை**

சுலபமான இராகத்தில் பாட்டுகளை அமைத்துக் கொடுக்க வேண்டும். அவர்களுக்குத் (பாமரருக்கு) தெரிந்ததெல்லாம் ஒரே இராகம்தான்.

---

* பல்வேறு நூல்களிலிருந்து தொகுக்கப்பட்டவை.

**இதழ்கள்**

சமுதாயத்தில் குறைகள் இருந்துகொண்டுதான் இருக்கும். அவைகளுக்கு நல்ல தீர்வைக் காணவேண்டியது நமது கடமையாகும். அதில் அதிகமான பொறுப்பு பத்திரிகைகளுக்குத்தான் உண்டு.

**ஆசிரியர்**

தங்கள் குழந்தைகளைப் பள்ளிக்கு அனுப்பும் பெற்றோர் ஆசிரியர்களை நம்பித்தான் அனுப்புகிறார்கள்.

**சமுதாயம்**

நாட்டில் கவலையற்ற சமுதாயத்தை அமைக்கவேண்டும். அதை நம் வாழ்நாளிலேயே செய்துவிடவேண்டும் என்றுதான் ஆசை. அப்போது உணவு, வீடு, கல்விவசதி எதுவும் இல்லை என்ற புகாரே இருக்காது.

**கிராமங்கள்**

சுதந்திரத்திற்குப் பிறகு கிராமங்கள் புதுத் தோற்றம் அளிக்கின்றன. வளர்ச்சி இல்லை என்று யாரும் சொல்ல முடியாது. ஆனால் இந்த வளர்ச்சி போதாது.

**சமதர்மம்**

தாழ்த்தப்பட்டவர்கள், உயர்ந்தவர்கள் என்று சமுதாயத்தில் இருக்கக் கூடாது. அதனால்தான் 21வயது வந்த எல்லோருக்கும் ஓட்டுரிமை வழங்கப்பட்டுள்ளது.

**மாணவர்**

மாணவர்கள் அரசியலில் ஈடுபட வேண்டியதில்லை. அரசியல் தான் நாட்டிற்கு அஸ்திவாரம். அதைப் பற்றி மாணவர்கள் நன்கு தெரிந்து கொள்ள வேண்டும். அரசியலைப் பற்றிச் சிந்திக்காமல் இருப்பது ஆபத்து.

**திட்டம்**

திட்டம் மக்கள் திட்டமாக இருக்கவேண்டும். அத்துடன் மக்கள் ஒத்துழைப்பும் வேண்டும். மக்கள் ஒத்துழைப்பு இல்லாமல் எந்த திட்டமும் வெற்றிபெற முடியாது.

**தொண்டு**

சுதந்திரம் வந்தால் நாட்டின் மக்கள் நிலை உயரும் என்பதை உணர்ந்தே சுதந்திர இயக்கத்தில் பலர் ஈடுபட்டனர். இதற்காகவே காந்திஜீயின் தலைமையில் பலர் ஜெயிலுக்கும் சென்றனர். மந்திரியாக வருவதற்கு ஜெயிலுக்குப்போகவில்லை.

**போராட்டம்**

தேர்தலுக்காகப் பெயருக்காகப் போராடும் போராட்டம் வேண்டாம். வாழ்க்கைப் போராட்டத்தைக் கவனிப்போம்.

**வீடு**

வசதியாக வீடு கட்டிக்கொள்ளுகிறவர்கள் தங்கள் வீட்டு வேலைக்காரருக்கும் வீடு கட்டித்தர வேண்டும் என்று சட்டம் போட்டே ஆகவேண்டும். இல்லாவிட்டால் சேரிப் பிரச்சினை தீராது.

**சாதி**

ஜாதி என்ற நோயை முளையிலேயே கிள்ளி எறியவேண்டும்.

**மொழி**

இந்திக் காரர்களைப் புரிந்து கொள்ள நாம் இந்தி கற்றுக் கொள்கிறோம். நம்மைப் பற்றித் தெரிந்து கொள்ள இந்திக் காரர்களும் தமிழ் கற்றுக் கொள்ளவேண்டும்.

**மகளிர்**

தாய்மார்கள் படித்துவிட்டால் நாட்டிலுள்ள தொந்தரவுகள் போய்விடும்.

## (2) காமராசர் பற்றி இதழாளர் கண்ணோட்டம்*

"இப்போதும் அவர் எப்போதும் இல்லா உயரத்தில் இருந்தார்"

- அந்தோணி லூகாஸ். ஜே. 'நியூயார்க் டைம்ஸ்'

நாட்டு ஊழியத்திற்கென்று காமராசர் தேர்ந்தெடுத்த விசை வண்டி காங்கிரஸ். இந்த நீண்ட நெடுங்காலமாய் அந்த இயந்திரத்துடன் இரண்டறக் கலந்துவிட்டார்.

- அப்பாஸ் கே.ஏ; 'பிலிட்ஸ்'

"பேசுவது ஒன்று செய்வது ஒன்று என்று இல்லாமல் பேச்சும் செயலும் ஒன்றாகப் பொருந்தியவர் தலைவர் காமராஜ்"

- அர்ஜுன் தேவ்; 'மிரர்'

"ஒரு முற்றிய நெல்மணியின் சத்துவத்தைப் பெற்றது அவரது அறிவு. தான் என்ற அகங்காரம் அவரிடம் தலைநீட்ட அஞ்சியது. காட்டாற்று வெள்ளமாய்ப் பாய்ந்ததுண்டு நாட்டு

---

* பத்திரிகையாளர் நெஞ்சில் காமராசர், முருகுதனுஷ்கோடி (தொ. ஆ) நூலிலிருந்து சுருக்கித் தொகுத்தது.

நலனுக்காக. ஆனால் கவினுறு தென்றலின் மென்மை அவரது அருளுள்ள தன்மைக்கு ஈடாகாது.''

- ஆனந்தன். ஜி. 'தென்னகம்'

''காமராஜ் நம்பகம் நிறைந்த நண்பர்; தலை சிறந்த தலைவர்''.

- கிரிஷ் மாதூர், 'நியுவேவ்'

''மக்களின் நாடி நரம்புகளை உணர்ந்தவர் என்பதே தலைவர் காமராஜிடம் காணப்படும் தனிச்சிறப்பு''.

- கிள்ளிவளவன், தி.ஜ. 'தமிழ்நாடு'

''ஒவ்வொரு கிராமத்திற்கும் மின்சாரமும் குடிநீரும் கிடைக்கச் செய்யவேண்டும் என்பதுதான் அவரது வாழ்க்கை விரதம் என்று சொல்லக் கேள்விப்பட்டிருக்கிறேன்''.

- குஞ்சப்பா சி.எச். 'மாத்ரு பூமி'

''தலைவர் காமராஜின் சிறப்புகளைப் பற்றி எத்தனை எழுதினாலும் முடிவு பெறாது. அத்தனைச் சிறப்புகள் கொண்ட அருந்தலைவரை வரலாற்றாலும் சரி வருங்காலத்தாலும் சரி உணரவும் முடியாது''.

- சங்கமேஸ்வரன் சி.எஸ்; 'நவசக்தி'

''காமராஜ் ஓர் அபூர்வ மனிதர் மட்டுமல்ல, அவர் ஓர் அதிசயப் பெட்டகம் என்று தெரிந்ததும் நம்மையும் அறியாமல் நமது சிரம் தாழ்கிறது''

- சடகோபன். டி. 'தினசரி'

''ஒரு சாதாரண மனிதனுக்கு இருக்கவேண்டிய ஆசாபாசங்கள் பொருளாசைப் பற்றுகள் அவரிடம் இருக்கவில்லை.''

- சின்ன அண்ணாமலை; ''சிவாஜி ரசிகன்''

''தெளிவான சிந்தனையும் திட்ட வட்டமான கருத்துகளும் காமராஜ் அவர்களின் தனிச் சிறப்பாகும். பிரச்சினைகளுக்கு அன்றாட காரிய சாத்தியமான பரிகாரங்களையே கூறுவார்''.

- சுப்பாராவ், 'சர்வோதயம்'

''விளம்பரத்தைத் துரத்திக்கொண்டு அலையும் அரசியல்வாதிகளிடையே விளம்பரம் தன்னைத் தேடிவந்தபோதும் அதனைத் துரத்தியடிக்கும் அரசியல்வாதியாக காமராஜ் வாழ்ந்தார்''.

- சோ, ''துக்ளக்''

"தேசப்பற்றா குடும்பப் பற்றா என்று கேட்டால், காமராஜ் தேசப்பற்றிற்குத்தான் முதலிடம் தந்தார்".

- தமிழ்வாணன், 'கல்கண்டு'

"மக்கள் தலைவர் என்ற முறையில் இயற்கையான அல்லது தற்செயலான சில சாதகங்களைக் காமராஜ் பெற்றிருந்தார்".

- நரசிம்மன், வி.கே. 'இந்தியன் எக்ஸ்பிரஸ்'

"அவரது ஒவ்வொரு அசைவும் தேச நலனுக்கென்றே இருந்தது. அவைகளை என்றும் மறக்க முடியாது".

- இராமசாமி பி. 'நாத்திகம்'

"என் நாவல்களில் 'ஆத்மாவின் இராகங்கள்' அவருக்கு மிகவும் பிடித்திருந்தது. அதன் மறைமுகமான கதாநாயகரே அவர்தான். அவரைச் சூழ்ந்து நின்ற அக்கால தேச பக்தர்களே ஆத்மாவின் இராகங்களில் வருகின்றனர்".

- பார்த்தசாரதி நா. 'தீபம்'

"மற்றவர்களின் பிரச்சினைகளை அவர் மறக்காமல் இருந்ததால்தான் மற்றவர்கள் அவரை மறக்க முடியவில்லை".

- பாலு. ஆர். "அலை ஓசை"

"பத்திரிகையாளர்களின் உதவியால் புகழைத் தேடிக் கொண்டவர் காமராஜ் அல்லர். பத்திரிகைப் பிரதிநிதிகள் அவரை நாடினர். அவர் நிருபர்களின் தயவையோ பத்திரிகையாளரின் உதவியையோ எதிர்பார்க்கும் நிலையில் தம்மை வைத்துக் கொள்ளவில்லை".

- பார்த்தசாரதி. எஸ். என். 'சுதேசமித்திரன்'

"அந்த மாபெரும் தலைவர் காலத்திலேயே வாழ்ந்த ஒரு பத்திரிகையாளன் என்பதே எனக்கு இருக்கிற மிகப்பெரிய பெருமை".

- சண்முகம், "மதிஒளி"

## 3. பெருந்தலைவர்க்குப் பிற தலைவர் பாராட்டு*

"அவர் பாமர மக்களின் மாமனிதர்"

- அன்னை இந்திரா

"இன்றைய ஜனநாயகம் அவராலேயே வாழ்கிறது"

- ராஜீவ் காந்தி

"ஓர் அபூர்வ மனிதர்"

- ஷேக் அப்துல்லா
ஜம்மு-காஷ்மீர் முதல்வர் (முன்னாள்)

"ஒரு வெகு முக்கியமான மனிதர்"

- எஸ். பி. சவான்
மகாராஷ்டிர முதல்வர் (முன்னாள்)

"இந்திய மக்களின் குறிக்கோளை உருவாக்கியவர்"

சி. சுப்பிரமணியம்
மேதகு ஆளுநர்; மகாராஷ்டிரம்

"அவரை நன்கு அறிந்தவர்கள் அவரது எளிமை நேர்மையைக் கண்டு அவரிடம் மரியாதை செலுத்தினர்."

- மோகன்லால் சுகாடியா
கர்நாடக ஆளுநர் (முன்னாள்)

"ஒரு தீவிர தேசபக்தர் முதல்வரிசையில் இடம்பெறும் அரசியல்வாதி."

- சத்தியநாராயண சின்கா
மத்திய பிரதேச ஆளுநர் (முன்னாள்)

"அவரது தூய்மையான வாழ்க்கை ஐயப்பாட்டிற்கு அப்பாற்பட்டது."

- கே. கே. ஷா
தமிழ்நாடு ஆளுநர் (முன்னாள்)

"பொதுமக்கள் முழு நம்பிக்கையோடும் அன்போடும் போற்றிய தலைவர்."

- பி.வி. நரசிம்மராவ்
அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி செயலாளர் (முன்னாள்)

---

* சீனிவாசன் கே. என்; 'காமராஜர் காலத்தில் சென்னை மாநகராட்சி'

''முன்னேற்ற கருத்துக்களையுடையவர். ஆகவே மக்களின் மனதில் எப்போதும் இடம் பெற்றிருப்பவர்.

- ஆர்.கே. கடில்கர்
மைய அரசு அமைச்சர் (முன்னாள்)

''உண்மையான காந்தியவாதியாக வாழ்ந்தவர்''

- கரன்சிங்
மைய சுகாதார அமைச்சர் (முன்னாள்)

''ஒரு சக்தி வாய்ந்த தலைவர்''

- பிரம்மானந்த ரெட்டி
மத்திய அரசு உள்துறை அமைச்சர் (முன்னாள்)

''தியாகச்சுடர், தமிழ் மக்களின் நெஞ்சில் நீங்காத இடம் பெற்றவர்.''

- டாக்டர் கலைஞர்
தமிழக முதல்வர் (முன்னாள்

## பயனாய நூல்கள்

அருண், 'உழைப்பே உயர்வு தரும்' அருணோதயம், சென்னை-14. I 1966.

அருண், 'புவனேசுவர் காங்கிரஸ்' அருணோதயம் சென்னை-14. 1964.

அவிநாசிலிங்கம், தி.சு. 'நான் கண்ட மகாத்மா' ஸ்ரீ இராமகிருஷ்ணா வித்யாலயம், கோவை-20, V 1978 —அரிஜன் (இதழ்)

இராமலிங்கம், கே. 'உயர்ந்த மனிதர்கள் உன்னத நிகழ்ச்சிகள்' நர்மதா பதிப்பகம். சென்னை-17.

ஆசிரிய மாலை-புறத்திரட்டு.

கல்வி வள்ளல் காமராசர் 12ஆம் ஆண்டு நினைவு மலர்.

கிரி பி.வி. 'பேட்டியில் பிறந்த கதைகள்' பூங்கொடிப் பதிப்பகம், சென்னை-4; டிசம்பர் 1986.

குமரி அனந்தனின் கேள்வி பதில்கள்; சங்கு பதிப்பகம்; சென்னை

குறுந்தொகை.

சண்முகம் ஏ, 'நம் விடுதலை வீரர்களின் வரலாறு' மாருதி பிரஸ், சென்னை-1989.

சண்முகம் இரா. 'கர்மவீரர் காமராஜர் வாழ்க்கை வரலாறு' கிருஷ்ணா அச்சகம்; நாகர்கோவில் 1. I 1985.

சந்தான லட்சுமி; 'நாட்டுக்குழைத்த நல்லவர்' பழனியப்பா பிரதர்ஸ்; சென்னை. 13. III 1984.

சாவி; 'சிவகாமியின் செல்வன்' மங்கள நூலகம். சென்னை; 1980.

சாவி; 'பழைய கணக்கு' வானதி பதிப்பகம், சென்னை-17. I ஜுலை 1984.

சாமிநாதன் எ., 'தென்னிந்திய வரலாறு' தீபா வெளியீடு சென்னை-28.

சிலப்பதிகாரம்.

சின்ன அண்ணாமலை; 'சொன்னால் நம்பமாட்டீர்கள்', வானதி பதிப்பகம் சென்னை-17 ஜுலை 1987.

சிலம்பொலி செல்லப்பன்; இலக்கியச் சிந்தனைகள் அருணோதயம், சென்னை, 1980.

சீனிவாசன்; 'சுதேசியின் வெற்றி' நரேந்திரா பிரிண்டர்ஸ் சென்னை-17 1988.

சீனிவாசன் கெ.என். 'காமராசர் காலத்தில் சென்னை மாநகராட்சி' அருள்வேல் அச்சகம் சென்னை-14.

சுந்தரவடிவேலு நெ.து. 'கல்வி வள்ளல் காமராசர்' பெர்ல் வெளியீடு, சென்னை-2; 1982.

சுந்தரவடிவேலு நெ.து., 'நினைவில் நிற்பவர்கள்' வானதி, பதிப்பகம், சென்னை 17, 1982.

சுந்தரம்பிள்ளை, மனோன்மணீயம்

சோமயாஜுலு; 'நெல்லை மாவட்ட சுதந்திரப் போராட்ட வரலாறு' நெல்லை II 1977.

சவுந்திரபாண்டியன் (தொ. ஆ) 'மறக்க முடியாத மாபெருந் தலைவர்' (பேட்டிகளின் தொகுப்பு நூல்)

திருக்குறள்.

திலீபன் : '100 ஆண்டு காங்கிரஸ்' தென்றல் அச்சகம் டிசம்பர் 1984.

திரவியம் க., 'தேசியம் வளர்த்த தமிழ்' பூம்புகார் பிரசுரம் சென்னை 2; III 1982.

தியாகராசன் இரா. 'மறக்க முடியாத மாபெரும் மனிதர்' சாந்தா பதிப்பகம், சென்னை-14, 1986.

பட்டினப்பாலை

பார்த்தசாரதி ஆர். டி. 'தமிழ்நாடு தந்த தலைவர்' வானதி பதிப்பகம், சென்னை-17, II ஆகஸ்டு 1985.

பார்த்தசாரதி ஆர்.டி., காங்கிரசும் சுயராஜ்யமும், வானதி I ஜுலை 1985.

நமசிவாயம் மு., 'காமராசர் வரலாறு' சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகம், சென்னை 18. ஜுலை 1987.

நமசிவாயம் மு., 'மக்களாட்சி காமராஜ்' பழனியப்பா பிரதர்ஸ். சென்னை-5 மார்ச் 1964.

நாகசண்முகம் : 'பதினைந்து தலைவர்கள் வரலாறு' வானதி பதிப்பகம் IV 1986.

நாராயணசாமி டி.ஆர். 'இதோ காமராஜ் இருக்கிறார்'' கங்கை புத்தகாலயம், சென்னை-17 I 1988.

முருகு தனுஷ்கோடி, 'பத்திரிகையாளர் நெஞ்சில் காமராஜ்' குகாபிரசுரம்; காமராஜ்பவன்; சென்னை-4.

இராசம்மாள் தேவதாசன்; (முதன்மை ஆசிரியர்) விஞ்ஞானச் சுடர் (திங்கள் இதழ்) கோவை 641043.

ராஜாஜி; 'வேதாரண்யம் உப்பு சத்தியாகிரகச் சரித்திரம்' கஸ்தூரிபா காந்தி கன்யா குருகுலம்; வேதாரண்யம் II 1978.

வரதராசன் மு. 'நாட்டுப்பற்று' பாரி நிலையம் சென்னை-1 III 1981.

INDIAN EXPRESS 27-5-90.

Mathai M.O., 'Reminiscences of the Nehru age', Vikas Publication, DelhiIII 1978.

Ram Mulhi P. The Freedom struggle and the Dravidian Movement. Orient Longmans Ltd., I 1980.

# சிறப்புச் சொல்லகராதி



## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

### அறக்கட்டளைச் சொற்பொழிவு வெளியீடுகள்

| நூல் | விலை |
|---|---|
| இஸ்லாம் வளர்த்த தமிழ் | 15 00 |
| தமிழரின் தாயகம் | 10 00 |
| உ. வே. சா. சங்க இலக்கியப் பதிப்புகள் | 10 00 |
| இனிக்கும் இராசநாயகம் | 30 00 |
| பாவாணரும் தனித் தமிழும் | 12 00 |
| தேவநேயப் பாவாணரின் சொல்லாய்வுகள் | 10 00 |
| டாக்டர் உ. வே. சா. காப்பியப் பதிப்புகள் | 10 00 |
| விவிலியம் திருக்குறள் சைவ சித்தாந்தம்- ஓர் ஒப்பாய்வு | 20 00 |
| அகலமும் ஆழமும் | 12 00 |
| செக்கிழுத்த செம்மல் சிதம்பரனார் | 15 00 |
| உ. வே. சா. இலக்கணப் பதிப்புகள் | 11 00 |
| மகாமதிப் பாவலர் உலக முதன்மொழி தமிழ் | 12 00 |
| மறைமலையடிகளார் தனித்தமிழ்க் கொள்கை | 15 00 |
| தமிழ் தந்த வ. உ. சி. | 15 00 |
| உ. வே. சா. ஒரு தமிழ் வாழ்வு | 15 00 |
| வண்ணக் களஞ்சியப் புலவரின் குத்பு நாயகம் ஆய்வுரை | 15 00 |
| மு வ. புதினங்களில் தமிழ் - தமிழினம் | 20 00 |
| பாவாணர் ஆய்வு நெறி | 25 00 |
| கிறித்தவமும் தமிழகமும் | 15 00 |
| நாமக்கல் கவிஞர் கவிதைகள் - தேசியம், காந்தியம் | 16 00 |
| தமிழில் அறிவியல் - அன்றும் இன்றும் | 25 00 |
| இதழாளர் ஆதித்தனார் | 26 00 |